உரிமை பதிவு
ஆங்கீரச ஆவணி
திருவள்ளுவராண்டு 2023
1992 ஆவணி

ஆறு பகுதிகள் கொண்ட ஒரு
தொகுதியின் விலை.

இலங்கையில் : ரூபா 2100|-
இந்தியாவில் : ரூபா 900|-
பிறநாடுகளில் அமெரிக்க டாலர் 50|-

ஐந்தாம் பகுதி உருவாக அணி செய்தவர்:
திரு. திருமதி. கே. குகானந்தன் அவர்கள்,
இலண்டன்.

ஒளிஅச்சுக்கோப்பு, அச்சிடல்:

காந்தளகம், 4, முதல்மாடி, 834, அண்ணாசாலை,
சென்னை-600 002. தொலைபேசி: 834505, 8250050.



பாட்டு முதற் குறிப்பு அகராதி
பாட்டுடைக் கோவில் அகராதி
பாட்டுத் தலைப்பு அகராதி
ஆசிரியர் அகராதி
என்பன
ஆறாம் பகுதியில்
இறுதிப் பக்கங்களாக உள.
தொகுப்பின் பொருளடக்கம்
முழுமையும் எல்லாப் பகுதிகளிலும்
முன் பக்கங்களில் உள.

## நூலாக்கம்

**பதிப்பாசிரியர்:** சித்தாந்தச் செம்மல், சைவசித்தாந்த மாமணி **வித்துவான்** இரா. அம்பை சங்கரனார் ஆசிரியர், ''சித்தாந்தம்'' **சென்னை. நூல் தொகுப்பு சேகரிப்பில் உதவி, ஆலோசனை:** **க.** முத்துக்குமாரசுவாமி, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்; புலவர் வெ.சா. ஏகாம்பரம், புலியூர், சென்னை; சி.என். சிங்காரவேல், **சி.ஐ.டி.** நகர், சென்னை; ந. ஜெயராமன், மேற்கு மாம்பலம், சென்னை; க. சோமசுந்தரம் பிள்ளை, இந்திரா நகர், சென்னை; **சாது** தங்கவேல் சுவாமிகள், பாம்பன் சுவாமிகள் திருமடம்; புலவர் அ. வைத்தியநாதன், விழுப்புரம்; புலவர் கோ. கதிர்வேல் முதலியார், ஆரணி; புலவர் ந. தண்டபாணி, புதுவண்டிப்பாளையம்; சுப. ஆவுடையப்ப தேசிகர், அம்பாசமுத்திரம்; மு.சு. சங்கர், திருநெல்வேலி; பீக்கே குமாரசாமிக்கவுண்டர், வெள்ளக்கோவில்; புலவர் வி. அண்ணாமலை முதலியார், பங்களூர்; மயிலங்கூடலூர் க. நடராசன், யாழ்ப்பாணம்; க. சொக்கலிங்கம், நாயன்மார் கட்டு, யாழ்ப்பாணம்; க. சண்முகலிங்கம், சைவபரிபாலன சபை, யாழ்ப்பாணம்; முனைவர் நா. சுப்பிரமணியன், யாழ்ப்பாணம்; புலவர் த. கனகரத்தினம், வெள்ளவத்தை, கொழும்பு; க. கந்தசாமி, கொழும்புத் தமிழ்ச் சங்கம், கொழும்பு; மு. கணபதிப்பிள்ளை, மறவன்புலவு, சாவகச்சேரி; வீரகேசரி, கொழும்பு; ஐ. குலவீரசிங்கம், கோலாலம்பூர், மலேசியா; க. ஆறுமுகம், கோலாலம்பூர், மலேசியா; ஈ.வி. சிங்கன், சிரங்கூன் தெரு, சிங்கப்பூர்; ப. படையாட்சி, ரோஸ்கில், மொரிசியசு; பீக்கே நாயுடு, தென் இந்திய சன்மார்க்க ஐக்கிய சங்கம், நந்தி, பிஜி; ஐ.தி. சம்பந்தன், இலண்டன்; கே. எஸ். நடராசா, கனடா; முனைவர் ஆ. கந்தையா, சிட்னி, ஆஸ்திரேலியா. **நூலாக்கம், அகராதி, சுட்டி, குறிப்பு:** முனைவர் நா. சுப்பிரமணியன், முதுநிலை விரிவுரையாளர், யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம், யாழ்ப்பாணம். **நூலாக்கம், மெய்ப்பு, மேற்பார்வை:** புலவர் வெற்றியழகன், சென்னை. **ஒளிஅச்சுக்கோப்பு, கணிப்பொறிப் பணி:** க. இரவி, கோ. பார்த்தசாரதி, க. சாந்தி, ம. இராசப்பா, மூவை ந. சுந்தரராசன், அ. ஜெயராஜசிங்கம், சென்னை. **பக்கமாக்கல்:** ஓவியர்கள் சந்திரஹாசன், பூவரசு, சென்னை. **படச்சுருள் எதிர்மறை:** சக்தி வண்ண ஆய்வகம், சென்னை. **அச்சிடல், கட்டுவேலை:** ஸ்ரீ பாலாஜி கிளாசிக்ஸ், சென்னை. தங்க அச்சு, விநாயகா டைஸ்டாம்பு, சென்னை. **அலுவலக உதவி:** செ. மணிமேகலை, அ. ஜெயராஜ சிங்கம், செ.ரா. ஷோபனா, அ. ஸ்ரீனிவாசன், பெ. ஜெகநாதன், சென்னை. **நிதிக்கட்டுப்பாடு:** தெ. அருணாசலம், சென்னை. **பொதுத்தொடர்பு: இணைப்பு, மேற்பார்வை** தெ. ஈஸ்வரன், கொழும்பு. **தயாரிப்பு:** க. சச்சிதானந்தன், மறவன்புலவு, சாவகச்சேரி.

# பொருளடக்கம்

## இரண்டாம் பகுதி



## மூன்றாம் பகுதி



## நான்காம் பகுதி



## ஐந்தாம் பகுதி



## ஆறாம் பகுதி

உ

# கதிரகாமப் பிள்ளைத்தமிழ்

## சிவங் கருணாலய பாண்டியப் புலவர்

### செய்யுட் காப்பு

## திருமூத்தநாயனார் காப்பு

**அறுசீர்க்கழி நெடிலடி யிரட்டை யாசிரிய விருத்தம்**

**(கலிப்பா)**

பூமேவு சிவசெஞ்சு டர்த்தவழு மிளவெயில்பொ
ரப்பிணிமு றுக்குடைந்து
புள்ளார வாரிப்ப நெகுமுளரி யம்போது
புய்த்தொரும ருப்பின்மூக்கி
னேமார மோப்பமுற் றெம்முயிர்க் குளனணையி
கப்பநனி திரைபுடைபெயர்ந்
திழுமெனவ ருட்கடாங் கலுழிசுர வாநிற்ப
வீர்ம்பரிவு நீர்குடைவுழி

மாமால்வி டைக்களிறு பிடிமாலு மழமுதுவ
யக்குறுந டைக்குழவிவான்
மதிமுடிக் கவினவோ மோமெனப் பெயர்கூயின்
மன்றவோ மோமென்றுவந்தி
யாமீயு மிருவினைக் கவளமுண் டுலவுதன்
யாணரடி மாணநினைதும்
யாபன்னி ரண்டுகைக் கதிர்காம மான்புணரும்
யானையின் றமிழ்பொலியவே.

### பிள்ளைக்காப்பு

## திருமால் முதலிய முக்கடவுளர் காப்பு

**எண்சீர்க்கழி நெடிலடி யீரிரட்டை யாசிரியவிருத்தம்**

மணிதிருவ மறுவியன் மார்பமதி னவிர்வர
மணமுடைய கோதையும் வைப்புண லொளிர்தலின்
மடமையணி கலமணி நிலமகள்பொ றாமையான்
வருமொர்துனி புலவியின் மடிதிரை யுடையிடை



வரையவிழு கிடையினண் மழமழென வொழுகுகண்
மழைவெருவி யொருதுடை மடிமிசை மலைமுலை
மருவுபொழு தடுபடை வறுவியகை நால்கினான்
மறையிளவ லடிதொடு மாணவ வடிகளை

யணியிதழி வளர்பொலங் காவின்மறை பின்னையை
யறிதலினை யொழிதர வாவென வெருவர
வரவுறினு மொருமுறை யானுமனை யறமக
ளஃதறிய வரின்வரு மோவென வயிர்வுற
வறிதுயில்கொ ளறிஞர்தந் நுதனடுவ ணிணை விழி
யடைசியென வடைசியெம் மாளுடை யொருகுயி
லவவுமொரு பாலினிற் கட்கடைசெலக்கருத்
தமர்களவு கற்புநூ லாசிரிய ரியவுளைத்

துணியவலர் மறைபுண ராரியமென் மாதராள்
தொடர்பறுவ ளிதுவுமோ? தொன்னிறை யிலளிறை
தொடுகிழமை யுருகலள் கடியகுரல் வாயினள்
சொலன்மிகுந ளவடுணைத் தோள்புணை தழுவலன்
றுனியலென வீரடிப் பாற்குறளை மொழிபுநாற்
றுவரிதழின் வாய்நறாச் சோர்தரத் தமிழ்மொழித்
துணைவியின றம்பொருள் வழுவுதலில் காதலின்
சுவைநிறையு மின்பமார் தோணுகர் கடவுளைத்

தணியுமணை மனனுழை வாழுமவர் மாஞ்சினைய
தளிரடியில் வைகறைத் தாழ்துமெந் தலைகொடு
தகையினின ணங்குமின் கொடியிடையர் புட்கடி
தழலொழிய வெறிகவண் டழனிகர் குருமணி
தலைமைபுனை யிமையவர் கையுறையொ டும்பராய்த்
தழையவரு ளிழிதல்போற் றாழ்கதிர் மலைவருந்
தமியமிட ராரிரு ளிரியமிளிர் குமரவே
டனையினிது காத்தருட் சார்பினைப் பெறுகவே. 1

### ஏனைக்கடவுளர் பலர் காப்பு

**அறுசீர்க்கழி நெடிலடி யிரட்டை யாசிரியவிருத்தம்**

பான்னியம் புதியபுனல் கொள்கலங் குப்புறிய
பொள்ளெனக் குறுகுபறவை

பூம்புகார்ப் பொருநற்கொர் செண்டுகொடை
பூண்டுலாப்
புறமுய்த்த காரிவள்ளல்
உன்னிவண் மறைஞாளி யூர்காடு காள்புதல்வ
னும்பர்வேள் விக்கணுணவெள்
ளும்பலூர்ந் திழிதண்பு ணைக்கிழவன் மாவின்மா
னுழையினாத் தூணங்கையாள்

மன்னிவாழ் கலைஞரடி மன்னர்முடி தாழ்ப்பிக்கும்
வாய்மைநாக் கொம்பர் மகடூஉ
மடிகொண்டு மிடியாது வருவிருந் தோம்புமவர்
மலர்முகனின் வாழ்திருமகள்
கன்னிமா ரெழுவர்முப் பான்மூவ ரிவர்தமைக்
கருதிவழி பாடுசெய்வாம்
கதிரைக்கு றத்திமாப் பிள்ளையைக் காக்கெனக்
காலைதொறு மாலைதொறுமே. 2

## முழுமுதற்கடவுள் காப்பு

### வேறு

பாண்டியர்வ ளர்த்தமுக் கழகத்த மிழ்த்தொண்டு
படுசுவைப் பொதியிலடிகள்
பண்ணன்முத லாயுமீ ரெண்டொழிலு முய்த்தொரேழ்
பாலையாழ் கொளுவி நோன்பு
வேண்டியது றக்கமன் செல்விபா லரமகளிர்
வேள்புலமை யருள்வனப்பு
விறலென்றி வற்றைப்பு னைந்துசெப் பியதிறமி
சைந்திசைக் கும்மிசைநயந்

தீண்டியபல் கறையடிக் குழுமெய்ம்ம றந்திளக
வின்றுறுக லென்றுமுழவைமா
னியையத்து யின்றுடல மூரிவிடு கதிர்காம
வேந்தற்பு ரந்தருளுக
வூண்டிகழு முப்பான்மை யுயிர்தொறருள் வெளியிலின்
பொளிர்திருக் கூத்து நவிலு
மொன்றிரண் டாயுயிரொ டுலகுமாய் வேறுமா
யுடனுமா முண்மைமுதலே. 3



## செங்கீரையாடல்

### அறுசீர்க்கழி நெடிலடி யிரட்டை யாசிரியவிருத்தம்

மலையிறையன் வனைபாவை யிணைகணைக் கான்மூட்டு
வார்ந்திருந் திடை நுடங்க
வள்யாமை முதுகுபுரை புறவடிய கவடுகொள
வாய்ப்பக்கி டப்பியருகே
மருவுதன் றாய்மணிக் கலனினிள வெந்நீரை
வார்ப்பவார்ப் பப்பைப்பய
மழமகவு யிர்ப்பெறிய நுதன்மீய கங்கைவிரல்
வைத்துவழி நீர்தகைந்து

விலைவிஞ்சு பசுமஞ்சள் விழுதினைத் தைவந்து
மீண்மீள மண்ணிமொக்குள்
வீழ்சுழிக் கொப்பூழி னூதியிமை மிகவூதி
மெய்ச்செவியி னறலகற்றி
விழிமுனையை யுகிர்நுனியின் விரியப்பி ளந்துமுலை
மேலாடு துகிலாடையான்
மென்மெலென வுடலொற்றி யீரஞ்சு வற்றிநுதல்
வெண்பொடிக் காப்பிட்டுவிம்

முலையிறுகு வார்நெகிழ வாய்மடுத் தமுதூட்டி
முகமிணைய முத்தமிட்டு
முன்கையிற் பாராட்டி வாழ்ந்தமைந் துச்சியினை
மோந்துபள் ளிப்படுப்ப
முதுகுகுனி கடுவனொடு மந்திபார்ப் பைக்கொஞ்சு
முதுகதிரை யந்தாள்வரை
முட்குடமு ழாப்பலவி னிழலிளஞ் சேய்துகண்
முகிழ்விரல் வாய்புகுப்பச்

சிலைமுகிலி னவ்விவுச் சுட்டுவிர லுய்ப்பவரு
சிறுதூசி வீசிவெகுளுஞ்
செவ்விவயி றுங்குழிய வாய்கூம்ப வழுமெழில்
சிவனோடு நுகரவளர்நிற்
சிவனுமக வைப்பொறையு யிர்த்துயத் தொழுவரிவர்
செங்கீரை யாடியருளே
திருவுயர்ப டைத்தலைவ! கவுணியர்கு டிப்புலவ!
செங்கீரை யாடியருளே. 4

வேறு

தாழைப் பழமுதி ரச்சிதர் வாழைத்
தாறுவ முக்கு நெறி
தள்ளவண் முத்துச் சூலுளை வால்வளை
தட்டுக் கான்றுகலுந்
தணிமாங் கனிதலை யிடறிநி மிர்ப்பச்
சாறிதழ் வாய்வடியுந்
தண்பொழி லோவப் பைம்மணி மனைதுவர்
சான்மணி சுடரெறியும்

மாழைத் தெருநேர் யாற்றுக் கதிர்கா
மக்கிழ வா! மழவா!
வளவிய வயல்சூழ் வங்கக் கலிங்க
மன்னன் றவமகளார்
மாண்புநி றுப்பச் சிங்கள வேந்தனை
வன்சிறை செய்ம்மறவா
வடமன் பன்னீர் யாண்டுந் துயிலான்
வழிபட வருகுறவா!

பீழைப் படுபிணி தீர்க்கும ருந்தே!
பெருமித வின்சுவையே!
பேணிய வடியவர் ஞானப் பேரழல்
பெற்றுரு கும்பொன்னே!
பிணிமுக வேழவு லாப்போ தருயாழ்
பிறவா வின்னிசையே!
பெரியார் கதிர்மலை வருவாருணநெய்
பெய்வெள் ளவிழ்முறுவற்

சீழைப் புட்புன் பிறவிப் பகைமைச்
சிறுநகை முகிழ்முகிழச்
செங்கைநி லத்தின முத்திமு ழுந்தாள்
செவ்வன்ம டித்தொன்று
சீர்ப்பநி மிர்த்துத் திருமுக மசையச்
செங்கோ செங்கீரை
திருவின் றிருமகள் வள்ளிம ணாளா!'
செங்கோ செங்கீரை. 5



அறுசீர்க்கழி நெடிலடி யிரட்டை யாசிரியவிருத்தம்

எளியாரை யுணர்தற்கு மவ்வவர்க் குதவற்கு
மெட்டுப்பத் துச்சாலுமோ
வென்றுபனி ரண்டுநீள் கைவிழிப டைத்துடைமை
யெத்துணைக் கடவுளரினு
மளியானு மொப்புயர்வி லாயாத லுணரவரு
மைதுசான் றென்பவாலோ
வல்லாத பிறர்போல்வி னைத்தொடர்பி லாய்நினக்
கழிவில்கவி னிளமையொக்கும்
விளியாத விருண்மைநிற் றொடுதல்வற் றன்றாதல்
வேலேகு றித்துரைக்கும்
வேறுமீ ரியல்பிரும டந்தைமார் கூங்கோழி
மீளிமயின் மறையருளிது
தெளியாத வேழையர்வி லங்கல்ல ரோவைய!
செங்கீரை யாடியருளே
தேனருவி யுவகைவிழி நீரூறு கதிர்மலைச்
செங்கீரை யாடியருளே. 6

## மொழிபயிலல்

அறுசீர்க்கழி நெடிலடி யீரிரட்டை யாசிரிய விருத்தம்

இகலுமிணை யங்கயற் கண்ணிமக வாய்த்தமிழி
யன்றுபயி லஞ்ஞைசெம்மால்!
எம்மனோர் குடியாள வந்துமக வாய்க்கூத்தி
யற்றின்ப மார்வெள்ளமே!
தொகனனவு கனவுதுயின் மீத்துயின் மீமிசைத்
துயிலிருண்மை மருண்மைதூய்மை
தொடராது பேசாது வாளாதி ருந்தநீ
தோன்றுவெண் குன்றினங்கட்
பகலிரவு மாறப்ப சுந்தபச் சைக்குமறு
பாலின்வெள் ளைக்குநடுவட்
படர்செக்கர் வானன்ன செம்மையே யன்றவர்ப்
பகர்மொழிப கர்ந்தவாற்றை

யகலிடத் தடியேம வாயிரப் பேங்கதிரை
யண்ணலே வாய்மலர்கவே
வம்ம! வப்பாவென்னு மருமறைப் பாயிரம்
கத்தலர வாய்மலர்கவே. 7

**வேறு**

குறிய மதத்த ரறமெம்பாற்
கூறக் கேட்ட செவிப்புண்ணுங்
கொடாதா ரிரப்போர்க் கடிந்துரைத்த
கொடுஞ்சொற் கேட்டசெவிப்புண்ணுஞ்

சிறிய குடியிற் பிறந்தபழிச்
செல்வர் வறிய புலவர்தமைச்
செருக்கி யிழிப்பக் கேட்டிருந்த
தீயூழ் படைத்த செவிப்புண்ணும்

நறிய வமிழ்திற் றமிழ்கேடு
நண்ணப் புறஞ்சொல் வழக்காறு
நாளுங் கலந்து வரல்கேட்டு
நனிசீ வடியுஞ் செவிப்புண்ணு

மறிய வொழியக் கதிரமலை
யழகே! யமிழ்தம் பொழிகவே
யம்மா! வப்பா! வென்னுஞ்சொல்
லமிழ்தம் பொழிக பொழிகவே. 8

**வேறு**

மலரவ னான்மறை யோதக் கல்லான்
மரநிழ லமிர்தென்னன்
வாய்மையை நால்வர்க் கோதவு ரைக்கும்
மன்பே ராசிரிய!

புலரியி னிமையோர் தொழுகதிர் காமா!
புகலுரை நிற்குரையேம்
பொலிசுவை யொழுகுதல் பருகிய கேட்பேம்
புகழு மைப்பிள்ளா

யுலகினி லேனைய வுயிர்மெய் யுயிர்ப்ப
வுர்லிடை யாப்புண்டோ



னூதுங் குழலிசை யாழிசை கைப்ப
வுலர்மர முங்குழைய

வலரன செந்நா வரசைய ழைத்தா
யஃதெங் ஙனமருளே
யண்பே யார்தமை நுந்தைய ழைத்தா
னஃதெங் ஙனமருளே. 9

**உணவூட்டல்**

**வேறு**

ஏறூரு மவனினிது கோதாட்ட வருமெங்க
ளேறே! முழைக்குள்யாளி
யினியநின் னடைகண்டு வெள்கியுளை யக்கதிரை
யேர்வடவை யாற்றின்றுறை

தோறும்விளை யாட்டயர்ந் தாங்காங்கு நீராடு
தொண்டர்க்க டைக்கணிக்குஞ்
சோனையருண் மாரியே! தித்தித்த தேம்பாகு
தோய்ந்தகட் டிக்கரும்பே!

கீறுமுலை யமுதூறல் பருகுகோ மானின்று
கிளர்கொங்கை யொப்பாகுபொற்
கிண்ணத்து நறுமணஞ் சிவமணம் போன்மன்பு
கெழுநெய்ய ளாய்ச்சமைத்த

சோறமுது மாயர்தயிர் தொட்டுண்ட கள்வன்மகிழ்
சூழ்மருக! வுண்டருள்கவே
சொற்றொழும் பாளரது ளங்கவர்ந் துண்டல்போற்
சோ்றமுது முண்டருள்கவே. 10

**வேறு**

ஆழி கடைந்து குடம்நிறைத்த
வமுது மிதற்கு நிகரல்ல
வந்தண் வேள்வி யவிசொரியு
மதுவு மிதற்கு நிகரல்ல

வாழி திருந்து செந்தமிழின்
வழக்கு மிதற்கு நிகரல்ல
வள்ளி யூடிக் குழைந்துசொலும்
வழக்கே யிதற்கு நிகராகும்

காழி ஞானப் பால்குழைத்த
கலையு மிதற்கு நிகராகும்
கதிர காமத் தன்பர்பலர்
கனிவுங் குழைத்த திதுவாகும்

கோழி கூவுங் கொடியசைக்குங்
கோவே சிறிதே யுண்டருளே
குறித்த வருண்மெய் கொழுத்துயரக்
கோவே சிறிதே யுண்டருளே. 11

**வேறு**

ஆடுமி ருட்டிர ளயரப் பெரியோ
னாடியி ளைப்பதுபோ
லாரிய முனிவர ருந்தக், கண்ணன
ருந்திய முறையேபோற்

காடுக றங்கக் கதிர்மலை கூவக்
கன்னியர் கூவுதல்போற்
கதிர்வடி வேன்முருகா! வரு ளாகிய
கழிபசி மீதூர்வாய்

கூடுவி னைத்துப் பாருயி ராரக்
குற்றடி யார்நினது
கொண்டா டுங்குண னாரப் பயிருங்
கொண்டன் மழையார

வாடுத மிழ்ப்புல வோர்வயி றார
வாய்ச்சோ றார்குகவே
வள்ளித ருந்தேந் தினைமா வெனவே
வாய்ச்சோ றார்குகவே. 12

**தாலாட்டல்**

**வேறு**

நீரின் முளைத்த மாவீழ
நெருப்பின் முளைத்தின் னருடழைத்து
நினைவு பூத்துப் புலங்காய்த்து
நிறையப் பழுத்த கற்பகமே



நேருன் னடித்த ணிழலன்றி
நிற்பார் வெப்பந் தணிவாரோ!
நெடுநாள் வானோர் வாழ்வாரோ?
நீதா னாரோ? யாமாரோ?

வோரின் னெனச்சொல் வடித்துணர்வா
ருலவாப் பெருமை யாராரோ?
வுணர்வார் கூற்றங் கொள்ளுங்கா
லுற்றார் பெற்றா ராராரோ?

காரின் மலருங் கதிர்காமக்
கடம்பா! தாலோ தாலேலோ
கலைமான் பாடக் கண்வளராய்
கனியே! தாலோ தாலேலோ. 13

**வேறு**

சேரன் சோழன் பாண்டியன்முச்
சீர்மைத் தமிழக முடிமன்னர்
செங்கோற் கொற்றஞ் செலவரிசை
சிறந்த கட்டிலி லமர்ந்தஞான்

றீரந் தோய்ந்த நெஞ்சம்போ
லிழைத்த கோட்டமெ ழுந்தருள்பே
ரின்பம ணித்திரு வருண்மேனி
யிற்றைக் கெவனோ மறையமறச்

சூரன் கோட்டை சிதையவெழுந்
தோன்றாப் பிழம்பு வெளிநிற்பத்
தொல்குடி மரபின் றலையளிபோற்
றோன்ற வொழுகிம ணிக்கங்கை

வாரங் கொண்டும ணிப்பூத்தூய்
வாழ்த்துங் கழலோய் தாலேலோ
வந்தெந் தொழும்பு கொள்காம
மணியே தாலோ தாலேலோ. 14

**வேறு**

உணர்நின் றந்தைகொ டாதொழிந்த
வொருமாம் பழத்திற் கழுதாயோ?

வுயிர்கள் பிறந்து படும்பாட்டிற்
குருகிப் பொருமி யழுதாயோ?

புணருங் காழிப் பெருந்தகைதான்
புடைத்தான் கொல்லோ வேனழுதாய்?
புலவர் மகளிர் கவுட்கிள்ளப்
பொறாதோ? பின்னை யேனழுதாய்?

வணர்மென் குழலி முலைச்சாய்ந்து
மார்பம் பாய லாச்செங்கண்
வளர்வாய் தவத்த ரெய்த்தலச
வாரா யன்பர்கசிந்துமலர்

கொணருங் கதிர மலைவந்த
குழகா! தாலோ தாலேலோ
கொடும்போ ரசைவு தவிர்துயிலைக்
கொள்ளாய் தாலோ தாலேலோ. 15

## சப்பாணி கொட்டல்

### வேறு

பொய்யாமொ ழிக்குவழு வுண்டென்ற முட்டைப்பு
கழ்ச்சிவேட் டுவ! புலவனைப்
புகழ்புனைந் தினிதுபா டியநல்லி சைப்புலவ!
புலவராற் றுப்படைப்பாட்

டெய்யாத பூதத்தை யுயிருண்ட வேற்குரிசி
லிறையனார் களவியற்க
ணெள்ளரும் பொருள்காண வொண்ணுதற்
றலைவிபுண
ரின்குறிஞ் சித்தலைவநிற்

கையார வழிபடக் காதலர் காதலியர்
கையேந்து மிளநீரெனக்
கச்சின்முலை பற்றுங்க திர்க்காம வேளேக
ருக்கொண்டு நின்னைப்பெறத்

தையான திங்கட்ட வங்கிடந் தாட்கம்ம!
சப்பாணி கொட்டியருளே
தாரகன் சூரனிவர் சூழ்ச்சிநன் றென்றுநகு
சப்பாணி கொட்டியருளே. 16



### எண்சீர்க்கழி நெடிலடி யீரிரட்டை யாசிரியவிருத்தம்

நச்சர வும்புலியும் பச்சிலை நச்சியிட
நவையறு மாடலதின் சுவைநுகர் வித்துணர்வு
நல்குத லானும்வெளி புல்குத லானும்விழி
நாடுந் தண்டில்லங் காடுங் காமமதோ?

விச்சிய தின்றிவிளை விப்பவ னுந்நீயோ?
வென்றொளிர் பூமிசையே கன்றுவ திருவடியோ?
விட்புல வாணர்க்கு முட்புல னாகாத
வெளியோ? நின்னுடல மளியோ? நின்னியல்பே

யிச்செய னீதாமே யாயின வர்க்கன்றி
யாதுந் தெரியாதென் றோதும் மறைமுடிபே
யெம்மிரு கண்மணியே மன்னுயிர் தம்முயிரே
யிளஞா யிற்றினொளி யெனமா மயிலிவர்வோய்

துச்சிலி ருக்குமுயிர்ப் புக்கில ளிப்பலெனத்
தொட்டவ ளைக்கையாற் கொட்டுக சப்பாணி
சொற்பொரு ளல்லாத மெய்ப்பொருண் முனிவர்க்குச்
சுட்டிய பொற்கையாற் கொட்டுக சப்பாணி. 17

சேரியிற் கிளளைமொழி சூதினைவெ குண்டுநிமிர்
திருஞெமிரு மாமைமுலையாற்
றீப்பறப் பப்பொருத புண்கூர்த லிற்கலவி
செய்யிகலி டைந்தயருநீர்

செழுநொச்சி சூடியெயில் காத்தசூ ரினைவஞ்சி
திருமுடிவ னைந்துசென்று
திகழுழிஞை சூடிமுற் றித்தும்பை சூடிச்செ
ருச்செய்துயிர் பருகிவென்றி

யீரியற் றுணர்வாகை சூடிப்பு லால்கமழு
மெறிகாழ்க்க ரந்தை யிணர்வே
லெழிலுறக் கைக்கொள்ளு மள்ளரா மாறென்னை?
யிமையோரு முனிவோருமீண்

டிழிதரவு மீனோரு மேனுலகி னேறவுமி
யைந்தகண் ணேணியென்னு
மின்கதிர காமத்தி ருக்குன்ற வண்சார
லெங்கள்பெரு மானடிகளே!

வாரியிற் புனல்வற்று மூழிமுகின் மொள்ளுறும
 ணிக்கங்கை யாறுகுடையும்
வான்மகளிர் தம்மாகம் வெதுவெதென விஃதெவன்?
 மடவிர்! வெந் நீர்யாறுகொல்?

மதனைப்பொ டித்துநுத லழல்வந்த காளையிசை
 வைகனா ணீராடலின்
மாறியது கொன்? மொழிமி னெனநல்கி
 யவர்கொங்கை
வருடுமிள மென்கையிணையக்

கூரியற் குறுநகைவெண் முத்தந்து கிர்ப்பேழை
 கொட்டமர முங்கசிந்து
குழுமுதேன் கொட்டநும் மளிதுளும் பிப்புறங்
 கொட்டவிழி யிமைகொட்டயாம்

கொடுமையைக் களைகொட்ட வுமையுநாக் கொட்டநீர்
 கொட்டுதிர் சப்பாணியே
குன்றவர்ம கிழ்ந்துபூக் கொட்டிக்கை கொட்ட நீர்
 கொட்டுதிர் சப்பாணியே. 18

## முத்தந்தருதல்

### அறுசீர்க்கழி நெடிலடி யிரட்டை யாசிரிய விருத்தம்

முன்னையொரு பொழுதுதமி ழகமுடைய தாய்ப்பின்பு
 முனையாரி யர்க்குறையுளாய்
முனிவர்வேட் கும்வெண்ப னித்திரட் குவையநெடு
 மொழிவான ளாவுவெற்பி

னன்னையன் பென்னக்கு ளிர்ச்சிபெரு குந்நாண
 லஞ்சுனைப் பொய்கைபூப்ப
வாரன்மீன் றிதலைநகி லடையவுளெ முங்குறவ
 ணைப்பச்சொ ரிந்தமுத்தம்

பின்னையிம யக்கரும் பூங்கோதை யள்ளிப்பி
 றங்கன்முலை யூற்றெடுப்பப்
பெற்றானொ டுச்சிமோந் திதழ்வாய் நெரித்துணப்
 பெய்தவெழு கோடிமுத்தம்



இன்னயவ காமமணி யாற்றங்கரைக்கொழித்
 தின்றுமுத் தந்தருகவே
எம்பொருளு டம்பாவி யாவும்விற் பேம்வணிக!
 விந்தமுத் தந்தருகவே. 19

### வேறு

ஐயா றாறிரு ளாவியரு
 ளப்பா லெய்ப்பின் வைப்பேயோ!
வவ்விய மில்லாப் புலவர்குழீஇ
 யழகிது சாவுங் கெழுதகையோ?

செய்யா வியற்கைப் பொருளாக்கந்
 தேர்ந்த வுணர்வின் றெளிவேயோ?
தேனெய் கரும்பு பழமமிழ்தந்
 தீம்பால் குழைத்த திரள்பதமோ?

கையாக் குடிமை யளிதூய்மை
 கல்வி கற்பென் றிவையுடையாள்
கணவன் வாழ்வோ? வெல்புகழோ?
 கடவுட் செந்தமிழ் முப்பாலோ?

வையா! முருகா! நின்முத்த
 மன்பே! முத்தந் தருகவே
யருமைக் கதிர மலைவாழ்வே
 யம்மே! முத்தந் தருகவே. 20

### வேறு

வேய்முத்த மும்மஞ்சின் மின்முத்த மும்மிப்பி
 விண்முத்த முங்கொம்பியல்
விழைமுத்த மும்மாதர் கழைமுத்த மும்மீனின்
 விளைமுத்த மும்மேனவுந்

தேய்முத்த மெய்யறிஞர் தேடாத முத்தமுண்
 டீஞ்சுவையி லாமுத்தமோர்
திரியமா றும்முத்த முத்தமோ! கதிர்மலைத்
 திருநீறு பூத்த செந்தீத்

தூய்முத்த மீன்முத்த மே! குறுவெ யர்ப்புள்ளி
 சொரிமுத்த நெற்றி யினர்கண்

டுளிமுத்த முக்கமதி முகமுத்த முத்திநகு
தொகைமுத்த முண்டு கனியும்

வாய்முத்த மேமுத்த முலகெலாம் போதாத
வாழ்முத்த முண்ணவருளே
வானுமுயி ருங்கைத்து வேண்டேம்வெ றுத்தயாம்
வாழ்முத்த முண்ணவருளே. 21

**வருகை**

**வேறு**

கூட லமணர் கூட்டழித்த
குழந்தாய்! வருக வானவர்கோன்
குடுமி முடியை யுடைத்ததொடிக்
கோப்பாண் டியனே! வருகதுவர்க்

கோடல் புனைய வருக குலக்
கொழுந்தே! வருக பிசைந்துமுலை
குடிக்க வருக வொருமுத்தங்
கொடுக்க வருக பொழுதொழிந்த

தாடல் வருக நெய்யழிய
லாமோ? வருக சிறாரடிப்ப
ரரசே! வருக வழக்காட
லழகோ? வருக மாமன்மகள்

தேட வருக தெள்ளமுதே!
திருவே! வருக வருகவே
தெவிட்டா தொழுகுங் கதிர்காமத்
தேனே வருக வருகவே. 22

**வேறு**

நூலாத நூலாடை யூசியொடு குயிலாத
நொய்யசின் மெய்யுறையது
நோன்பிற்ற ழும்பிறின் னுள்ளுமுள மெனவாட
நுண்ணுதன்மு டிக்கொண்டையின்

மேலாய பூச்செண்டு கண்பிணித் தாடநில
மிசையறம் நடையாடவுண்



விழையாத விழுமியோர் வேணவாத் தளவாட
மெள்ளமெய் தள்ளாடவெண்

ணாலாய கைமுகன் பெருமிதமு மோடவிண்
ணாடர்சிறை நீங்கியோட
நாடோட நடுவூடு கடலசுரர் படையோட
நாயனைய மவலமோட

மாலாகி யாமழன் மெழுகினெக் கென்புருகி
மழையோட வேவருகவே
வளர்கதிர் வரைமுற்ற மமர்முருக! வெமர்சுற்றம்
வாழவின் னேவருகவே. 23

**வேறு**

குன்றந் தோறும் பன்றிபுனங்
கொன்று நொக்கக் குறவர் செலல்
குறித்துப் பகலிற் றினைகோழி
கொறிப்ப வுணக்கும் பாறைமிசைச்

சென்றங் கெறிந்த விளநிலவிற்
செங்கை பிணைந்து குரவைதழீஇச்
சிரித்துக் குலுங்கு மகளிரொடு
திரியுங் கதிர்கா மக்கள்வா!

வின்றஞ் சியும்யா மெடுப்பேமென்
றிருந்தா யேலஃ தெமக்கொல்லா
தேங்கி யழக்கை காலமுக்கி
யிஞ்சிச் சாறாட் டேந்தினவு

தின்றந் தோபாற் குடங்கொட்டிச்
சிந்து முலைகாண் வருகவே
சிங்கக் குருளை தவழ்வதுபோற்
செல்வா! வருக வருகவே. 24

**நிலாவழைத்தல்**

**அறுசீர்க்கழி நெடிலடி யீரிரட்டை யாசிரிய விருத்தம்**

வெங்கட் டேறற் றேட்கடுப்பின்
மீக்கூர் களியா னகையரும்ப

மீன்கண் மறுகச் செவ்வழியாழ்
வெறிப்பப் பணைத்துத் தருக்கிமத

வேளைச் சினந்து பணிகொள்ள
விரைசேர் குரும்பை வெளிவிம்ம
விரும்புங் களம ரேப்பகட்டை
வெடிசே லுழக்கி யுகைத்தோட்ட

வங்கட் கரும்பிற் களைகளையோ
டாண்மை யுளமும் பறிப்பார்கட்
கமர்சூற் கமுகஞ் செறிவேலிக்
கப்பா லிதணிற் கொடிச்சியர்க

ளருமா ணிக்கங் கிழங்குதினை
யளிகண் மொய்க்குங் கொம்பிற்றே
னார்வம் வழங்கி நறைக்குவளை
யார வாங்கிக் குழற்கணிந்து

தங்கட் குரிய பரண்காவல்
சாருஞ் சாரற் கதிரமலை
தனித்துக் காட்டு ணிலைநின்ற
தவத்தின் விளைவித் தமிழ்ப்பிள்ளை

தனது குவியா நீலமொடு
தனியே யலர்ந்த தாமரைகாண்
டடுக்கு மீக்கோள் வாய்வைத்துச்
சாய்ந்து மலர்ந்து சிரிக்கின்றான்

றிங்கட் செல்வா நினைக்கண்டு
திருக்கை யோச்சி விளிக்கின்றான்
றேடக் கிடையா னின்னும்மைச்
சிறப்பாற் சிறிது நின்னோடு

திருவிளை யாடல் செயப்போலுந்
திருவுள் ளக்கிடை வாநிலவே!
சிறுவன் றமப்பன் செய்ந்நன்றி
சிதையா தாட வாநிலவே! 25

**வேறு**

கீழ்பாலின் வேந்துகுடை பற்றமேல் பாற்கடவுள்
கிளர்கவரி வீசவடபாற்



கிழவன்மடி சுருள்கொடுப் பத்தென்ன வன்போற்றி
செய்யநா ரதமுனிவர்பேர்

யாழ்சால வின்சுவைப் பண்செய்ய வரைதொறும்
யாடுபாய் கதிர வெற்பின்
யாளியணை மீதுநா ளோலக்க மாயிருந்தி
யாண்டுமுள விருதினை யுயிர்

தாழ்வோடு தன்னாணை நெறிநிற்ப வுய்க்குமித்
தலைவனைச் சிறியனென்ற
தறுகணா டற்சூரு மலரோனு மாழுமிழி
தகவினைநி னைக்கநிலவே!

வாழ்வான கடலலவ னுறழவிண் டவழலவ!
வந்துவிளை யாடுவாயே
வடிவேல னடைகைபிழி சாறயில லாமினிது
வந்துவிளை யாடுவாயே. 26

**வேறு**

நாம்புக ழுருள்பூங் கடம்பினமர்
நம்பி யழகு குதலைகட்கு
நயமில் புல்லொடு கல்லுருகும்
நரைக்கூன் றிங்கா ணீயுருகாய்

நளிகார்க் கரந்து நகைக்கின்றாய்
நாணா தெங்கள் பறம்பினிமேல்
நணுகினி துக்கா ணெற்றுவனாம்
நம்பன் சடைமுடி புகல்புகலின்

வாம்பொரு சிம்புட் கழறுகைப்ப
மதியே பொன்றக் கெடாதுய்ந்தாய்
மதியா னாண்டு மிதிப்பனிவன்
மதலை துடுக்கன் குறும்பாளன்

வணக்கும் பொருப்பு வில்லியுரை
வாங்கா னவற்கு மாசிரியன்
வாவி நீந்து மன்னம்போல்
வனப்பிற் கேய்ந்த குணனில்லாய்

காம்புமயிற்பரி மேலழகன்
கானங் கோழி முட்டைகளிற்

கழனித் தாரா வடைகிடக்குங்
கதிர்கா மப்பிள்ளைப்பெருமாள்

கலைமுக மதிபோ லகவிருளைக்
கழிக்கு மாற்ற லின்மையினாற்
கவற்சி யுட்கிக் குறைகின்றாய்
கழறும் போது கறுக்கின்றாய்

தேம்பிய வாழிப் புள்ளன்னார்
தேக்க நிலவு கொப்புளித்துத்
திறம்பா மங்கு லியங்குமிது
செருக்கு வேண்டா கருநஞ்சு

சேர முழுதும் பரவாமுன்
றிரும்பி யீண்டு வாநிலவே!
திருக்கை தீண்டப் படினொழியத்
திருந்தா யாட வாநிலவே. 27

### சிறுபறை முழக்கல்

#### வேறு

ஈரெழுத் தீரிருசொன் முப்பொருளி னாற்பாவி
யைந்தமுச் செய்யுளணிக
ளிசைகூத் திவற்றையவ் வக்கலைஞர் கழகத்தெ
டுத்தகட் டுரைமுழக்க

விவ்வுனை மண்ணொடெரி நரிதின்னு முன்னீரி
ரண்டாவ துறுதி நிலைக
ளெய்துபாக் குயிர்வளியொ ருக்கிக்க திர்க்காம
மேகிவாய் வாளாவதிந்

தோரெழுத் தறிவுவெளி யுயர்வுள்ளி யுய்ம்மினென
வுறுவர்வாய்ப் பறைமுழக்க
வொல்லெனவி ரைக்குமரு விச்சாரல் வித்திவிளை
யுலர்தினையின் மடையெதிர்படைத்

துறுபுலித் துப்பினிமிர் கானவர்து ணங்கையொடு
மொண்டொண்ட கம்முழக்க
வூர்ப்பொதியி லிற்குனிப் போன்முழுத் தோன்மடியு
டுக்கைவன் பறைமுழக்கக்



கூரெழுத் தாணியென வன்சூரன் மார்பேடு
குறிகொளப் புகழெழுதுவேல்
கொண்டதிண் டிறல்பரவு மிமையோர்க ளடுவென்றி
கூறுவிட் பறைமுழக்கக்

குன்றுகுடை யாவெடுத் தானிரைபு ரந்தான்கு
றிப்பிற்செ லத்துரத்துங்
கோலக்கு ளிற்றாழ வேழ்துளையின் விரன்ஞெண்டு
கூடவேய்ங் குழன்முழக்கச்

சீரெழுத்துன்னியென விணைதோளுயர்த்தித்தி
ணுக்கெனச் சாய்த்திடக்கை
சேப்புறவி டுக்கிக்க ளித்துச்சி மிட்டிவரி
சிதர்துடிக் கைக்குணில்கொடு

திருமாமி நாணவும் மிருதாயர் காணவுஞ்
சிறுபறைமு ழக்கியாடாய்
தெந்தோம்நு மக்கினரு டந்தோமெ னப்படச்
சிறுபறைமு ழக்கியாடாய். 28

#### வேறு

பத்துமு டித்தலையின் கொத்துவி ழுத்தியவிற்
பற்றிய கையழகன் பத்துத் தேரன்மகன்
பண்டும கட்பரிசு கொண்டுகொ டுத்தவளம்
பாடுமி லங்கைமுகி லாடுபு கழ்க்காம்த்

தத்துமி றாற்குன்றிற் றுய்த்தர சாளுமெழிற்
றனியொரு மருமானே யினியொரு
பொருள்கேட்பேந்
தங்கியி ருக்குமிவ ரிந்திர ரிவர்பிரமர்
தண்டமி ழுன்பரிவர் கண்டுகொ ளைய! விவ

ரித்தனை பெயருமுயர் முத்திப் பேறுமிகழ்ந்
திவணுற் றனரஃதுஞ் சிவணற் றகுதித்தன்
றென்றுநி லப்பிறவி நன்றென் றெண்ணுவர்பே
ரின்பக் கடலாடி யன்பிற் றுளிசொட்டத்

தித்தவெ னக்கைச்சீர் செப்பவெ ழுந்தாடச்
சிவமத யானைவரச் சிறுபறை கொட்டுகவே

செந்தமிழ் நாடெல்லா முய்ந்ததெ னக்கொடிய
செருவிறல் பலரறியச் சிறுபறை கொட்டுகவே. 29

**வேறு**

ஆறுகூற் றத்தமிழ்ப் பேராமை யூராமை
யாளரருண் முந்நீர்திளைத்
தாடுவான் வருமிருட் பொதுள்புதற் றலைகரந்
தாறலைக் குஞ்சிங்களர்

வேறுவே றாயிரிந் தோடநின் பொருள்கவர
வேண்டுமயு ரொப்புவேளிர்
வினைதொடர வோடப்ப சுந்தமிழ்ப் புலனுழுநர்
மீனுவர்க் கடன்மாடரின்

மாறுசீர் முன்றிலைத் தீண்டாது போகவவர்
வறுமைப்ப சாசமோட
மலருண்மண மாகுநின் மான்யானை மருளவரு
மாவோட யாளியோடச்

சீறுமா லரவோட நாதத் துவவிடிச்
சிறுபறைமு ழக்கியாடாய்
சேண்கதிர வெற்புமுத் தமிழ்நூல்கள் கற்பநின்
சிறுபறைமு ழக்கியாடாய். 30

**சிற்றில் சிதைத்தல்**

**வேறு**

அள்ளித் திரட்டு மணிப்பரலி
னழித்துத் திருத்தி மனைகோலி
யாய்த வடுப்புக் குவைகூட்டி
யதிற்செம் பவழத் தீமூட்டிப்

பள்ளித் தவர்பொற் பழங்கரகப்
பானை மணியாற் றாமான்வெண்
பசும்பா லுலைநீ ரூற்றியமைப்
பருமுத் தரிசிச் சோறாக்கி

வள்ளிக் கிழங்குக் கறிகுழம்பு
வைத்தே மிற்றைப் பகன்முழுதும்
வளைக்கை கடுக்கு முழுகுபுறம்
வளைந்து சுளுக்கு மிதனருமை



யெள்ளித் தகர்க்கொம் பீர்த்தாடு
மெந்தாய்! சிற்றி லழியேலே
யெங்கதிர் காமவி ளக்கேநிற்
கென்னாஞ் சிற்றி லழியேலே. 31

**வேறு**

அன்றி லங்குருகு குன்றி னூடுபுக
வம்பு விட்டதக வொன்று நெஞ்சினை
யன்று வீடுமற் பொன்று விப்பவம்
பாளி னங்கையின லங்க றந்தனை

நன்றி நல்லியக் கோடன் வெல்லவே
னட்டபாடிவே லூரு மாய்த்துசெந்
நாவ டங்குதலி லாத பூவனுமி
ஞால மேன்மகனு மாதல் கேட்டுமா

லின்றி யாநினக் கஞ்ச லின்றியுமி
றைஞ்ச லின்றியுமி ருப்பெ மோவடி
யேழை யேமொடுநி னக்கு நேர்ந்தபகை
யென்ன வோவிதியை யன்றி நின்னிவட

சென்றி யென்றவளை நோவெமோ கதிரை
சேர்ந்த சேந்த! சிதை யற்க சிற்றிலே
சீற டிக்கொடெந் தலையெ முத்ததுசி
தைக்க் வேந்த! சிதை யற்க சிற்றிலே. 32

**வேறு**

அன்றுதொ டங்கி யாளாவே
மகம்போந் துண்டா லாகாதோ?
வழிக்கும் பூந்தா ணோவாதோ!
வணியுங் குலைந்து போகாதோ?

வென்றுநி னக்கிடர் செய்தோமோ?
விறைவன் பிழைக்கின் முறையுண்டோ?
வெம்மா மிக்கு நேற்றந்தி
யார்நின் குறும்பு சொன்னாரோ?

நன்றுமை யாள்புனை யுஞ்சிற்றி
னாணவ ழிக்குஞ் சிவன்மகனே!
நனைக்கோங் கெம்மக லம்புடைக்கு
ஞான்றுத மிழ்க்கா மப்பொதும்பர்

சென்றுமு யங்கா மோ? கேண்மோ
சீறேல் சிற்றில் சிதையேலே
சிதையாய் பேரில் செய்பெரியோய்!
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 33

### சிறுதேருருட்டல்

#### வேறு

திருவேங்க டக்கோடு வடவரைப் பாவுடைய
செந்தமிழ் வளநாடதன்
றென்வரைக் கதிரக்கு றுஞ்சோலை கெழுமுஞ்செ
ழுங்கதிரை யம்புரவல!

பெருநாளு மாடியந் திங்களின் றேறிற்பி
றப்பித்த வான்கங்கையாள்
பீடுபெறு முகமதியு நகைநிரம் பிற்றுப்பி
றங்குதிரு நீற்றுவெள்ள

மொருவாம லரகரசி வாவென்னு மார்ப்பொலியு
றங்குமா லினையெழுப்ப
வொருகோடி கப்புரவி ளக்கிலகு மெய்க்குறிப்
புன்னுமவர் தம்மிழப்பத்

தெருவோதை யயிலயிற் றிருவிழாப் பூமழைச்
சிறுதேரு ருட்டியருளே
தேடுமுழு மாணிக்க மே! குணக் குன்றமே!
சிறுதேரு ருட்டியருளே. 34

#### எழுசீர்க்கழி நெடிலடி யிரட்டை யாசிரிய விருத்தம்

மாயாக் களிமண் ணியனால் வாய்மை
வாய்ந்தகொ டிஞ்சியி மிழ்சிறுதேர்
மடனுயி ரச்சினி னிருவினை யீருருண்
மாறிக் கோத்து மருளுமவா

வீயா வாணி செருகிவெ றும்பாழ்
வெட்டவெ ளிக்கண ருட்கையினால்
வினைபல விளைதர வீர்த்துமு ருட்டியும்
விளையா டும்முனை வன்புதல்வா!

பேயா மதமுறு கோள்களெ லாமுறை
பிறழ்புரு ளப்பயி லூராண்மைப்



பேராண் மைத்தமி ழுரசிய லாழி
பெட்பவொ ராழியொ டுருளவொளி

சீயாக் கதிர்கா மப்புக ழுருளச்
சிற்றில் சிதையவு ருட்டுகவே
சிறியோ ரீட்டிய திருவில் பொருள்பொற்
சிறுதே ருருளவு ருட்டுகவே. 35

#### அறுசீர்க்கழி நெடிலடி யிரட்டையாசிரிய விருத்தம்

திருவாவி நன்குடிதி ருப்பருங் குன்றமிகு
தெண்குன்று தொறுமேரகஞ்
சேக்கையலை வாயினிய பழமுதிர் சோலையித்
திண்பாடி வீடாறுமே

யுருவாகு மாறகக் களமாவை யாறெழுத்
தோராறு பேற்றுமுகமு
மொழுகுபன் னிருகண்மடை யாறருள்பு றம்பொசிய
வோவாவி ராறுபடையும்

மருவாம லீராறு தாடொடுகை கன்றவார்
வட்டுடைவ னப்பசையவும்
மாமுனிவர் கண்டவெளி மட்டுமிக் கதிர்காம
மறுகுதொறு முள்ளந்தொறுஞ்

செருவீறு சேவலங் கொடியாட நிற்குமஞ்
சிறுதேரு ருட்டுவாழி
திருவாள ரீழவள நாடர்கொணர் பொன்மணிச்
சிறுதேரு ருட்டுவாழி. 36

### பூணணிதல்

செம்புலமு ழாநிற்கு மைந்துமலி புனவன்றெ
விட்டக்கொ டிச்சிகொடுபோந்
தினையினது வெய்துநெய்ப் பாற்பொங்க னெறியிடைத்
திறவாது கண்முகைத்துத்

தம்புலமி றந்தபழ வேங்கையின்ம ராடியின்
றண்ணிழற் குளிர்தூங்குறுஞ்
சான்றோர்ப்ப ணிந்தவர்தம் வாய்ப்பெய்த ருத்தித்த
ழைக்குங்க திர்க்காமனே!

யும்பரொரு வர்க்குமில் கட்டழகு னக்குண்டு
கப்பிதற் கழகுமுண்டோ?
வொப்பனைசெ யக்காமு றும்பேதை மைக்குணனொ
ழித்தலுமெ மக்குளுண்டோ?

விம்பரது பொழுதறிபொ றிப்பூட்டு கைப்பூட்டி
ணைப்பொலந் தொடிபூண்கவே
யிறைவ! கமு கங்கமுத் தியையுமுத் தாரமொடி
மைப்பொலங் கொடிபூண்கவே. 37

வேறு

வயிரம் பதித்துத் தெருளுள்ளம்
வளையவ ளைக்கு நரன்ஞெகிழம்
வள்ளிக் கொடிகண் மணிபதிக்கு
மார்பிற்ப தக்க முகிலூர்தி

செயிரின் றியமும் மணிக்கோவை
தெளிநான் முகனான் மணிமாலை
தேரிள வன்மா றொன்பதின்மர்
திகழ்ந்த வொன்பான் மணிமாலை

தயிருண் டோடிய நல்லம்மான்
றந்த துயல்பன் மணிமாலை
தனியாண் பால்பெண் பாலொருவர்
சாத்தும் புன்னகை மணிமாலை

யுயிரின் புறுகதிர் மலைக்குமரா!
வுணர்வு திருடப் புனைந்தருளே
யுலகின யணியும் நின்வடிவ
முரவோர் வருடப் புனைந்தருளே. 38

வேறு

கண்ணிற் கணிகண் ணோடுதன் மாந்தர்
காண்டக வுரைவினவுங்
கல்விக் கணிபொருள் கசடற, மொழிதல்
கருதற் கணியருளே

மண்ணிற் கணிகதிர் காமக், கோட்ட
மதிநூற் கணியுவமம்



மன்பெரு மைக்கணி பொறையே மனையற
மாட்சிக் கணிமகவே

யெண்ணிற் சால்பிற் கணிநா ணுடைமை
யிளைஞர்க் கணிபணிவே
யெங்கண்மு டிக்கணி நின்றிரு வடியே
யெழுதரு மழமுருகே!

விண்ணிற் கணிநீ நின்றிரு மெய்க்கணி
வினையேம் பொற்பணியே
வேசறு மடியார் விழிவாய் பருகவி
துத்தனர் பொற்பணியே. 39

## உடைவாள் செறித்தல்

வேறு

மான்கொன்ற முடைநாறி றைச்சியொடு திரிதாடி
மயிரணற் கொடுவிலெயினன்
வழிபாடு தரவருளி வலவையாற் றங்காடு
வந்தகதி ரைத்தெய்வமே!

யூன்குன்ற மாமசுரர் வன்கண்மை யாற்றலா
வும்பரார் நுந்தையடிவீழ்ந்
துளறிப்பு லம்பிமுறை யிட்டனர் விடியற்க
ணுந்தையஞ் சற்கவென்று

வான்குன்ற லொழியுநுந் தலைவனின் னுஞ்சிறிஞன்
மழலையுறி ரம்பிற்றிலன்
வருகநா லைந்தாண்டி னிப்போக வென்றருள்வ
ழங்கினுங் கடிதுபோர்க்குத்

தான்சென்று வரவிடுப் பான்போலு நின்னைவாள்
சாலுடைசெ றித்தல்பயிலே
தகுமிளம் பருவமங் கையர்பிறழ்கண் வாளோடு
தாழுடைசெ றித்தல்பயிலே. 40

வேறு

பொருந்து மெளியே மவவின்மைப்
பொதியோ வியமெய் யுறைபோர்க்க
பொல்லா விருசார்ப் பற்றின்மைப்
பொன்னஞ் செருப்பிற் கழல்சேர்க்க

முருந்து மூரன் முகமனிக்கு
முதல்வா! கதிரை யெம்பெருமு!
முந்து குறங்கில் வட்டுடைஞாண்
முழந்தா டொடங்கி நுசுப்புவரை

விருந்து பொடிப்பச் சுருக்கிப்பல்
வேறு கலையின் செல்வமெனும்
விளிம்பிற் பச்சை மணிநிரைத்த
வெருள்பாம் பன்ன கச்சினையார்த்

தெருந்து முமிழ்காழ் மறைத்தடற்று
ளீர்வாண் ஞானஞ் செறித்தருளே
யெண்செந் நிலைக்கைப் பிடிவயிர
வீர்வாண் ஞானஞ் செறித்தருளே. 41

**வேறு**

கூளிச் சுற்றத் தூசிப்பனிலங்
குணலைக் கூத்தியலுங்
கொன்புத் தேளிர் யாழ்குழல் முழவிசை
குவிபூப் பொதுளுமரோ

வாளிச் செலவிற் றோகைக், குடைமயில்
வடிவிந் திரன்வந்தான்
வண்டமிழ் ஞானத் தொண்டர், படையணி
வலனா வலங்கொட்டுந்

தூளிப் பொடிமூ வுலகும், பூசச்
சூரடி மைவாழ்வு
தொலைவுற வுலவிவ ரப்பேரறமுந்
துண்ணென வேறிமிரத்

தாளிற் றரியலர் நாணநி மிர்ந்து,
தார்வா ளுடைசெறியே
தமியேங் கதிர்மலை யாண்டகை! வாழி
தார்வா ளுடைசெறியே. 42

**கதிரகாமப் பிள்ளைத்தமிழ் முற்றிற்று**



உ

# கம்பை முருகன் பிள்ளைத்தமிழ்

## அலங்காரம்

### காப்பு

கட்டளைக்கலித்துறை

மாவலங் கார மலர்ப்பொழில் சூழ்கம்பை மாநகர்வாழ்
தேவலங் கார சிகாமணி சண்முக தேசிகன்மேற்
பாவலங் கார மலங்கார மாகப் பகர்ந்தணியக்
காவலங் கார கடலிக டாசலக் கற்பகமே. 1

### நூல்

பூங்கற் பகநிழல் வண்டா மரைநற் புணரியென்னு
மோங்கற் பகமொரு மூன்றையு மன்பர்க் குவந்துநல்கி
யீங்கற் பகலுமெ ழிற்கம்பை வாழ்குக னெங் கள்பிதா
வாங்கற் பகத்தெய்வ யானையும் வள்ளியு மன்னையரே
2

கந்தா குமரா கவுரி சுதாமணி கண்டர்பெற்ற
மைந்தா குவலய மானிடர் மாதவர் வானவர்தஞ்
சிந்தா குலமற வந்தெழிற் கம்பைத் திருநகர்வா
ழெந்தாய்கு ணக்குன்ற மேநம்பி னேனுன்
னிணையடியே. 3

## காப்பு

மாமேவு கயிலாய மலைமேல் வசந்தமணி
மண்டபத் தோவி யத்துள்
வரைபிர ணவக்கலை கடம்மைநம் மையனொடு
மாதேவி கண்க ணோக்கக்

காமேவு களிறுபிடி யாய்க்கலந் துழியுலகு
காதலித் துய்யும் வண்ணங்
கருணையுரு வங்கொண்ட ஞானமத வைங்கரக்
கற்பகத் தைப்ப ரவுவாந்

தூமேவு சமயங்க ளோராறு மேத்துமோர்
சோதிமெய்ஞ் ஞான வடிவாய்த்
தோன்றுநங் குமரனைக் கொற்றவேல் வீரனைத்
தோகைமயி லேறு குகனைப்

பூமேவு தெய்வதப் பிடியொடு குறக்கொடி
புணர்ந்துமகிழ் மணவா ளனைப்
பொன்பொலி வளங்குலவு கம்பைவளர் முருகனைப்
போற்றுவண் டமிழ்த ழையவே. 4

## 1. காப்புப்பருவம்

### திருமால்

உலகநிலை முழுதாகி யுயிர்களுக் குயிராகி
யோங்கரன் றனது தொல்லை
யோராறு வதனநுதல் விழியாறு தீப்பொறியி
னுற்றெரியும் வாயு வுங்கொண்

டிலகவரு சுரநதியின் விடவநதி சரவணையி
னினிதுய்க்க வாறு மகவா
யின்பின்வளர் நங்கார்த்தி கேயனைக் கம்பைவள
ரிளையோனை நனிபு ரக்கத்

திலகநுதன் மாதிலக் குமிமின்ன வொண்கரச்
செந்தா மரைக்க ணமருந்
திண்பாஞ்ச சன்னிய மிடிக்கநற் சார்ங்கமது
திகழோங்கு வான்வில் லிடக்



கலகவினை வெங்கோடை தணியமன் னுயிரெனுங்
கவினோங்கு பயிர்த ழைப்பக்
கருணைமழை பொழிகட்க தண்டசக் கரதரண
கருமுகிலை வாழ்த்து துமரோ. 1

### நருமதேச்சுரர்

வேறு

இமகிரண மதியுமெரி விடவரவு முறவுகொடு
வினிதுவாழ் செஞ்சடைத் தோற்றனை
யிமையவர்கண் முறையிடமு னலைகடலில் வருகடுவு
ணெழிலுலா வுங்களத் தேற்றனை

நமபயம தகலுமென வழிபடுநன் மதலையெதிர்
நமனைவீ சும்பதக் கூற்றனை
நவநிலையின் மிசைநிலவு சிவனையடி யவர்பரவு
நருமதே சன்றனைப் போற்றுவாம்

விமலமுறு சதுமறையி னுளபொருளை யறிவரிய
விதியின்மே லுந்துநற் சீற்றனை
வியனுலகு கதியடைய வருளுமுயர் பிரமனென
மிளிரவே நின்றமெய்ச் சாற்றனை

யமரர்முனி வரர்நரர்கள் குமரகுரு வெனுமொலியி
னழகுசேர் கம்பையுட் பேற்றனை
யயிலவனை மயிலவனை யமலைதரு திருமகனை
யருளுமா கந்தனைக் காக்கவே. 2

### சௌந்தரநாயகியம்மை

வேறு

பாணுற்ற தும்புருவி னோடுற்ற தண்டுமுனி
பாடப்ப ணிந்தடியர் நின்றுமிக் கேத்தவே
பாதத்த ணிந்தசதுர் வேதச்சி லம்பொலிகள்
பாரச் செழும்புவ னமெங்குமுற் றார்க்கவே

தாணுற்ற வின்பநட மேவிக்க ணுண்டுயிர்க
டாமற்பி னுய்ந்திடமெ யின்பினிற் சேர்க்கவே
சாலப்பெ ருங்கருணை யேலப்பொ ழிந்திடுமோர்
தாயைச்ச வுந்தரம டந்தையைப் போற்றுவா

மாணுற்ற வைந்தருவின் மேலுற்ற ருங்கனிகள்
வானத்தர் நுங்கவுத வும்பொழிற் சேக்கைமேன்
மாலுற்று வந்துதிரு மானிற்பி றந்தகுற
மானைப்பு ணர்ந்தமுரு கன்றனக் கேற்றசீர்

காணுற் றகன்றிலது வாழ்வுற்ற னன்பொருவு
காருற் றமர்ந்துதுயில் சுந்தரக் காட்சிசேர்
காதற் றலங்களினு மேருற்ற கம்பைவளர்
காளைக் குழந்தையையொர் கந்தனைக் காக்கவே. 3

## சித்திவிநாயகர்

### வேறு

நலனுறு துதிகண வின்றடி வணங்கி
நயந்துறு குழுவலன் பினர்க்குப்
பலன்மிக வளிக்குங் கம்பையம் பதிவாழ்
பாலவேற் குமரனைக் காக்க

இலகுவெண் கோடு மதம்பத மொன்றொன்
றிரண்டொடு கைகணா லொன்றும்
வலனுற மிகுந்து மறைந்திடக் குறமான்
வணங்கமுன் வருசித்தி யிபமே. 4

## திருநீறு

### வேறு

மயர்வறு ஞான மாமணி விளக்கை
மன்னுசீர் மோனமெய்ந் நிலையை
வரத்தொடு போக்கி லாதநற் கதியை
வணங்குநர்க் களிக்குமொண் ணிதியைச்

செயமுறும் வடிவே லேந்துமெம் மரசைத்
தேவர்கள் சேனைநா யகனைத்
திகழ்பெறு கம்பை நகருறை கருணைச்
சேயனைத் தூயனைப் புரக்க

வுயர்சிவ மறையோன் விமலைபார்ப் பனியா
யூழியின் வெள்ளநீ ராக
வுலப்பிலா வண்ட மண்டப மாக
வுரைதரை வேதிகை யாய்மா



லயன்முத றேவ ரவிகளா யுயிர்க
ளாக்களாய் நுதற்கணாங் குண்டத்
தக்கினி யாற்செய் வேள்வியி லுதித்த
வற்புத பரமவெ ணீறே. 5

## உருத்திராட்சம்

### வேறு

மன்மணி யெனக்கொடு கவுத்துவம ணிந்தமணி
வண்ணனெண் கண்ணன் முதலாம்
வானவரு மணிமணி கிரீவசர ணசுரவிருண்
மாய்த்தெமைக் காக்கு ஞான

நன்மணி யளித்தியென் றோலிடக் கண்ணுத
னயந்துதவு குமர மணியாய்
நகரமணி யாங்கம்பை மேவுசுப் பிரமணிய
நாதனை யுவந்து காக்க

பொன்மணி பளிங்குமணி சங்குமணி பவளமணி
புத்திரத் தீப மணியம்
புயமணி துழாய்மணியி ரசமணிவெண் முத்துமணி
பொலியுமா மணியா தியாம்

பன்மணிக ளுக்குஞ்சி ரோமணிய தாகிப்
பரிந்தணிந் தார்கள் பாவம்
பாற்றியிக பரசுகந் தந்திடு நிறைந்திடும்
பரசிவன் கண்ணின் மணியே. 6

## பஞ்சாட்சரம்

### வேறு

மறப்பெருஞ் சூர்மா மரனட்ட வேலு
மயிலுமென் றேத்துநர் வாழுஞ்
சிறப்பெலா நிறைந்த கம்பையம் பதிவாழ்
திகழ்சடக் கரன்றனைப் புரக்க

பிறப்பெனுங் கடற்கோர் பெரும்புணை யாகிப்
பேரின்ப முத்தியங் கரைசேர்த்
தறப்பெருந் தாயை யப்பனைக் காட்டு
மஞ்செழுத் தாயமந் திரமே. 7

## திருமகள்

### வேறு

மாயவனை மாறினக் காசையார் மீதென்ன
மாலுமென் புகல்வன் மற்றென்
மார்பினுறை பூமங்கை நீயென்ன மண்ணுண்ட
வாய்ச்சொனிச் சயம தாமே

யேயவனை வண்டுழாய்க் காட்டினிற் கார்வமிலை
யேயென விருந்தைக் குமே
லினியைநீ யென்றுநகை புரியுமால் சொற்சுவைக்
கிளகுபொன் மகளை நினைவா

மேயவனை முத்துவெண் சாந்தாற்றி நவமணி
விளங்குநவ நிலைசெய் துமா
மேருகிரி நிகரோங்கு சிகரிமுகி லிரவிமதி
மீன்மண் டலத்த ளாவி

நேயவனை மார்களாங் கார்த்திகைப் பெண்களை
நெருங்கிமுரு கைய னொண்சீர்
நிகழவுரை செயவடைந் தென்னவளர் கம்பையுண்
ணிமலனைக் காக்க வென்றே. 8

## கலைமகள்

கள்ளையுண் டளியினங் கானஞ்செய் வெள்ளையங்
கஞ்சா தனத்தி னுஞ்செங்
கஞ்சாதனக் கிழவ னாவா தனத்தினுங்
காதலி னுறைந்து கவினார்

வெள்ளைய்ணி வெள்ளையுடை பூண்டுடுத் தொளிர்மேனி
வெள்ளையாய்க் கொண்ட வதனான்
வெள்ளைமதி யினனென்று தள்ளாதெ னுள்ளமும்
விரும்பியமர் தாயை நினைவாம்

பிள்ளைமதி வேணியணி பித்தருக் கினியவோர்
பிள்ளையா யவத ரித்தும்
பிரணவ மகாமந்தி ரோபதே சஞ்செய்த
பெரியகுரு நாத னாகிக்



கிள்ளையை யகற்றல்போற் கூய்ப்புனத் துறைகுறக்
கிள்ளையைக் களவு செய்த
கிழவனைக் குமரனைக் கம்பைவரு பாலனைக்
கேண்மையொடு காக்க வென்றே. 9

## பிரமன், சத்தமாதர், இந்திரன், பலதேவர்.

### வேறு

செப்பத்து விதப்பொரு ளாய்க்காஞ்சி காசி
திருநகர்வா ழும்மையப்பர் திகழுங் கண்ணே
யொப்பத்துப் பிதழ்மடவார் பாட லோவா
வுயர்கம்பை யுறைகுகனை யுவந்து காக்க

விப்பத்துத் திசைப்புவனம் படைக்கும் வேத
னெழுமாதர் சதகோடி யேந்துங் கையான்
முப்பத்து முக்கோடி தேவர் யார்க்கு
முகமலர்ந்து பலகோடி முகமன் சொல்வாம்.
10

## 2. செங்கீரைப்பருவம்

பொங்கார வாரக்க டற்கடுவுண் மூர்த்திமெய்ப்
புளகார வணைபி ராட்டி
புனிதநீ ராட்டிவெண் ணீற்றினொடு நெற்றியிற்
பொட்டிட்டு முச்சி முடிமேற்

றங்கார வண்சுட்டி நாற்றிவிழி கட்குமை
தரித்தொளிர் செவிக்க ரதனத்
தங்கக் குதம்பைசாத் திப்பொன்னி னரைஞாண்
டயங்குறப் பூட்டி மதுரக்

கொங்கார மலரடிக் காரணப் பரிபுரங்
கூட்டியா லத்தி சுற்றிக்
கொங்கையமு தூட்டிநற் றொட்டிலிட் டாட்டவிசை
கூர்ந்துகேட் டமர்கு ழந்தாய்

தெங்கார வளர்சோலை சூழ்கம்பை வாழ்குமர
செங்கீரை யாடி யருளே
சிங்கார வள்ளிக் கலங்கார மணவாள
செங்கீரை யாடி யருளே. 11

வசையுற்ற வசுரர்தலை கீழாக வானாட்டு
வாழ்சுரர் கடலெ டுப்ப
மதலையங் குதலைமொழி வேட்டெம்பி ராட்டியிம
மலையாட்டி தலையாட் டிமிக்

கசையுற்ற கங்களிக் கத்தலை யெடுத்துமோ
தலையுற்ற கடலு டுத்த
வவனிமட மங்கைகைம் மலரேந்த விருகைமல
ரமையவூன் றித்த முடிமே

னசையுற்ற வன்பாளர் கரமலர் குவித்துமுக
நளினமலர் வுற்று நோக்க
நவில்வேத முடிமேன டிக்குமடி களினொன்றை
நன்குற முடக்கி யொன்றைத்

திசையுற்ற தவமல்க நீட்டிவளர் கம்பைவேள்
செங்கீரை யாடி யருளே
சிங்கார வள்ளிக் கலங்கார மணவாள
செங்கீரை யாடி யருளே. 12

நன்காஞ்சி வாகமமெ யன்பாய் வினாவியுமை
நவிலரிய கயிலை நீங்கி
நண்ணிமறை மாவடி முளைத்தருள் பரஞ்சோதி
நாதனைச் சைக தத்தான்

முன்காஞ்சி யங்கம்பை யாற்றிடை யமைத்துரை
முறைப்படி புரிந்த பூசை
முடியுமுன் கம்பேச னேவவந் நதிமாது
முடுகிவர லோர்ந்தச் சுறாப்

பொன்காஞ் சியலையுற வெழுந்தேல வார்குழலி
பூங்கரத் தால ணைக்கப்
பூண்குருகு மென்முலைக் குருகுகம் பேசர்மேற்
புலவியிற் கம்பைய னைசேர்

தென்காஞ்சி யீதெனக் கம்பையமர் குமரவேள்
செங்கீரை யாடி யருளே
சிங்கார வள்ளிக் கலங்கார மணவாள
செங்கீரை யாடி யருளே. 13



பார்கொண்ட மன்பதைகள் பத்தியொடு மூழ்கவவர்
பவமெலாம் பாற்று கங்கை
படியுற்று மாசொரீஇப் பரிசுத்தை யாயுறப்
பாலிக்கு மான்மி யத்தாற்

பேர்கொண்ட கச்சிவளர் கம்பைகம் பன்பாற்
பிணக்குற்றி விடைய டைந்த
பெற்றியது கண்டவர நதியிவணொர் நதியெனப்
பிரியாது வைகின ளெனா

வேர்கொண்ட விசுவேச னருள்விசா லாட்சியு
மிசைந்தீண்டை மருவினர் கொலா
மென்றறியு மயனுமா கண்டலனு மண்டர்களு
மியல்வரரு நரரு நண்ணுஞ்

சீர்கொண்ட காசியாங் கம்பைவளர் குமரவேள்
செங்கீரை யாடி யருளே
சிங்கார வள்ளிக் கலங்கார மணவாள
செங்கீரை யாடி யருளே. 14

உண்மையறி வானந்த வுருவாய சிவபிரா
னுமையம்மை யிருவ ருந்தா
மோரைந்து கத்தரா யைஞ்சத்தி யாய்விரிந்
துலகெலா மைந்தொழில் செயும்

வண்மையான் வேதாக மாதிய புராணங்கள்
வாய்மையி னெடுத்து ரைக்கு
மற்றந்த மாதேவ தேவிகண் மைந்தனாய்
மத்தியி னமர்ந்தெ மக்கே

யண்மையா யானந்த மயமா யிரண்டற
வகண்டமாம் வடிவி னோங்கு
மப்பனீ யம்மைநீ வேறல்லை யென்பதை
யறிந்துயா முய்யும் வண்ணந்

திண்மையாய்க் காட்டிவண் கம்பைவளர் குமரவேள்
செங்கீரை யாடி யருளே
சிங்கார வள்ளிக் கலங்கார மணவாள
செங்கீரை யாடி யருளே. 15

## வேறு

மஞ்ஞையை யஞ்சர வந்தந் தன்ன
மணிச்சுட் டியதாட
வதனச ரோருக மார்கதிர் நேர்குழை
வண்கா தினிலாட

விஞ்சிய நகையொளி நிகர்முத் தாரம்
வியன்மார் பினிலாட
விரியுல கங்குடி கொண்டிடு பண்டி
விளங்கியி சைந்தாட

வெஞ்சலின் மேருவ ளைந்தம ணிப்பணி
யெனவரை வடமாட
வெய்த்தய னுதையுண் டீந்தன் கிண்கிணி
யிருசர ணத்தாட

வஞ்சலி செய்தன் பாளர்க ளாடிட
வாடுக செங்கீரை
வம்பரர் சூழ்சுக கம்பையுள் வாழ்குக
னாடுக செங்கீரை. 16

செய்யபொன் மேனி விபாகர னொளியிற்
செறிவல் லிருளறவே
திகழ்முக மதிபொழி திருவமு தால்வெந்
தீவினை விடமறவே

வெய்யவர் கெடவளர் புயமலை யாலிம்
மேதினீ யெழில்பெறவே
மிளிர்செவ் வாயூற லினதி யாலருள்
விளைவுகண் மிகவுறவே

துய்யக டைக்கணி னோக்கான் மன்னுயிர்
தொல்பசி தான்றெறவே
சுகநிலை தந்திடு கந்த மனோகர
தொண்டர்க டம்முறவே

யையம னோகர வற்புத வறுமுக
னாடுக செங்கீரை
யம்பரர் சூழ்சுக கம்பையுள் வாழ்குக
னாடுக செங்கீரை. 17



இன்பி னெடுத்து வளர்த்த விளம்பிடி
யென்னரு மந்தமகட்
கேற்ற மணாள னிருந்திரு நாட்டி
னிருந்திடு மன்னுயிர்காள்

வன்பிற வித்துயர் தீர்க்கு மருந்தவன்
வண்பத ரேணுவெனா
வாய்மை யறிந்து வணங்குதிர் நும்மிடை
வண்மை புரிந்திடுவா

னன்புல னாடுக வென்ற யிராவதி
நதியென வுற்றதெனா
ஞானியர் மோனியர் சித்தர்கள் பத்தர்க
ணாடொறு மூழ்கவொலித்

தன்பொடு பெருகயி ராவதி நாட்டவ
னாடுக செங்கீரை
யம்பரர் சூழ்சுக கம்பையுள் வாழ்குக
னாடுக செங்கீரை. 18

## வேறு

**திண்**புய வேடுவர் தந்தவ நங்காய் சென்றேவார்
சிந்துவி னார்புன லுண்டு செறிந்தே யைம்பாலாய்
**நண்**புயன் மேன்மை யடைந்தது கண்டே நன்றாய்வா
னம்பிய சோமன் முகம்பெற நின்றா னண்பாய்நீ
**விண்**புன மூடெனை வின்பொ டணைந்தா ளன்பாய்நான்
வந்தனை யேவல் புரிந்திடு கின்றே னென்றேகான்
**கண்**புனை மானை யணைந்தவ செங்கோ செங்கீரை
கம்பையுண் மேவிய மர்ந்தவ செங்கோ செங்கீரை. 19

**இந்**திரி யாடவி வென்றவர் சென்றே றும்பாரே
யின்புட னாடுற முந்துறு முந்தே முந்தாறே
**யுந்**தர மாதிய வெங்கு மணஞ்சூ ழும்பூவே
யன்புடை யாருணர் வின்சுவை தந்தூ றுந்தேனே
**பைந்**தொடி தாயுமை சிந்தையெனும்பூ வண் டேயோர்
பங்கினன் வீணையி னின்றெழுதண்சேர் பண்சீரே
**கந்**தத யாபரசுந்தர செங்கோ செங்கீரை
கம்பையுண் மேவிய மர்ந்தவ செங்கோ செங்கீரை. 20

## 3. தாலப்பருவம்

கருதற் கரிய வல்வி டத்தைக்
களத்தின டக்கு மிறைமாறன்
களிப்பி னளித்த முளைய னத்திற்
காதல் புரிந்தா னவன்கண்வந்தே

நிருதக் கடுவைக் களத்த டக்கிந்
நிமலற் கமிழ்தொவ் வாதென்றே
நீண்மைப் பகட்டு வயிர வல
நிகழேர் பூட்டிப் பயிர்செய்யப்

பொருதக் கயற்க ணரம்பை யரைப்
புலவர் தம்மைப் போகிவிட்டாற்
போலு முழத்தி மாரு ழுவர்
புனிதச் சாலி விளைவிக்கு

மருதப் பணைசூழ் கம்பை நகர்
வரதா தாலோ தாலேலோ
வரைவேந் துதவு பரை யேந்து
மதலாய் தாலோ தாலேலோ. 21

புனிதச் சாலி யதைச்சாறு
பொழியுங் கருப்பஞ் சோலையதைப்
பொலியுங் கதலிச் சோலையதைப்
பூகச் சோலை யதையிளநீ

ரினிதுற் றுயர்தெங் கஞ்சோலை
யெழிலா யதைமாஞ் சோலையுஞ்சூழ்ந்
திசைவே லியதாய் வளர்ந்தோங்கி
யிருங்கற் பகச்சோ லையையண்மி

வனிதைப் பிடியைக் குறக்கொடியை
மருவி யரசா யெந்நிழலின்
வதிந்தான் முருகன் புகழெமக்கோ
மற்று முமக்கோ வெனவசையு

மனிதச் சுவர்க்க மெனுங்கம்பை
வரதா தாலோ தாலேலோ
வரைவேந் துதவு பரையேந்து
மதலாய் தாலோ தாலேலோ. 22



துய்ய பளிக்கு மேடையிடைத்
துலங்கு மணிப்பொற் றம்பமிசைந்
தூக்குந் துவச வெண்படம்போய்ச்
சுவர்க்கத் தலத்தி னுலவல்கண்டே

யுய்ய னமக்கென் வையமதி
யுற்ற தெனவான் மதிமதிகெட்
டோடி மேலைக் கடற்பாய
வுதனை யழைத்தாங் கதுவசையச்

செய்ய சுடரை யந்நாளிற்
றேடு மெகின மெனமறுநாட்
டிரும்பிச் சீலை யெனநாணுந்
திங்கண் மருவி யுடற்பொதிந்த

மைய லகல மகிழ்கம்பை
வரதா தாலோ தாலேலோ
வரைவேந் துதவு பரையேந்து
மதலாய் தாலோ தாலேலோ. 23

சுகந்த மலர்ச்சேக் கையின்முயங்கத்
துணையோ டமர்ந்த வரசவன்னத்
தோற்ற மனையான் மற்றொருத்தி
சுகத்தை நினைத்தா னெனவனையா

ளுகந்த துரைத்தி யெனவொர்தன
முறச்சிந் தித்தே னெனவுளதிங்
குணர்க வெனக்காட் டெனச்சுவர்க்க
மோர்தி யெனவம் மகவானும்

புகுந்த துளதோ வெனநீயே
போகி யெனச்சான் றியாதெனப்பின்
பொருந்துங் கண்க ளெனநகைத்துப்
பூவை வண்டாய்ப் புணர்ந்தனன்போன்

மகிழ்ந்து பலர்வாழ் மனைக்கம்பை
வரதா தாலோ தாலேலோ
வரைவேந் துதவு பரையேந்து
மதலாய் தாலோ தாலேலோ. 24

மயங்கு மிரவா மடமாதை
மருட்டிப் பகலாங் காரிகையை
மணந்து நளின மகப்பூத்து
மகிழ்செஞ் சுடரோன் வான்வழியி

னியங்கு முருளை யொன்றுடைத்தே
ரிவுளி நிறத்தை யுறநோக்கி
யிமையோர் வேந்து வெண்புரவி
யீதே தென்னப் பாகனுந்தான்

றியங்கு நீயார் தினகரனோ
திகழு மதியோ செப்புகெனச்
சிந்தை மருள வெண்சாந்து
தீற்றிக் குளிர்மை செயுமாடம்

வயங்கும் வளஞ்சேர் கம்பைநகர்
வரதா தாலோ தாலேலோ
வரைவேந் துதவு பரையேந்து
மதலாய் தாலோ தாலேலோ. 25

வேறு

பெத்த மகன்ற வருக்கரன் வைத்த
பெருங்கரு ணைத்திருவே
பேருல குய்ந்திட வம்மை வளர்த்த
பெருந்தரு மத்துருவே

கைத்தல மேல்வளை வைத்திடு மாமடி
கட்கொர்க வுத்துவமே
கஞ்சம லர்த்திரு வாகிய மாமி
களித்திழை மெய்த்தவமே

யத்திசை மாமுக னைச்சிறை வைத்துல
கருளிய விதிநெறியே
யைங்கர கரியின் பின்வரு மீரா
றங்கர கோளரியே

சத்துவ நிதியே கம்பைக் கரசே
தாலோ தாலேலோ
சம்பக நீபக லாரசு கந்தா
தாலோ தாலேலோ. 26



இமய மடக்கொடி செய்தவ மாற்றுதி
யென்றெனை நன்றேவி
யிளகி யவட்கரு ளிச்சுவ டுற்றன
னேகம் பேசனெனத்

தமியள் புலந்தலை வாரியின் வீழ்ந்திடு
தன்மை யறிந்தனையே
சார்குவ னின்னொ டெனப்புகு சரவண
சாமியை யேந்தியடைந்

தமையவொர் நன்னக ராகி யமர்த்தி
யடுத்தவர் வல்வினைதீர்த்
தார்ந்தனள் கம்பை யெனக்கா மாட்சியு
மையனு மகிழ்பதியாந்

தமிழொலி குலவிய கம்பைக் கரசே
தாலோ தாலேலோ
சம்பக நீபக லாரசு கந்தா
தாலோ தாலேலோ. 27

ஆதியு மத்தியு மந்தமு மில்லதொ
ரற்புதப் பரவெளியே
யன்பர்கள் கண்டு மகிழ்ந்திட நாடக
மாடிய சுகவொளியே

வேதமொ டாகம மார்க்கமி தென்ன
விளம்புறு பைங்கிளியே
விழைசுக வாழ்வு நிலாதென விட்டவர்
விட்டுவி டாத்தெளியே

யோது மிரண்டற வொன்றுபு நின்றவ
ருற்றிட வருளளியே
யொப்பறு பத்தி யெனப்படு மெய்ப்பொரு
ளுய்த்திடு பொற்றளியே

தாதவிழ் நந்தன கம்பைக் கரசே
தாலோ தாலேலோ
சம்பக நீபக லாரசு கந்தா
தாலோ தாலேலோ. 28

வேறு

பூதாதி தந்த வபூதா போதா தாலேலோ
போதா ரயன்றுதி போதா மேதா தாலேலோ
தீதான விண்டவ தீதா வீதா தாலேலோ
சீதா மகிழ்ந்துறை சீதா நீதா தாலேலோ

தாதார் கடம்பணி தாதா கீதா தாலேலோ
சாதா பலந்தெறு சாதா வேதா தாலேலோ
வாதாளர் கண்டவி வாதா சூதா தாலேலோ
மாதா னகம்பையுண் மாதா நாதா
தாலேலோ. 29

சூலாயு தன்றரு பாலா தாலோ தாலேலோ
தோலாத செந்தமிழ் நூலா தாலோ தாலேலோ
மாலாரா ணன்றுதி காலா தாலோ தாலேலோ
வாலாயர் தொண்டனு கூலா தாலோ தாலேலோ
சீலா கரம்பெறு கோலா தாலோ தாலேலோ
சேலார் கணங்கொடி மாலா தாலோ தாலேலோ
வேலாயு தங்கர லீலா தாலோ தாலேலோ
மேலா னகம்பையுண் மூலா தாலோ
தாலேலோ. 30

## 4. சப்பாணிப்பருவம்

மழைவயிறு கடல்வயிறு கீண்டமாக் கீண்டெம்மை
வாழ்வித்த வேற்பா ணிதன்
வன்புயக் கந்தினொரு பெண்யானை யைக்கட்டி
வைத்தகன் மார்பை வடுவிற்

குழைவுறச் சமர்செயச் செய்வனென் றேபுயங்
கொட்டுகுலி சப்பா ணிமுன்
கூர்ந்துதவு தெய்வயா னையைமணந் தவளுங்
குலாவிவிழி கொட்டா துசேர்

விழைவொடு தினைப்புனத் தெயினர்கள் வளர்த்துய்த்த
மென்முலைக் கோட்டா னைதன்
மெய்யழகு நாரதன் விளம்புமுன் களவியலின்
வேட்டிடுவ னினிதி னென்னாத்



தழைவுறு தடம்புயங் கொட்டுவன சப்பாணி
சப்பாணி கொட்டி யருளே
சம்பகா டவிமருவு கம்பைமா நகர்முருக
சப்பாணி கொட்டி யருளே. 31

ஒண்சார்ங்க பாணியுங் கரகபா ணியும்விண்ணி
னுறுகுலிச பாணியுந் தாழ்ந்
தோவாம லஞ்சலிசெய் பாணியொடு துதிகயிலை
யுற்றகல் லானி ழற்கீ

ழெண்சார்ந்த சனகாதி நால்வருக் கறநெறி
யினைப்பாணி காட்டி யிசையா
திசைசூல பாணிக்கு மகவாயு முபதேச
மினிதுரைசெய் வடிவு மாற்றி

மண்கூர்ந்த கிழவுருத் தண்டபா ணியினண்மி
மகிழுமங் குசபா ணியா
மால்யானை யான்மருட் டித்தெளித் தருள்கூர்ந்து
மற்றுமொ ரிராவள் ளிமான்

தண்காந்த ளம்பாணி பற்றுவன சப்பாணி
சப்பாணி கொட்டி யருளே
சம்பகா டவிமருவு கம்பைமா நகர்முருக
சப்பாணி கொட்டி யருளே. 32

மண்டலம டந்தைமுக மண்டலமெ னுங்காஞ்சி
வளநகர்க் கண்ணின் மணியா
வளர்மணிக் குமரகோட் டத்தருச் சகராய
மாக்கச்சி யப்ப மறையோன்

கொண்டநீள் கனவிடைத் திகடசக் கரமெனக்
கூறுமொழி முன்கொ டேத்திக்
குதுகலித் துத்தினமொர் நூறுகவி செய்தருள்
குலாவத்த சாமத் தினிற்

கண்டவர்கள் பவநீக்கு சந்நிதியின் வைத்துமெய்க்
காப்பிட் டகன்றி டப்பின்
கற்பவர்கள் கேட்பவர்கள் யாவர்களு முய்ந்திடக்
கந்தப் புராண மெனுமத்

தண்டமிழ் சிறப்பத்தி ருத்துவன சப்பாணி
சப்பாணி கொட்டி யருளே
சம்பகா டவிமருவு கம்பைமா நகர்முருக
சப்பாணி கொட்டி யருளே. 33

மதுமுகம் பில்கிமது கரம்விருந் துண்டுண்டு
மழலையம் பாண்மி ழுற்றும்
வண்கடம் பணிபன்னி ரண்டுமலை சிறிதசைய
மாமேரு மலையு மலையும்

விதுமுகக் ககனமும் பெரிதசைய லக்கர்நவ
வீரரொடு விளையா டுநாள்
வெண்கயிலை மலையினிம மலையுதவு விமலைமகிழ்
மேவுசெம் மலைவ ணங்கிப்

புதுமுகனெ னப்போது மவனைநீ யாரெனப்
போதனென மறைபோ மெனிற்
புகலென்று புகலுமுன நிற்றியப் பிரணவப்
பொருள்பகர்தி யெனவி ழிக்குஞ்

சதுமுகன் றலையினிற் குட்டுவன சப்பாணி
சப்பாணி கொட்டி யருளே
சம்பகா டவிமருவு கம்பைமா நகர்முருக
சப்பாணி கொட்டி யருளே. 34

ஒப்பாரு மிக்காரு மில்லாத பொற்பாரு
முமையம்மை திருவு ளங்கூர்ந்
தோவாது கண்மலர் பரப்பியின் புறமுனிவ
ரோரிருவ ரின்பொ ருட்டான்

வைப்பான சிற்சபையி னற்பாத மலர்நோவ
மற்றுநட் டுவனி லாதே
வள்ளலெந் தாதைபுரி திருவருட் கூத்துக்கு
வன்பொய்முன் சொற்ற தன்றிச்

செப்பார ணப்பொருடெ ரிக்காமை யாலுஞ்
சிவப்பான தலையன் கொலாஞ்
சீர்த்தாள மார்ப்பது தகாதுநா னாசான்
சிறப்பா யமைப்பே னெனாத்



தப்பாம னன்குதன பொற்பாணி யொற்றல்போற்
சப்பாணி கொட்டி யருளே
சம்பகா டவிமருவு கம்பைமா நகர்முருக
சப்பாணி கொட்டி யருளே. 35

## வேறு

மஞ்சுநிற வஞ்சருட னஞ்சுகுடர் பிஞ்சலற
மட்டிலுதி ரத்தா றுபோய்
மண்டியக ருங்கடலொர் செங்கட லெனும்படி
வகுக்குமயி றொட்டே வுசேய்

விஞ்சுபல வண்டமும டங்கலு மதிர்ந்திட
விசைக்குமயி லுற்றூ ருவோன்
விண்டுடுவை வெண்பொரியி னுங்கிமகிழ் செஞ்சுடிகை
மிக்கொளிர் கொடிச்சே வலோ

னெஞ்சலில்க டுந்திறல்கொ ளொன்பதின்மர் நன்றுணை
யிலக்கரொ டடற்பூ தர்கோ
னின்பமுறு மன்பர்சுர ரிந்திரன்மு குந்தனய
னிச்சைதரு மிக்கா னவேள்

குஞ்சரிசெ ழுங்குறவர் வஞ்சியணை யுங்குமர
கொட்டியருள் சப்பாணியே
கும்பமுதி துங்கர்துதி கம்பைவதி யெங்கள்பதி
கொட்டியருள் சப்பாணியே. 36

எங்கடவு ளுங்கடவு ளென்றமர் செயும்பலரு
மிக்கடவுள் மெய்த்தேவெனா
இன்புடன ணைந்துபல நன்றுதிபு கன்றுயன
தெத்தனை நினைத் தாலுமே

யங்கவைகள் சங்கையில தங்கைநெலி யங்கனியி
னற்பினொடு பெற்றேயுய்வா
னங்கயிலை யின்கணுறை சங்கரர் பெருங்கருணை
யச்சண்முக முற்றேகியோர்

நங்கள்பு வனங்குலவு தென்றிசைம கிழ்ந்துபுரி
நற்றவனின் வெற்பூரெலா
நங்கைசுரர் தம்பிடியும் வெங்குறவர் பைங்கொடியு
நட்டகட வுட்டாருநேர்

கொங்கலர் கடம்பலர நின்றென விளங்குகுக
கொட்டியருள் சப்பாணியே
கும்பமுதி துங்கர்துதி கம்பைவதி யெங்கள்பதி
கொட்டியருள் சப்பாணியே. 37

அந்தண னரும்பதமு மஞ்சன வணன்பதமு
மற்புறுசு வர்க்காதியா
மங்கவையும் வந்திடினு மங்கவை சிறந்தவென
வற்பமு நினைப் போமலோ

மெந்திட மிருந்திடினு மெங்கண்முரு கன்பத
மிசைப்பது மறக்கோமெனா
வின்பநிலை நின்றவென தன்பர்பத கஞ்செய்கில
ரெய்ப்பிலவ ரிப்பாரின்மே

னந்துவினை பின்செயினு நன்றெனவு வந்திடுது
நற்குறவர் பொற்பாவையே
நம்பிவரை விண்டிடென வெம்பழி புகன்றிடினு
நட்புமிக வைப்பேனெனாக்

கொந்தலர் கரம்பொர விளம்பரு ளிளங்குமர
கொட்டியருள் சப்பாணியே
கும்பமுதி துங்கர்துதி கம்பைவதி யெங்கள்பதி
கொட்டியருள் சப்பாணியே. 38

வேறு

கங்கா தரசிவ வென்றே பலகலை
கற்றவர் சொற்றாரேல்
கஞ்சா னனமமு தஞ்சேர் நகையின
கத்திடர் பட்டேயோர்

பங்கா ருமையுறி லெங்கோ னொடியது
பற்றறு விப்பானேர்
பஞ்சா ரடியின் வணங்கா முனமமை
பக்கமி குத்தாய்தா

னங்கா சறவணை யுஞ்சீ ரிதுவென
வற்புட னுற்றோரீ
ரந்தா மரைக ளுடன்றார் கடலை
யளித்திரெ னொப்பாநீள்



கொங்கார் கரமலர் கொண்டே குருபர
கொட்டுக சப்பாணி
கும்பா ரியன்மகிழ் கம்பா புரகுக
கொட்டுக சப்பாணி. 39

வன்றா ரகனை யவன்சார் மலையை
வடித்த புலத்தோனே
மங்கா தெதிர்புகு சிங்கா னனனை
மடித்த வலத்தோனே

யன்றார் கலியிடை வன்சூ ரழிய
வடர்த்த சலத்தோனே
யண்டா திப்னை மகிழ்ந்தே சுரரொ
டளித்த நலத்தோனே

துன்றா ரணநெறி நின்றாய் குநர்தம
சுத்த குலத்தோனே
தொண்டாய் வருமவ ரன்பாய் மருவு
சுவர்க்க தலத்தோனே

குன்றா டறுமுக வென்றார் தமதருள்
கொட்டுக சப்பாணி
கும்பா ரியன்மகிழ் கம்பா புரகுக
கொட்டுக சப்பாணி. 40

## 5. முத்தப்பருவம்

அடாதன புரிந்தவ சுரக்குழுவை வாரிமுன
மயில்வேற் கருத்து மழகற்
கருளினங் குஞ்சரியை மற்றுமென் சீதன
மளிப்பதென் றோர்ந்து மகவான்

கொடாநின்ற நிதிகாம தேனுசிந் தாமணி
குளிர்ந்த கற்பக மேகமுங்
கூடிவள னுதவவயி ராவதமொர் நதியிற்
குலாவுகென வுதவு நாட்டின்

விடாமகிழ்வி னுழவர்கள் படாமுலை யுழத்தியர்
விருப்பின் முட்கோ லெடாமன்
மேவியோர் பூட்டியவர் மென்றோளை வெல்லவயல்
விளைசெங் கரும்பொ டித்துக்

கடாமுதுகின் முத்துறச் செய்யுழுங் கம்பைவேள்
கனிவாயின் முத்த மருளே
கச்சியே கம்பர்தரு சச்சிதா னந்தகுரு
கனிவாயின் முத்த மருளே. 41

ஈராமை தாங்கமே லீரரவி ருப்பமிசை
யிருமந் தரங்க ளோங்க
விணையிலா விருகடலி ருந்துமிசை யோரமுத
மேற்கு மெளியேன் களிக்கத்

தாராமை யென்கொலோ தையனல் லாயுனைத்
தஞ்ச டைந்தே னென்னநற்
சதிர்பேசி யொத்தமன திற்கூடு கணவனென்
றனைவிடுத் தேகி யின்னும்

வாராமை யான்வந்து சேராமை யான்மனம்
வருந்துவன் வருந்தா மைநீ
மணவாள னுக்கோதி வருகென்னு முன்னோதி
வருசுகச் சொல்லின் மகிழ்கூர்

காராமை யோதியிற் பலர்குலவு கம்பைவேள்
கனிவாயின் முத்த மருளே
கச்சியே கம்பர்தரு சச்சிதா னந்தகுரு
கனிவாயின் முத்த மருளே. 42

தெளிகொண்ட சரியையுங் கிரியையுமி யோகமுந்
தேர்ந்துமேன் ஞான மரபாற்
சேராது தீமைபுரி யாராயி னுஞ்சரி
சிரத்தையொடு சிறிது நேர

மொளிகொண்ட கைலாய கிரிமேய வரநேய
வுமைசேய கார்த்தி கேய
வோஞ்சரவ ணோற்பவா வென்றருண கிரிநாத
னோதுபுக ழோது வாரே

லளிகொண்ட வாடவர்கள் கற்பினுயர் மாதருட
னன்பினொடு மவரை யண்மி
யார்ந்துபணி விடைபுரிந் துணவாதி நல்கியவ
ரருள்பெற்று மகவா திசீர்க்



களிகொண்ட மனையறம் பேணிவாழ் கம்பைவேள்
கனிவாயின் முத்த மருளே
கச்சியே கம்பர்தரு சச்சிதா னந்தகுரு
கனிவாயின் முத்த மருளே. 43

வேறு

வயங்கும் பொன்னார் சடைப்பெருமான்
வலக்க ணாகிப் பகற்கதிராய்
வருபாற் கரனுக் கினியனென
வளரும் பெருமை யுரைக்ககிலேன்

றயங்குந் திரைநீர்ப் பூக்களுக்குத்
தனிவேந் தாகி முத்துயிர்க்குந்
தன்மை யுடையே னெனக்கொருநீ
சரியன் றெனுந்தா மரைக்குடைந்து

மயங்குங் குமுத மதியுடன்போய்
வருந்தித் தவஞ்செய் துன்னருளான்
மகிழ்வுற் றடைந்த பெருவாழ்வின்
மாண்பி தென்றே யடியர்கண்கள்

முயங்கும் வதனச் செவ்வாயின்
முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவுங் கம்பைவளர்
முத்தே முத்தந் தருகவே. 44

போந்து காரைக் காற்கனிக்குப்
புதுமாங் கனியொ ரிரண்டளித்த
புனித னால்வாய்த் தமையனுக்குப்
புசிக்க வொருமாங் கனிகொடுத்து

மாந்து கென்று தனக்கியாதும்
வழங்கா மையினக் கனிமரத்தை
மாய்ப்பான் போலச் சூர்மாவை
மாய்க்க மகிழ்ந்து கைம்மாறாய்க்

காந்து குலிசப் பாணிதன
கற்ப தருவிற் கனிந் தவத்தில்
கனியொன் றளிப்ப மிசைந்துபினுங்
களவிற் புனமாக் கனியைவெளவி

மோந்து சுவைத்த செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவுங் கம்பைவளர்
முத்தே முத்தந் தருகவே. 45

தில்லை யரும்புஞ் சிற்சபையிற்
றிருக்கூத் தரும்புந் திருத்தாதை
சிவகா மித்தா யிருவோருஞ்
சிந்தை மகிழு மிருதலனாக்

குல்லை யரும்பும் புயமாமக்
கொண்ட லமரு மொருநிலனாக்
கோதை மாரு மாடவருங்
கூட வளைந்து நறையரும்பும்

வில்லை யரும்பு முவகையிற்கொள்
வேண்மைத் துனனார் படைக்கலனா
விரும்பத் தினைப்பூம் புனத்தெயினர்
விரும்பி வளர்த்த கொடிக்குமுத

முல்லை யரும்ப வரும்புநின்வாய்
முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவுங் கம்பைவளர்
முத்தே முத்தந் தருகவே. 46

ஈனம் பழுத்த வைம்பாசத்
திடராற் றிடராப் பவக்கடல்வீழ்ந்
தேறுந் துறையொன் றறியாதே
யிச்சை யலையா னெற்றுண்டே

யூனம் பழுத்த வெழுவகையா
முருவுற் றுழலு மவர்நிற்ப
வுருவு மருவு முருவருவு
மோரொன் பானுங் கடந்தப்பான்

ஞானம் பழுத்த திருவாளர்
நானீ யென்னா துணர்ந்துவந்த
நயமாய் நிறைந்த பரமசிவ
நம்ப னார்தந் திருச்செவியின்



மோனம் பழுத்த செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவுங் கம்பைவளர்
முத்தே முத்தந் தருகவே. 47

அம்மை மடியி னமருநினை
யமலக் கமலத் தணங்குவந்தே
யாசை மருக நின்மூரற்
காசை யுடையே னருளுகெனச்

செம்மை நிறத்துத் திருமாமி
செய்வ னவ்வா றெனக்கென்னை
திரும்பக் கைம்மா றளிப்பதுநீ
செப்பு கெனநின் றிருமார்பிற்

கொம்மை முலையின் ஞெமுங்கவணை
குறப்பெ ணளிப்ப னெனக்கள்ளக்
குறவற் பிடித்த குறத்திகொலோ
கோக னகையோ வெனக்கைதட்டி

மும்மை யுலகும் வெளுக்கநகை
முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவுங் கம்பைவளர்
முத்தே முத்தந் தருகவே. 48

வேறு

அண்ட ரண்ட முந்து லங்க
வவிர்ம குடசி ரத்தனே
யங்க தங்க டங்கி டங்கொ
ளமல விருப தத்தனே

யெண்டி கந்த மும்பி றங்க
விசைப னிருபு யத்தனே
யின்பு னம்பு ரந்த நங்கை
யிளக வணையு ரத்தனே

கண்டு கொண்ட தொண்ட ரன்பு
கமழ வளர்சு கத்தனே
கந்த வண்க டம்பி னென்சொல்
கருது கருணை யத்தனே

முண்ட கன்ப ணிந்து கெஞ்சு
முதல்வ தருக முத்தமே
முந்து கம்பை வந்து கந்த
முருக தருக முத்தமே. 49

வன்பு லன்க ளைந்தெ றிந்து
வனனின் மருவி நித்தமே
மண்டு மஞ்சி னொன்றி நின்று
மதியி னமுது துய்த்துமே

லென்பு டம்பு கொண்டி ருந்த
விணையி லவரு மெட்டொணா
திங்கு மங்கு மெங்கு மொன்ற
தெனுமொர் சொருப வத்துவே

நன்பு னங்கொ ணங்கை கொங்கை
நயன வயிலை நத்தியே
நம்பு மன்பு கொண்ட ணைந்து
நலனை யுதவு நித்தனே

முன்பு தொண்டர் கண்டு கொண்ட
முதல்வ தருக முத்தமே
முந்து கம்பை வந்து கந்த
முருக தருக முத்தமே. 50

## 6. வருகைப்பருவம்

அம்பொன்மணி நூபுரக் கிண்கிணி யரிக்குர
லடிக்கமல வண்டி னார்ப்ப
வரையிலணி மணிகிண்கி ணெனுமோசை யுலகுயிர்க
ளஞ்செவிக் கமுதம் வார்ப்பச்

செம்பொன்மலை யருவியின் முத்தார வணிமாலை
திகழ்சன்ன வீர மிளிரச்
செவிமகர குண்டலம் புயகிரி யுதித்தவா
தித்தமண் டலம்வி ளக்கப்

பைம்பொன்மலர் வதனச்செ வாம்பறரு குழவியிற்
பான்முல்லை நிலவெ றிப்பப்
பட்டமுஞ் சூழியச் சுட்டியுந் திலதமும்
பன்னிருகண் மலரு மொளிரக்



கம்பன்மடி காமாட்சி யம்மைமடி யிற்குலவு
கந்த நாயகன் வருகவே
கந்தமலர் நந்தவன சுந்தர மிகுந்தகன
கம்பைவாழ் குகன்வ ருகவே. 51

பனிமா மலைக்கரசு தந்தவுமை யம்மையும்
பரமனும் விரும்பி நோக்கிப்
பரிவின்மக் காள்வருக வென்றலும் விகடகண
பதிபெரிய னானா தலா

னனியாசை கொண்டுசெல் வன்செல்வன் முன்னென
நடக்கவண் ணாலு னதுசொன்
னன்றுநீ பெரியன்வத னத்தினோ கையினோ
நயனத்தி னோவா யினோ

முனியாது கூறுகென வாறுமுக வயதினே
மொழிவதென் னெனவ யிற்று
முக்கியம் பெரியனுன் றந்தைக்கு முபதேச
மொழிராய குருயா ரெனாக்

கனிவா யதுக்கிழு வருமகிழ விளநகைசெய்
கந்த நாயகன் வருகவே
கந்தமலர் நந்தவன சுந்தர மிகுந்தகன
கம்பைவாழ் குகன்வ ருகவே. 52

அங்கைமிசை வருகென்ன மலைமாது மலைமாது
மன்புடன ழைக்க வழையா
தார்வமொடு நோக்குட விருக்குமை யன்கரத்
தண்மியிள நகைசெய் நின்னை

யெங்கைமேல் வந்துமடி மேற்குலவு மறிவுள்ள
வேந்தலிவ் வன்னை மார்க
ளிருவரினி னக்காசை யார்மீது கூறுகென
வெம்பிரான் யான்சொல் வதென்

சங்கையில் லாதறன் மாதாவின் மேலெனத்
தாய்மாரும் யான்யா னெனச்
சமர்செய விராறுகண் பன்னிரா யிரமெனத்
தழைவுறக் கண்டு களிகூர்

கங்கைமக னம்பிகைம கன்பரமன் மகனெங்கள்
கந்த நாயகன் வருகவே
கந்தமலர் நந்தவன சுந்தரமி குந்தகன
கம்பைவாழ் குகன்வ ருகவே. 53

அலசலற வுலகையொரு நொடியின்வ லம்வருமவற்
கருள்வனென வெனைய கற்றி
யடிவலஞ் செய்தா னெனப்பெரு வயிற்றனுக்
கன்பின்மாங் கனிய ளித்தி

குலசயில மெட்டூர்ந்து கண்டநா வற்பழங்
கொய்தருந் துவனெ னாமேற்
குதிகொளு நினக்கதுகொ டுங்காஞ்சி ரங்காய்
குமட்டுமெனு மரனை யையா

சிலசமய நின்னாசை மகனேச வருமுனது
இன்னுயிர்வி டுப்ப னென்னாச்
சீக்கிரம் போய்க்களம் பற்றிவிக் கிப்பரன்
றிக்குமுக் காட வம்மை

கலசமாங் கனியமுதி துண்கென விடுத்துவரு
கந்த நாயகன் வருகவே
கந்தமலர் நந்தவன சுந்தரமி குந்தகன
கம்பைவாழ் குகன்வ ருகவே. 54

தண்ணங் கடுக்கையணி யண்ணற்கு வேதத்
தனிப்பொருளு மம்மை யார்க்குச்
சந்தோட முங்கரி முகத்தமைய னார்க்குத்
தடம்புய பராக்கிர மமுநீண்

மண்ணன் றளந்தமாற் காழியும் பிரமற்கு
வையம்ப டைக்கு முறையு
மகவான் றனக்கரசு மிந்திரா ணிக்குநன்
மங்கிலிய முஞ்சு ரர்க்கு

விண்ணகமு முனிவர்க்கு ஞானமும் வள்ளியெனு
மெல்லிக்கு மமரர் யானை
மின்னுக்கு மிருபாலு முருககுரு பரகுமர
வேளென்னு மன்பு ளோர்க்குக்



கண்ணருட் டிருவடியு முறைமையி னளித்திடுங்
கந்தநாய கன்வ ருகவே
கந்தமலர் நந்தவன சுந்தர மிகுந்தகன
கம்பைவாழ் குகன்வ ருகவே. 55

வேறு

கஞ்சத் தவிசிற் திருவன்னார்
கனஞ்சேர் சூழற்கூட் டகிற்புகையுங்
கழனி விளையுங் கழைச்சாறு
காய்ச்சும் புகையு மனைதோறு

நெஞ்சத் துவப்பின் விருந்தோம்பி
நிதமுஞ் சுவைச்சோ றடுபுகையு
நிகமா கமத்தின் முறைமறையோர்
நீட்டும் வேள்விப் புகையுமன்பாய்த்

தஞ்சத் தருள்சண் முகப்பெருமான்
சந்நி தானத் தன்பரிடுந்
தகுகுங் குலியப் புகையுமொன்றாய்த்
தழைத்து முகிலாய்ப் பொழிவிதென

மஞ்செப் பொழுதும் பொழிகம்பை
வள்ளால் வருக வருகவே
மதுரைச் சங்கப் புலவர்சிகா
மணியே வருக வருகவே. 56

தளஞ்சால் வனச முகங்காட்டத்
தண்ணங் குமுதம் வாய்காட்டத்
தரள நிரைகண் கைகாட்டத்
தயங்கு நீலங் கண்காட்ட

வளஞ்சால் வள்ளை செவிகாட்ட
வப்பு நிலைநன் கவுள்காட்ட
வணையுங் குமிழி முலைகாட்ட
வவிரும் பாசி குழல்காட்ட

வுளஞ்சா லன்பி னீராட
வுற்ற மடவார் தங்கணவர்க்
குயிரன் னார்வா ழுறையுளென
வூடி யுடன்றா லெனத்திளைக்கும்

வளஞ்சால் குளஞ்சால் புனற்கம்பை
வள்ளால் வருக வருகவே
மதுரைச் சங்கப் புலவர்சிகா
மணியே வருக வருகவே. 57

முருகா வென்றோர் காற்சொலுமுன்
முக்கா லெனத்தன் னிருகாலின்
முகிண்மென் முலையாள் வள்ளியம்மை
மோகத் தினும்வே கத்தவர்க

ளருகா வடைந்து வேண்டியவா
வருளிச் சேவன் மயிலயிலு
மவரைக் காக்க வெளிநிறுவி
யகத்தா மரைபூம் புனமாகப்

பெருகார் வமதாம் வள்ளியுடன்
பிரியாப் பிரிய முடனுறையும்
பெருஞ்சீர்க் கருணைத் திறன்றெரிந்த
பெரியோ ரன்பா யுருகியரி

மருகா முருகா வெனுங்கம்பை
வள்ளால் வருக வருகவே
மதுரைச் சங்கப் புலவர்சிகா
மணியே வருக வருகவே. 58

வேறு

அலகி லுலக முழுது மொளிர
வன்பி னுதய பருதியே
யரனு மரியு மயனு மகிழு
மந்த ணமுத மதியமே

யிலகு மிமய குமரி யுதவு
மின்ப நிறையு மதலையே
யினிய துதிசெ யடியர் நிதமு
மெங்கு மறியு முருவமே

வலிய வெனது கொடிய மனதின்
வந்து நிலவு சொருபமே
வனன்கின் மருவு குறவர் தமது
வண்டு நுகரு நறவமே



கலவ மயில்க ளகவு பொழில்கொள்
கம்பை முருக வருகவே
கருணை வடிவி னடன மிடுமொர்
கந்தன் வருக வருகவே. 59

அதுலன் வருக வபயன் வருக
வண்ட ரதிபன் வருகவே
யமலன் வருக குமரன் வருக
வன்ப ரிறைவன் வருகவே

சதுரன் வருக தருணன் வருக
சம்பு குரவன் வருகவே
சரசன் வருக சுகுணன் வருக
சண்ட மயிலன் வருகவே

புதியன் வருக பழையன் வருக
பொங்கு மமுதன் வருகவே
புனிதன் வருக புலவன் வருக
புந்தி முதல்வன் வருகவே

கதியை யருண னகர சிகர
கம்பை முருகன் வருகவே
கருணை வடிவி னடன மிடுமொர்
கந்தன் வருக வருகவே. 60

## 7. அம்புலிப்பருவம்

தேனார்க டுக்கையணி செஞ்சடைத் தாதையின்
றிகழ்விழியின் வளர்வ தாலோ
தீக்கடவுண் மைந்தனென வந்ததோர்ந் தோகலைகள்
சேரும்வடி வங்கு றித்தோ

வானாட ருக்கமுத முதவுவது நோக்கியோ
மாலையுங் காலை யுந்தான்
மலைமேவு வாழ்க்கைகண் டோவுலகெ லாமுய்ய
வண்ணிழல்செய் சீர்மை கொண்டோ

மானார்க ளாயகார்கார்த் திகைவிசா கமுமன்பு
மருவவரு வதுநா டியோ
வடிவேற்கு மாரனுந் தன்னைநிகர் நண்பனென
மற்றுனை யழைக்க லுற்றா

னானாலு நின்செல்வ மென்செல்வ மாதலா
லம்புலீ யாட வாவே
யம்புயத டங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாட வாவே. 61

கனகமலை நித்தன்மரு கோனிவனு நீயுமோ
கனகமலை நித்தன் மருகோன்
கயவல்லி கண்மன்ற லோனிவனு நீயுமோ
கயவல்லி கண்மன் றலோன்

பனகமிசை யுறவிருந் தோனிவனு நீயுமோ
பனகமிசை யுறவி ருந்தோன்
பருவத்து வந்தமெய் யோனிவனு நீயுமோ
பருவத்து வந்த மெய்யோன்

வனகலா தாரிசே யோனிவனு நீயுமோ
வனகலா தாரி சேயோன்
வரதவ பயக்கரத் தோனிவனு நீயுமோ
வரதவ பயக்க ரத்தோ

னனகனிவ னுக்குநீ சொல்லொத்தி பொருளல்லை
யம்புலீ யாட வாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாட வாவே. 62

வெம்பரிதி கொளவீந்த கலைகள்பின் கவர்தியிவன்
வேண்டியீந் தனகவர் வுறான்
மேவுகுன் றொன்றிரண் டுண்டுனக் கிவனுக்கு
விளையாட வெண்ணில் குன்றாந்

தம்பமாய்க் கடைகடலி னொந்தசைந் தாயிவன்
றன்னிலையி லணுவு மசையான்
றாயின்வா யலறவரு வாயிவன் றாயர்க
டழைத்துவாய் வாழ்த்த வருவா

னம்பன்முக் கண்ணினொரு கண்ணாயி ருத்தியிவன்
ஞானக்கண் மணியா யினா
னாடிநின் னினுமதிக னிவனென்று யாநின்று
நவில்வதொரு பொருளன் றுகா



ணம்பொன்மலை நங்கையரு மந்ததிரு மைந்தனுட
னம்புலீ யாட வாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாட வாவே. 63

மைம்முக விராநினைவி டாவவ்வி ராவிவனை
வாழ்த்துமவ ரையும டைவுறா
வானிரவி யைக்கண்டு கூசுதியவ் விரவிவன்
வடிவே லொளிக்கஞ் சுமால்

பைம்முக வராவினுக் கஞ்சுதியவ் வரவிவன்
பரியினுக் கஞ்சு நாளும்
பயவாரி நீந்துதிய வாரியிவ னடிபரவு
பண்ணவற் கோரு முந்தா

நைம்முக களங்கநீ யகளங்க னிவனிவை
நயர்ந்துணர்தி மதியல் லையோ
நங்கள்சேய்க் கெவ்வழியு மெள்ளளவு மொப்பலை
நாடினொரு கோடி சான்றா

மைம்முகக் கடவுண்மகி ழறுமுகக் குருமணியொ
டம்புலீ யாட வாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாட வாவே. 64

தேய்மதிய னாகென்ன நின்னுடைய சின்னமதி
தேர்ந்துவெஞ் சாப மிட்ட
சிறுவிதியை முன்றரும் பெருவிதியை யன்றருஞ்
சிரமதிற் குட்டி யன்னான்

றூய்மதி முகங்கவிழ வவமதி புரிந்துபின்
சுமதிவர வருள்செய் தவித்
தோன்றனீ சற்குருது ரோகியென் றேநன்கு
தோற்றியு ழைக்க வேயுங்

காய்மதி லெரித்தவன் றலைமே லிருந்திடுங்
கனசெல்வ முடையே னெனாக்
கருமங்கொ ணீயிவன் காலுதையி னாலொரு
கறங்கிற் சுழன்று வீழ்தி

யாய்மதிகெ டுதியுனது பேய்மதிவி டுதிசடுதி
யம்புலீ யாட வாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாட வாவே. 65

மயலகன் றோர்க்குமரி தானவிக் குருராசன்
வாவென நினைக்கூ வியும்
வரவில்லை யென்றுசின வுந்தோறும் வேடுவர்
மடக்கொடியென் மாம டிகளார்

கயலகன் கண்மாமி மகிழநட மாடினர்
கடுப்பநின தாடலி யானுங்
காண்குறவி ரும்பினனெ னப்பிணங் கிடிலுனது
காட்சி வதனப் பகைஞனே

முயலக னெனப்பதத் தூன்றியா டும்பொழுது
முதுகிறு மெனப்ப யந்தே
முன்வரற் கஞ்சினனெ னத்தப்பு வித்தனம்
மோசம்வரு மினிநிற் றியே

லயலகன் பழிபடுதி யன்பரன் புக்கெளிய
யம்புலீ யாட வாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாட வாவே. 66

சிவனென்ன வரியென்ன வயனென்ன விந்திரன்
றேவர்முனி வோர்க ளென்னச்
செகதலத் தோரென்ன விவரெலாஞ் சந்ததஞ்
சிந்தித்து வந்திக் குமோ

ரிவனென்ன நீயென்ன விவனுனை யழைத்திடற்
கென்னமா தவமி ழைத்தா
யேனென்ன விதுவரையும் வந்துகேட் டாயில்லை
யென்னநின் னிறுமாப் புகா

ஹுவனென்ன நின்றநவ வீரருண் முதல்வீர
னுற்றுனைக் காலா லுதைத்
தொருசகட் டினினுருட் டிக்கொண்டு வருவனிது
வுண்மைநீ யுய்ய வெண்ணி



னவனென்ன வவளென்ன வதுவென்ன நின்றவனொ
டம்புலீ யாட வாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாட வாவே. 67

கமலமட மங்கைவத னத்தழகு காண்பளக்
கரியமுகில் வண்ண னுஞ்செங்
கண்ணழகு காண்பன்வளர் கலைவாணி சொல்லழகு
காண்பன்முக் கட்டா தையும்

விமலமுறு சொற்பொருளி னழகுகாண் பன்விதி
வியன் கரத் தழகு காண்பான்
வீறுதோ ளழகிந்தி ராணிகாண் பாளும்பர்
வேந்துவே லழகு காண்பா

னிமலமன வடியரடி யழகுகாண் பார்கவுரி
நின்றுபின் னழகு காண்பா
ணின்னொத்த வாதித்தன் வடிவழகு காண்பனொரு
நீயுமவ ரொடுகு ழமியே

யமலமென் னகையழகு காணலாஞ் சமயமீ
தம்புலீ யாட வாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாட வாவே. 68

சொற்கால மிருமூன்று மன்பர்கள ழைக்குமுன்
றுன்னுற வணங்கி மிக்க
துதிசெய்து கதியெய்து சந்நிதா னப்பெருமை
சொல்லுதற் கெளிய தலநீ

முற்கால முற்றமா பாபமுஞ் சாபமும்
மோயாத கயரோ கமும்
முயலெனுங் கறையும்வரு கோட்கஞ்சு குழையுமெய்ம்
முதுகூனு நீங்க வென்றாற்

றற்காலம் வந்திடுக வுய்யலாஞ் சரவணத்
தனையனு மழைக்க லுற்றான்
றாதைபா லஞ்சுதலை யுண்டிவன் பாலாறு
தலையுண் டமர்ந்து வாழ்வா

யற்கால மதியுனது நற்கால மிக்கால
மம்புலீ யாட வாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாட வாவே. 69

முகிலாண்ட வண்ணமா துலனிதய மாமியா
முளரிமா னொடுபாற் கடன்
மொய்யமுற் றந்தைமுக மன்பனா மத்திரி
முனித்தகை விழிக்கண் வந்தாய்

நிகிலாண்ட பிண்டமு நிறைந்தசங் கரபிதா
நேத்திரத் தினும மர்ந்தாய்
நின்னையம் முறையினெம் முறையினா யினுமன்பி
னீவா வெனக்கூ வினான்

புகிலாண்ட லைத்துவச வெமதாண்ட வன்கருணை
பூண்டளவ ளாவி வாழ்வாய்
புலனறிக லாநிதி மதிக்கடவு ளுன்பெரும்
புண்ணியத் தவமென் கொலோ

வகிலாண்ட கோடிபிர மாண்டநா யகருகனொ
டம்புலீ யாட வாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாட வாவே. 70

## 8. சிற்றிற்பருவம்

பிறக்கும் வயிரச் சிலையடுப்பும்
பெருஞ்செம் மணிதீக் கனல்விறகும்
பெட்பி னுயர்பொன் பாத்திரமும்
பெய்யு முலைநற் பனிநீரு

நிறக்கும் வெண்முத் தரிசியுமாய்
நீடுஞ் சிறுசோ றட்டுமற்றை
நீல மணியா தியகறியாய்
நிலவ வமைத்து வல்லிருளைத்

துறக்கும் பவள விளக்கேற்றிச்
சுரிமென் குழலே மணல்வீட்டிற்
சுவாமி நினக்கே படைத்திடுவேஞ்
சுரக்குங் கருணை புரிந்தெமக்கே



சிறக்கும் விருந்தாய் வருஞ்சேயே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 71

வேதத் தனிமா வடிமுளைத்த
விமலச் சுடரை வெண்மணலான்
விதியி னமைத்தா கமப்படியே
விரும்பிக் கவுரி பூசைசெயும்

போதத் ததனை யழிப்பதற்குப்
பொங்கி யெழுநின் னகரன்னை
புரிந்து யாஞ்செய் மணல்வீட்டைப்
பொள்ளென் றழிக்கப் போதியென

வோதத் தடையின் மழவிடைபோ
லுற்றாய் கொல்லோ வுளத்தாலு
முனக்கு முன்றாய் தனக்குமந்தோ
வொருபுன் பிழையுஞ் செய்தறியோஞ்

சீதத் தளிர்ச்செஞ் சீறடியாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 72

உன்றா யுமையிவ் வுலகமெலா
முவந்தோர் சிற்றி லெனவயர
வுந்தை கணத்தி னழிக்குமவ்வா
றொருநீ முறையிற் புகுந்தாயே

னன்றாய்க் குறவர் வளர்த்தகொடி
நாகர் வளர்த்த விளம்பிடியு
நாடி யிழைக்கும் வண்டன்மனை
யோடி யழித்தி நவில்வார்யா

ரின்றா யத்தோ டியாமிழைத்த
வெழிலார் மனையை யழிப்பதனுக்
கென்ன முறையோ நினைப்புனைந்திங்
கினிது விடுத்த வன்னையின்பாற்

சென்றாய்ந் தறிதி யருட்குழந்தாய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 73

ஆசு படியு மசுரமின்னா
ரல்லே நினக்கே யகம்படிமைக்
கன்பு படியு மனமுடையே
மமைக்கு மணல்வீ டழிப்பாயேற்

பாசு படியு மிலைக்காவிற்
பமரம் படியு மலர்க்கடம்பின்
பைந்தார் மணக்குந் திருமேனி
படியும் விசும்பு மாசுபட

மாசு படியு மைப்படியும்
வாட்க ணீலி யுன்னுடைய
மாதா வறிந்தா லெப்படியோ
மற்றப் படியாம் படிப்பதென்னே

தேசு படியுஞ் சிவப்படியாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 74

ஒருத்தி மணநா யகனாக
வொருத்தி மணப்பெ ணாகவமைத்
துள்ள பலரு மவரவருக்
குவந்த படியே முறையியற்றி

யருத்தி யுடன்யாம் வண்டன்மண
மய்ர விழைக்குஞ் சிறுவீட்டை
யழித்த லழகா வுலகேழு
மளித்தா ளளித்த வழகாநீ

யிருத்தி மணநா யகனாக
யாங்க ணினக்கே மணமுடிப்பே
மெல்லாச் சிறப்புஞ் செய்கின்றே
மெயின மடவாட் குரைக்ககிலேந்



திருத்தி யனையை யலங்க ரிப்பேஞ்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 75

அற்ப முடையே மணல்வீட்டி
னமைக்கும் பவள விளக்கவித்தே
யகல்கின் றாயை யென்புரிவோ
மனந்த மறைக்கு மெட்டரியாய்

பற்ப றிசையுங் காணுகின்றாய்
பாட லாடல் புரிகின்றாய்
பண்ணாக் குறும்பும் பண்ணுகின்றாய்
பார்வை யுள்ளு நுழைகின்றாய்

கற்ப தருவே மலர்மருவே
கனியே கனியி னறுஞ்சுவையே
கண்ணீ ராறா வுடையையெமைக்
கண்ணீ ராறாச் செயனன்றோ

சிற்ப குமர குருசரணஞ்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 76

சுரவா ரணிமுன் மணந்திருப்பத்
தூய வமுதங் கிடைத்திருப்பத்
தொழுவோர் பலருஞ் சூழ்ந்திருப்பச்
சொல்லா தகன்று தினைப்புனத்திற்

குரவா ரணிமைக் குழற்குறத்தி
கொடுத்த தினைமா வுண்டுமதன்
கோபந் தணித்தி யென்றுகரங்
கூப்பி மருவி யொருவிமற்றோ

ரிரவா ரணியந் தனினடந்தவ்
வெயின மானைத் திருடினையென்
றிகழ்ந்த துளதோ வன்றியுமென்
னிழைத்தோம் பிழைத்தோ மெனினழித்தி

திரவா ரணிதன் சிறுகுமரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 77

காரார் மலக்கா டறுத்தவர்தங்
கரண மொருப்பட் டினிதமரக்
கலின்செய் பனிரு கரக்கன்றே
கனன்றெஞ் சிற்றி லழித்தியெனிற்

போரார் சூரு ரழித்ததுவும்
பொன்னா டமரர்க் களித்ததுவும்
பொய்யாய் முடியு மையாநீ
புலவர் பெருமா னறியாயோ

நீரார் பெருக்கா னிதநிதமு
நீண்மீன் வான்மீ னொடுமோதி
நிழல்செய் மதியைத் தன்னிடத்தே
நிறுத்த முயலும் விதமுக்ளுஞ்

சீரா ரயிரா வதிநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 78

தறைசூழ் கலையின் வளைசிந்தா
சமனம் புரிந்து வளர்விந்தா
சலத்தை யடக்கி யுயர்சந்தா
சலத்தி னமர்ந்த முனிக்கிந்தா

வுறைதி யெனத்தா ளகந்தந்தா
யுனது பெருமைக் கினிதுவந்தா
முனூற்று மெமது மனையுந்தா
வுதைக்கத் தகுமோ வுரையெந்தாய்

மறையோன் றொழுஞ்சங் கரன்மைந்தா
மலைமா னளித்த வுயர்சிந்தா
மணியே நெடுமான் மகிழ்செந்தா
மரையாண் மருகா வானந்தா

சிறைதீ ரமரர் புகழ்கந்தா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே



திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 79

வில்வச் சடையோன் வெள்ளிமலை
விளங்கு மதன்பாற் கந்தமலை
மேரு மலைமந் தரமலையவ்
விமய மலைவேங் கடமலைசெங்

கல்வத் தணிகை மலைவேடர்
களிப்பி னமரும் வள்ளிமலை
கனஞ்சேர் மயிலை மலைமுதலாக்
கணக்கின் மலையுஞ் செழுநகரு

நல்வைப் பிடங்க டொறுநாளு
நயந்து நனிவீற் றிருந்தருணீ
நங்கள் சிறுவீ டழிப்பதென்னே
நவிலும் படைவீ டாறுவுந்துஞ்

செல்வக் குமர கோட்டமமர்
சேயே சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 80

## 9. சிறுபறைப்பருவம்

பெருநா டவிர்ந்திடா தான்றமெய்ப் புண்ணியம்
பெட்பினொடு செய்யி னுந்தாம்
பேணுமுடல் விட்டுத்த னிப்புகுந் தின்புறும்
பேறுதரு பெருமை பெறுமைந்

தருநாடு போலாது சூற்குழவி கைக்குழவி
தனையர் மனைவியர் நட்பினோர்
தம்மொடுந் தங்களைப் பொந்தியொடு
கொண்டுதிரி
சங்குகண் டாவல் கொள்ள

வருநாடொ றுங்கலன் விமானத்தி னேற்றியவ்
வாழி வாயொலி முழங்க
வருவித்து வரிசைதந் தோங்குபொன் னாடென்ன
வளமிக்க வயிரா வதித்

திருநாட வருள்கூட மகிழ்நீட வற்புதச்
சிறுபறை முழக்கி யருளே
செம்பொன கருக்கினிய கம்பைநக ருக்கிறைவ
சிறுபறை முழக்கி யருளே. 81

காவெலாம் பூவெலாம் வண்டெலாங் கள்ளுண்டு
கானஞ்செய் கனமுழக்குங்
கனியெலாங் கிளியெலாந் தின்றுநற் பேச்செலாங்
கழறிமகிழ் பெருமுழக்குந்

தீவெலா மணம்வீசு நளினமலர் தடமெலாஞ்
செறியும்வெள் வளைமுழக்குஞ்
செய்யெலாம் பயிரெலாஞ் செய்யுழவ ரேரோட்டு
சீர்பாட்டி னிசைமுழக்கு

மாவெலாங் குடிகொண்ட மனையெலாங் கல்யாண
வாழ்த்துவாச் சியமுழக்கும்
வாய்ந்தவ யிராவதத் திருநாட வென்றன்பர்
வாயெலாந் துதிமுழக்குந்

தேவெலாம் புகழ்முழக் குஞ்செவியெ லாங்கொண்டு
சிறுபறை முழக்கி யருளே
செம்பொனக ருக்கினிய கம்பைநக ருக்கிறைவ
சிறுபறை முழக்கி யருளே. 82

நீர்பூத்த மகுடகோ டீரதாண் டவமூர்த்தி
நீடமரு கத்தினொலியு
நீனிறக் கொண்டல்வண் ணக்கண்ணன் மத்தள
நிரப்பொலியு நளினாசனத்

தேர்பூத்த நான்முகக் கிழவனொண் டாளத்தி
னெழுமொலியும் வீரவாண
னீராயி ரங்கையிற் குடமுழ முழக்கொலியு
மிணையிலாப் பானுகம்பன்

பேர்பூத்த சங்கொலியு மிருவர்நல் யாழிற்
பிறங்கொலியு மேனையொலியும்
பிரணவா சாரிநின் சிறுபறை யினொலியிற்
பிறந்தபர மாணுவொலியேற்



சீர்பூத்த பேரொலிக் கவதியுண் டோமெலச்
சிறுபறை முழக்கி யருளே
செம்பொனக ருக்கினிய கம்பைநக ருக்கிறைவ
சிறுபறை முழக்கி யருளே. 83

நுந்தாதை யம்பலத் தாடுமா னந்தநட
நோக்காது நோக்கி மகிழ்கூர்
நுண்ணிடைப் பெருமுலைப் பெருமாட்டி நஞ்சேய்
நொடிக்கும் பறைக்கி ணங்க

வந்தா ளெடுத்தாட வருமோ நுமக்கென்ன
வன்பினுரை யாட நகைசெய்
தாரியன் கல்விசீ டன்றெரிவ னறிதியென
வரனாட வயனு மாலுந்

தந்தாள மத்தளந் தடுமாறி நிற்கநீர்
சண்முகக் குருவை யண்மித்
தான்கற்று வருதிரென வந்துன தருட்சந்நி
தானத்தி னேத்துகின்றார்

செந்தா மரைச்சிறு கரங்கொடு பயப்பயச்
சிறுபறை முழக்கி. யருளே
செம்பொனக ருக்கினிய கம்பைநக . ருக்கிறைவ
சிறுபறை முழக்கி யருளே. 84

அத்தனீ யெமதருமை யன்னைநீ தெய்வநீ
யாபத் தகற்றி யன்பா
யாதரிக் குங்கருணை வள்ளனீ மாரனீ
யாண்மையுள விசய னீயென்

றெத்தனை விதஞ்சொலியு லோபரைத் தண்டமி
ழியற்றினு மிரக்கஞ்செயா
ரிலக்கண விலக்கியக் கற்பனைக் கவியா
லிறைஞ்சியெனை யேத்தவேண்டாம்

பித்தனொடு நீலியும் பெறுதகப் பன்சாமி
பெருவயிற் றான்றம்பியப்
பேய்ச்சிமுலை யுண்டகள் வன்மருகன் வேடுவப்
பெண்மணவ னென்றேசினுஞ்

சித்தமகி ழருள்செய்து மென்றேமு ழக்கல்போற்
சிறுபறை முழக்கி யருளே
செம்பொனிக ருக்கினிய கம்பைநக ருக்கிறைவ
சிறுபறை முழக்கி யருளே. 85

## வேறு

போதி லயன்சம வேதியர் நீதி
பொருந்துநல் வேந்தர்பெரும்
புண்ணியம் வளரப் பொருள்வளர் வாணிபர்
பூமிதிருத் துபுவென்

மாதிர மகிழ்வுற நெற்பயிர் முதல
வளர்ப்பவ ரேனையரு
மன்னி வளர்ந்திடு சீரயி ராவதி
வளநா டுடையரசே

வாதி லெதிர்ந்திடு மைம்புல வேடரை
வாட்டுமெய்ஞ் ஞானமெனும்
வாளுடை யோகியர் காதின் மடுக்குறும்
வண்டச நாதமெனக்

கோதில் குணாகர சோதி தயாபர
கொட்டுக சிறுபறையே
கோபுர முயர்கம் பாபுர குமரன்
கொட்டுக சிறுபறையே. 86

பஞ்சர வஞ்சுக நாடொறு மன்பர்கள்
பாடு திருப்புகழைப்
பழகிய வண்ணம் பாட வதற்குப்
பமரம திசைகூட்ட

வஞ்சர ளப்பொழி லமர்முகின் முழவ
மதிர்த்திட மயிலாட
வழகித ழித்தலை யசையாப் பொன்சொரி
யயிரா வதிநாடா

வெஞ்சர வவுணரை வென்றொரு குஞ்சர
மெல்லி மணம்கொடுபோய்
மிக்குள வந்தர துந்துபி விளவியவ்
விண்ணகர் வீதியின்வெண்



குஞ்சர மிவருங் கடவுட் கோளரி
கொட்டுக சிறுபறையே
கோபுர முயர்கம் பாபுர குமரன்
கொட்டுக சிறுபறையே. 87

மண்டல நரமங் கையர்நீ ரெங்களை
மானுவி ரோவென்னா
வான்மட வார்சொல வானர மங்கையிர்
மற்றுமை யொப்பலமென்

றண்ட மடந்தையர் நாணுற நகைசெய்
தரிவைய ரமரநிவந்
தரமிய மாடம் பொன்னாட் டுயருந
லயிராவ திநாடா

பண்டரு கிளவி யுழத்திகண் மோகப்
பள்ளர்கள் பண்ணைதொறும்
பன்மலை யொப்பிட நென்மலை குவியப்
பயிரிட மழைபொழியக்

கொண்டன் முழக்கென மயில்க ணடிக்கக்
கொட்டுக சிறுபறையே
கோபுர முயர்கம் பாபுர குமரன்
கொட்டுக சிறுபறையே. 88

வானே வளியே கனலே புனலே
மண்ணே வளைகடலே
மலையே பொழிலே தருவே மலரே
மதுவே பரிமளமே

யூனே வூனின துடலே யுடலின
துயிரே யுயிருணர்வே
யுணர்வுக் கொளியே யொளியினு ளொளியே
யோங்கிய பூரணமே

தானே தானாய் வளர்தரும் வாழ்வே
சத்தே சிற்சுகமே
சட்சம யங்களு மற்புறு மற்புத
சண்முக வருள்வடிவக்

கோனே நின்னுரு வுலகதி ராமே
கொட்டுக சிறுபறையே

கோபுர முயர்கம் பாபுர குமரன்
கொட்டுக சிறுபறையே. 89

வேறு

செண்டார் முலையமு துண்டார் கெனுமுமை
செங்கர மலர்மருவே
சிந்தா மணிநிதி யைந்தா ருவுநினை
திப்பிய சுரதருவே

கண்டா தரவொடு தொண்டா யமர்நெறி
கற்றவ ரடைதிருவே
கஞ்சா தனவிதி மஞ்சார் நிறவரி
கட்கொளி தருகருவே

திண்டா னவரெனும் விண்டார் கெடவரு
செற்றம துளவுருவே
செஞ்சே வடிகொடு செஞ்சே மெனநடி
சிற்பர சிவகுருவே

கொண்டா டுநர்மகிழ் தண்டா யுதகர
கொட்டுக சிறுபறையே
கும்பாய் நலனிறை கம்பா புரகுக
கொட்டுக சிறுபறையே. 90

## 10. சிறுதேர்ப்பருவம்

எட்டிக்கு மொளிவீசும் வச்சிரச் சகடச்சு
மெழினீல கோமே தகத்
திலகுபார் தட்டுவயி டூரியப் போதிகை
யிசைந்த பவளக் கால்களுந்

திட்டிக்கு விந்தையாம் பச்சைக்கொ டுங்கையுந்
திகழ்புட்ப ராக மொட்டும்
செம்மணிக் கலசமுந் தரளவெண் கவிகையுஞ்
செய்யபொற் கொடுச மைத்தே

சிட்டிக்கு மயனுக்கு மரிதான பெரிதான
சித்திர மெலாங்கு யிற்றிச்
சேவலங் கொடியுயர்த் தையநின் பொன்னிரத
சேவைகண் டார்வி னவினார்



செட்டிக் குமாரனுக் கழகெனப் புகழுநீள்
சிறுதே ருருட்டி யருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டி யருளே 91

மாரதி மணாளனுக் கைம்படை யளித்தகா
மாட்சியென் மகவு சிறுதேர்
மானுதே ரில்லையென வேகம்ப னெனதுதேர்
மானுமென வஃதி வன்சூழ்

பாரதிற் பூட்டாழி யிளவலாற் பயநீங்கு
பானுவாம் பரியென் னிலோ
பகர்பொருட் கிடனாய வூமைமொழி யைத்தாங்கு
பரசுரு தியேந டத்துஞ்

சாரதி யிவன்கையிற் குட்டுண்ட கதையையான்
சாற்ற வேண்டுவ தோவெனச்
சங்கர னகைக்கவூர் நகைசெய்யு நிற்கிது
தகுந்ததென வுமையை நோக்கிச்

சீரதிக நின்மகன் றேரென்று பரமன்மகிழ்
சிறுதே ருருட்டி யருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டி யருளே. 92

ஐயநீ சிறுதேரை யிம்மெனவு ருட்டினா
லவனிமா னதிரு முடையா
மலைகடல திர்ந்துமேற் பொங்குமவள்
கொங்கையா
மசலங்க ளதிரு மவடன்

றுய்யமண் டபமான வாகாய மதிருந்
துளங்கா ததீப மான
சூரிய னதிர்ந்திடுந் தகழியா மவனெடுஞ்
சோதி யந்தே ரதிருமே

லொய்யெனத் தனியாழி யெழுபுரவி யரவுகயி
றொழியுநிலை விட்ட கன்றே
யோடிநிலை செய்யமுட லவனென் செய்வன்மன
மோயுநீ யறியா ததோ

செய்யவண் டாமரைக் கையது வருந்தாது
சிறுதே ருருட்டி யருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டி யருளே. 93

மருவார் சடைப்பிரான் கயிலாச கிரியென்ன
மாதிமய சயில மென்ன
மாலா லெனக்கமல வல்லிபாற் கடலென்ன
மலரயன் வேத மென்னத்

தருவாணி சங்கமென விந்திரன் வண்பரன்
சயிலமென விந்தி ராணி
தண்கற்ப தருவென்ன மாரனென் கணையெனத்
தக்க ரதியின் புருவென

வொருவாத முனிவர்மக வேதியென வவர்மாத
ரொண்மணித் தீப மென்ன
வுயர்தெய்வ யானைவெள் ளானையென
வள்ளிமா
னொளிர்புனத் திதண மென்னத்

திருவாள ரெமதுபெரு வாழ்வென்ன வொளிருநின்
சிறுதே ருருட்டி யருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டி யருளே. 94

குண்டுகண் வெண்பற் றிரங்குகொங் கைப்பெருங்
குழிவயிற் றாய்ப்பே யழுங்
குட்டியல கையையுதிர வாற்றாட்டி வெம்பிணைக்
குன்றா தனத்தி ருத்தித்

துண்டுபடு தலைகளைக் குடராற் றொடுத்தினிது
சூட்டியவு ணர்க ளுடம்பிற்
றுன்னமுக் காற்றிலக மிட்டுவீழ் கேடகச்
சோரிநீர்த் திட்டி சுற்றி

மண்டுபசி நீங்கறிண வமுதூட்டி யென்செல்வ
மகவுகண் வளர்க வென்னா
வள்ளனின் புகழ்பா டமர்க்களத் திற்றவர்கள்
வரவமுத மலைத்ந் ததூர்



திண்டுவச ரதநிற்க நோக்குசித் தச்சாமி
சிறுதே ருருட்டி யருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டி யருளே. 95

எங்கண்முக மலரவரு மிறைவகாத் தருள்கவென
விந்திரன் கவரி சாய்ப்ப
விமயோர்க ளாலவட் டம்வீச மதிகதிர்க
ளெழில்செய்வெண் கவிகை தாங்க

வங்கமுக வசுரருயிர் நுங்குமந் தகனன்பி
னருகினுடை வாள்பி டிக்க
வளகைவாழ் தனபதி யடைப்பையேந் திடவருண
னார்ந்துபடி யகமெ டுக்கத்

துங்கமுக மன்சொல்லி மாலயனு மருகுறச்
சோதிதரு தேரூர்ந்து போய்ச்
சுடருதய மலைமீது முதரமா மலையினுந்
துன்னு பூதரை மீட்டுவன்

சிங்கமுக னைச்செற்ற சண்முகச் சரபமே
சிறுதே ருருட்டி யருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டி யருளே. 96

நாவேழு கொண்டகன லாண்டலைக் கொடியாக
நம்மருந் துய்க்கு முயர்தேர்
நம்பர்தர வூர்ந்திரண் டாயிர வெளம்பூதர்
நவவீரர் துணைவ ரொடுபோய்

மேவேழு கடலெட்டு மலையொன்ப தொண்கண்ட
மிளிர்பதிற் றாசை யுலக
மேலேழு கீழேழு புவனாண்ட முற்றுமமர்
விளையாடி வடிவு காட்டி

மூவேழு பதினாயி ரஞ்சிங்க மாளிபேய்
மூட்டுதேர்ச் சூர பன்மன்
முனையோய்ந்து மாவாக வேலினிரு கூறாக்கி
மூள்சேவன் மயிலாய் வரத்

தேவேழு மாரதன போற்றவேற் றூர்ந்தவேள்
சிறுதே ருருட்டி யருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டி யருளே. 97

தந்தைநண் புளகுபே ரன்றனைய னண்புறத்
தந்தபுட் பகவி ரதமோ
தான்பிழை செயிற்சிறை செயாதருள் கெனாவிதி
சமைத்துதவு பிரம ரதமோ

விந்தையாய் மருகன்வி ளையாடலுக் கிந்திரன்
விடுத்தவொரு தெய்வ ரதமோ
விந்தைமெய்த் தவமிழைத் தறுமுகற் கீந்தினிமை
மேவுநல் வினோத ரதமோ

விந்துசேக ரன்விலாய் வளையாத படிமேரு
வெண்ணியமை கனக ரதமோ
வென்னென்று சொல்லுகே மென்றுநின்
றிமையோர்க
ளேத்திநோக் கிக்க ளிக்கச்

சிந்தைமலர் திருவாணை யுலகெலாஞ் செய்குமர
சிறுதே ருருட்டி யருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டி யருளே. 98

தித்திக்கு மானந்த வெள்ளமே கோதிலாச்
செங்க ரும்பே சீனியே
திகழ்தரும் பாற்கட்டி யேகனிச் சுவையே
தெவிட்டாத வான முதமே

பத்திக்கு வந்தபதி யேகருணை நிதியமே
பரிபூரண சாந்த மதியே
பரமவே கம்பர்கா மாட்சிமகிழ் செல்வமே
பாவாணர் துதி வள்ளலே

முத்திக்கு வித்தே யருந்தவர் தமக்குமெய்ம்
மூலமே தேவ சேனா
மூர்த்தியே குஞ்சரிகு லாவுமலை யேவள்ளி
மோககற் பகதா ருவே



சித்திக்கு மன்பர்குல தெய்வமா ணிக்கமே
சிறுதே ருருட்டி யருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டி யருளே. 99

அருள்சுரக் குஞ்சோம கிரணமுக கமலமு
மபாங்க நயனவி லாசமு
மணிமுத்து வண்சுட்டி யசைநெற்றி யிற்பொட்டொ
டற்புதப் பொற்பட் டமும்

பொருள்சுரக் குஞ்சுருதி மணமிக்க குமுதவாய்ப்
பொலியுமென் மூர னிலவும்
பொற்புநவ ரத்தினக் குண்டலக் கன்னமும்
புயகனகஃ மேரு கிரியும்

மருள்சுரக் குங்கடிய மலநீக்கு மொளிவீசு
மாணிக்க மாலை மார்பும்
மனவுகிண் கிணிபொன்னி னரைஞாணு
மெய்ஞ்ஞான
வடிவான சீர்பா தமுந்

தெருள்சுரக் குங்காட்சி தெரிசிக்க வருண்முருக
சிறுதே ருருட்டி யருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டி யருளே. 100

கம்பை முருகன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று

உ

# திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்

## பகழிக்கூத்தர்

## 1. காப்புப்பருவம்

### திருமால்

பூமா திருக்கும் பசுங்களபப்
புயபூ தரத்துப் புருகூதன்
போற்றக் ககன வெளிமுகட்டுப்
புத்தேள் பரவப் பொதிகைமலைக்
கோமா முனிக்குத் தமிழுரைத்த
குருதே சிகனைக் குரைகடற்குக்
குடக்கே குடிகொண் டிருந்தசெந்திற்
குமரப் பெருமான் றனைக்காக்க
தேமா மலர்ப்பொற் செழும்பொகுட்டுச்
செந்தா மரையில் வீற்றிருக்குந்
தேவைப் படைத்துப் படைக்குமுதல்
சேரப் படைத்துப் படைக்குமுயி
ராமா றளவுக் களவாகி
யனைத்துந் தழைக்கும் படிகருதி
யளிக்கும் படைக்குத் தனியேசங்
காழி படைத்த பெருமாளே. 1

### சிவபெருமான்

உடல்வளை குழவி மதியமு நதியு
முரகமு மொழுகு செஞ்சடைக் காட்டின
ருமைமுலை குழைய மருவிய புனித
ருரைகொடு பரவு தொண்டரைக் காத்தவ
ருமிழ்திரை மகர சலதியில் விளைவு
முறுவிட வடவை கண்டகட் டேற்றின



ருடைமணி கனக பரிபுர முரல
வொருமுறை பவுரி கொண்டமெய்க் கூத்தினர்
வடவரை முதுகு நெளிநெளி நெளிய
வரிசிலை யெனவோ ரம்பினைக் கோத்தவர்
மறுவறு முழுவெ ணிலவெழு முறுவல்
வளரொளி. யிருளவ னங்கெடப் பூத்தவர்
மருவிய சகள வடிவின ரரிய
வடகலை தமிழ்வ ளம்பெறச் சேர்த்தவர்
மதுரையி லிறைவ ரிரசத பொதுவர்
மணமலி பதயு கங்களைப் போற்றுதும்
இடவிய மதுர வரியளி குமுறி
யிடறிய களப குங்குமத் தூட்பொதி
யிமசல மொழுகு கனதன விரக
மெழுகுகுற வனிதை சிந்தையிற் சேர்ப்பனை
யிடிபடு முரச முழவுட னதிர
வெதிர்பொரு நிருதர் தம்படைப் போர்க்கள
மிடமற முதிய கழுதுக ணடன
யிடவடல் புரியு மொய்ம்பனைத் தூற்றிய
கடதட வழுவை முகமுள கடவுள்
கருணையின் முதிய தம்பியைப் பார்ப்பதி
கரமல ரணையில் விழிதுயின் மருவி
களிபெறு குதலை மைந்தனைப் பூப்பயில்
கடிகமழ் தருவி னிறைமகள் புதிய
கலவியின் மூழுகு கொண்கனைப் போற்றிசெய்
கலைமகள் பரவு குமரனை மதுர
கவிதரு குரிசில் கந்தனைக் காக்கவே. 2

### உமையவள்

அரிபிரமர் சந்த தம்பு கழ்ந்திடு
பரசுடைய நம்பர் பங்கின் மென்கொடி
யகிலலோகமு மாதரத் தாற்ப டைத்தவ
ளரிவைமட மங்கை மென்க னங்குழை
திரிபுரை யணங்கு கங்கை யம்பிகை
யகளமாயனு பூதியிற் பூத்த பொற்கொடி
யபினவை முகுந்தர் தங்கை சுந்தரி
யுரகபண பந்தி கொண்ட கங்கணி
யமுதமூறிய பாடலுக் கேற்ற சொற்குயி

லறுசமய முங்க லந்து நின்றவண்
மறலிபர வும்ப்ர சண்ட சங்கரி
யழகெலாமிது தானெனப் போற்று சித்திர
முரிபுருவ வஞ்சி திங்க டங்கிய
திருமுகம லர்ந்த பைங்க ருங்கிளி
முதல்விபூரணி ஞானவித் தாய்க்கி ளைத்தவண்
முருகுவிரி கொந்த ளம்பி றங்கிய
மணிமவுலி மண்ட லங்கொள் செஞ்சடை
முடிமனோன்மணி வாலைவற் றாக்கு ணக்கடன்
முகிண்முலை சுமந்து நொந்த சைந்திறு
மிறுமென மருங்கி ரங்க வின்புறு
முறுவலாடிய கோமளத் தாற்பெ ருத்தவண்
முறைமுறை முழங்கு கின்ற கிண்கிணி
பரிபுர மலம்பு செம்ப தம்புரை
முளரிநாண்மலர் வாழ்வெனப் போற்றி நிற்குதும்
உரியபதி னெண்க ணங்க ளுஞ்சதுர்
மறைமுனிவ ரும்ப ரிந்து நின்கழ
லுறுதிதானென நாவெடுத் தேத்தி நித்தலு
முளமிக மகிழ்ந்து செங்க ரங்களின்
மலர்கொடு வணங்கி யஞ்ச லென்றமை
யுடைமையாயரு ணீயெனக் காத்த நட்பனை
யுடுமுக டதிர்ந்து விண்ட லங்களு
மரியபகி ரண்ட மும்பி ளந்திட
வுதறுதோகை மயூரனைத் தோற்ற முற்றெழு
முபநிடத மந்த்ர தந்தி ரந்தனி
லசபையி லடங்கு மைம்பு லன்களி
லுவகைகூரும னோகரக் கூத்த னைப்பொரு
தரியலர் நெருங்கு செங்க ளம்புகு
நிசிசரர் துணிந்த வெம்ப றந்தலை
தழுவுபாடல் விசாகனைப் பாற்க டற்றரு
தரளநகை செங்க ருங்க ணிந்தரை
குறமகண் மணம்பு ணர்ந்த திண்புய
சயிலமோகன மார்பனைத் தோட்டி தமிழ்ப்பொதி
தழைமுகை யுடைந்து விண்ட ரும்பிய
புதுநறவு சிந்து பைங்க டம்பணி
தருணசீதள வாகனைக் கோட்ட கத்துயர்



சரவண மிலங்க வந்த கந்தனை
முருகனை விளங்கு செந்தில் வந்திடு
சமரமோகன வேலனைக் காத்த ளிக்கவே. 3

## கணபதி

கருணையின் வழிபடு முதியவ டனையுயர்
கயிலையி னொருமுறை யுய்த்த விதத்தினர்
கனவட கிரிமிசை குருகுல மரபினர்
கதைதனை யெழுதிமு டித்த கருத்தினர்
கலைமதி யினையிரு பிளவுசெய் தொருபுடை
கதிரெழ நிறுவிய வொற்றை மருப்பினர்
கடுநுகர் பரமனை வலமுறை கொடுநிறை
கனிகவர் விரகுள புத்தி மிகுத்தவர்
பொருவரு மிமகிரி மருவிய பிடிபெறு
பொருகளி றெனமிகு பொற்பு விளைத்தவர்
பொதியவிழ் நறுமல ரணைமிசை தமதுடல்
புளகம தெழவொரு சத்தி தரித்தவர்
பொதுவற விடுசுடர் முழுமணி யொளிவிடு
பொலிவெழு பவளம தித்த நிறத்தினர்
புகர்முக முடையவர் குடவயி றுடையவர்
புகழிரு செவியினி றுத்தி வழுத்துதும்
இருமையு முதவிய சிவபர சமயமு
மிமையவ ருலகும ளித்த களிப்பனை
யிசைமுரன் மதுகர முறைமுறை பெடையுட
னிடறிய முகைவிரி செச்சை வனப்பனை
யிளகிய புளகித மலைமுலை யாமக
ளிகலிய புலவிய கற்று மழுப்பனை
யிகல்புரி பரநிசி சரர்குல கலகனை
யெனைவழி யடிமைப டைத்திடு நட்பனை
அருமறை யுரைதரு பிரமனை யமரரு
மடிதொழ விடுசிறை விட்ட திறத்தனை
யடியவர் கொடுவினை துகள்பட நடமிடு
மழகிய சரணம ளித்த வரத்தனை
யளவறு கலவியின் முழுகிய குறமக
ளழகினி லொழுகியி ருக்கு மயக்கனை
யலையெறி திருநகர் மருவிய குமரனை
யறுமுக முருகனை நித்தல் புரக்கவே. 4

## கலைமகள்

அவனி பருகிய மாறிரு வுந்தியி
லமரு மொருபிர மாவெனு மந்தண
னரிய சதுமறை நாவிலி ருந்தவ
ளளவில் பலகலை யோதியு ணர்ந்தவள்
தவள முளரியில் வாழ்வுபு ரிந்தவள்
தவள மணிவட மாலைபு னைந்தவள்
தவள வடிவுள வாணிசு மங்கலி
தனது பரிபுர பாதமி றைஞ்சுதும்
உவரி முதுதிடர் பாயவி டப்பொதி
யுரகன் மணிமுடி தூள்பட மந்தர
முலைய வெறிசுழன் மாருத மெங்கணு
முதறு சிறைமயில் வாகன னின்புறு
கவரில் வரிவளை சூல்கொடு தங்கிய
கமட முதுகினி லேறநெ டுந்திரை
கதறு கடலலை வாய்முரு கன்பெறு
கருணை தருகவி மாலைவி ளங்கவே. 5

## அரிகரபுத்திரன்

விரியு நீள்சடி லத்திடை மகுட ராசித ரித்தவர்
வளையு நீடுக ருப்புவின் மதுர வாளிதொ டுத்தவர்
அரிய பூரணை புட்கலை யரிவை மாரிரு பக்கமு
மழகு கூரும கிழ்ச்சிய ரடிவி டாமல்வ ழுத்துதும்
உரிய நான்மறை நித்தலு முறுதி யாகவ ழுத்திய
வுவகை யாசுக வித்துறை யுதவு நாவலன் முற்றிய
பரிய வாளைகு தித்தெழு பரவை சூழுந கர்க்கிறை
பழநி வேலவ னைப்புகழ் பனுவன் மாலைத
ழைக்கவே 6

## பகவதி

விளையுஞ் செழுந்தே னுடைந்துமுகை விண்டொழுகு
வெண்டா மரைப்பொகுட்டு
வேதா முடித்தலை முடிக்குஞ் சடாடவியள்
வெங்கொலை மடங்கலேறி
வளையும் பனிப்பிறை மருப்புக் குறுங்கணெடு
மயிடாசு ரன்சிரத்தில்



வலியநட மிடுகுமரி பகவதிச ரோருக
மலர்த்தாள் வணக்கமுறுவாம்
உளையுந் தடந்திரைத் திமிரதம ரக்குழி
யுவர்ப்பறா மகரவேலை
யொலியிடுங் குண்டகழி சுவறிமே டாகவே
லுள்ளுறை கழித்துநிருதக்
கலையுங் களைந்துல னணிபுலோ மசைதன்மங்
கலநா ணளித்தபெருமாள்
கடியமயில் வாகனப் பெருமா ளுவந்தெனது
கவிமாலை கொண்டருளவே. 7

## காளி

காயுங் கொடும்பகைத் தாருக விநாசனி
கபாலிகங் காளிநீலி
காளிமுக் கண்ணியெண் டோளிமா தரிவீரி
கவுரிகலை யூர்திகன்னி
பாயுந் தழற்புகைப் பாலைக் கிழத்திவெம்
பண்ணம் பணத்திமோடி
பரசுதர னுடனடன மிடுசூலி சாமுண்டி
பாதார விந்தநின்னவாம்
ஆயும் பெரும்பனுவ லாசுகவி மதுரகவி
யரியசித்திர கவிதைவித்
தாரகவி யிடுமுடிப் புக்குள மயங்காம
லடியவர்க் கருள்குருபரன்
றேயும் பனிப்பிறைத் திருநுதற் கடன்மகளிர்
தெண்ணித் திலங்கொழித்துச்
சிற்றில்விளை யாடல்புரி யுந்திருச் செந்தில்வரு
சேவகன் புகழ்பாடவே. 8

## ஆதித்தர்

வெள்ளப் பெருந்துளி யிறைக்கும் பெருங்காற்று
வெண்டிரையின் மூழ்கியெழு
வெம்புரவி யொற்றையா ழித்தடந் தேரேறி
வேதபா ரகரிறைஞ்சப்
பள்ளக் கடற்றிரை கலக்கியூ ழியினிருட்
படலமுழு துந்துடைத்துப்

படர்சுடர் விரித்துவரு பன்னிரு பதங்கர்பொற்
பாதமலர் சென்னிவைப்பாம்
உள்ளக் களிப்பறா வரிவண்டு பண்பாட
வோதிம நடிக்கமுள்வா
யுட்குடக் கூன்வலம் புரிமுத்த முமிழநீ
ரோடையிற் குருகுகாணக்
கள்ளக் கருங்கட் சிவந்தவாய் வெண்கைக்
கடைசியர் நுளைச்சியருளங்
களிகூரு மலைவா யுகந்தவே லனையெங்கள்
கந்தனைக் காக்கவென்றே. 9

## முப்பத்துமுக்கோடி தேவர்கள்

மொதுவி லாடு மத்தற்கு நீடு
பொருளை யோதி யொப்பித்த சீலர்
புணரி தோய்ந கர்க்குக் காயர்
புலமை நீதி யொப்பற்ற கேள்வர்
குதலை வாய்மொ ழிச்சத்தி பாலர்
குருதி பாய்க திர்க்கொற்ற வேலர்
குறவர் பாவை சொர்க்கத்தின் மோகர்
குமரர் காவ லுக்கொத்த காவல்
மதுர கீத விற்பத்தி வாணர்
மகுட வேணி முத்துத்த ரீகர்
மவுன மோன பத்திக்க லாபர்
மனையில் வாழ்வு வைப்புற்ற நேயர்
முதுமை யான சொற்பெற்ற நாவர்
முனிவர் வேள்வி யிச்சிக்கு மூணர்
முடிவி லாத கற்பத்தி னூழி
முதல்வர் தேவர் முப்பத்து மூவரே. 10

## 2. செங்கீரைப்பருவம்

வெங்காள கூடவிட மொழுகுபற் பகுவாய்
விரித்துமா சுணமுமிழ்ந்த
வெங்கதிர் மணிக்கற்றை யூழியிரு ளைப்பருக
வேய்முத் துதிர்ந்து சொரியக்
கங்காளர் முடிவைத்த கங்கா நதிக்கதிர்
கடுப்பக் குறுங்கவைக்காற்



கவரியின் பருமுலைக் கண்டிறந் தொழுகுபால்
கதிர்வெயிற் படமுரிந்து
மங்காம விரசதத் தகடெனச் சுடர்விட
மலைக்குறவர் கண்டெடுத்து
வண்டினைக் கெருவிடுஞ் சாரலிற் கரியகுற
மகளிருள மூசலாடச்
செங்காவி விழிபருகு பன்னிருகை மேகமே
செங்கீரை யாடி யருளே
திரையெறியு மலைவா யுகந்தவடி வேலனே
செங்கீரை யாடி யருளே. 11

கறைகொண்ட முள்ளெயிற் றுத்துத்தி வரியுடற்
கட்செவிப் பஃறலைநெடுங்
காகோ தரச்சிர நெளிக்கவட பூதரங்
கால்சாய மகரமெறியுந்
துறைகொண்ட குண்டகழ்ச் சலராசி யேழுஞ்
சுறுக்கெழ முறுக்கெயிற்றுச்
சூரன் பயங்கொளச் சந்த்ரசூ ரியர்கள்செந்
தூளியின் மறைந்திடத்திண்
பொறைகொண்ட சுரர்மருவு மண்டகோ ளகைமுகடு
பொதிரெறிய நிருத ருட்கப்
பூச்சக்ர வாளகிரி கிடுகிடென வச்சிரப்
புருகூதன் வெருவி வேண்டுந்
திறைகொண்ட ளக்கவரு மயிலேறு சேவகா
செங்கீரை யாடி யருளே
திரையெறியு மலைவா யுகந்தவடி வேலனே
செங்கீரை யாடி யருளே. 12

ஏர்கொண்ட பொய்கைதனி னிற்குமொரு பேரரசி
னிலைகீழ் விழிற் பறவையா
மிதுநிற்க நீர்விழிற் கயலாமி தன்றியோ
ரிலையங்கு மிங்கு மாகப்
பார்கொண்ட பாதியும் பறவைதா னாகவப்
பாதியுஞ் சேல தாகப்
பார்கொண் டிழுக்கவது நீர்கொண் டிழுக்கவிப்
படிகண்ட ததி சயமென

நீர்கொண்ட வாவிதனி னிற்குமொரு பேழ்வாய்
நெடுபூத மதுகொண் டுபோய்
நீள்வரை யெடுத்ததன் கீழ்வைக்கு மதுகண்டு
நீதிநூன் மங்கா மலே
சீர்கொண்ட நக்கீ ரனைச்சிறை விடுத்தவா
செங்கீரை யாடி யருளே
திரையெறியு மலைவா யுகந்தவடி வேலனே
செங்கீரை யாடி யருளே. 13

கந்தமலி நெட்டிதழ்ச் குறுமுகைப் பாசடைக்
கமல மலரைச் சுறித்துக்
கடைவாய் குதட்டும் புனிற்றெருமை தன்குழக்
கன்றுக் கிரங்கி யோடிக்
கொந்தவிழ் கருங்குவளை யோடைத் தடாகக்
குரம்பைக் கடந்து செந்நெற்
குலைவளைக் கும்பழக் குலைமடற் கதலிக்
குருத்தற மிதித்து மீளப்
பந்தரிடு தூலடிப் பலவுதரு முட்குடப்
பழமெலா மிடறி வெள்ளைப்
பணிலஞ் சொரிந்தநித் திலமுறுத் தப்பதை
பதைத்துமுலை பாலு டைந்து
சிந்தமக ராழியலை யொடுபொருத செந்தூர
செங்கீரை யாடி யருளே
செந்நிறக் குடுமிவெண் சேவற் பதாகையாய்
செங்கீரை யாடி யருளே. 14

வீறாட வெங்கதிர்ப் புகர்முகக் கூரிலை
மிகுத்தவே லுறைகழித்து
செவ்வாய் பிளந்துசிறு கட்பே ரிடாகினிகள்
வியைாட வெங்கவந்த
மாறாட முதுபகட் டுயிர்பிடர்க் கரியநிற
மறலியிரு கைசலித்து
மன்றாட வுடல்விழிக் குரிசில்கொண் டாடநெடு
மாகமுக டிடைவெளியறப்
பாறாட வம்பொற் கிரீடம் பரித்தலகை
பந்தாட விந்தாடவிப்



பாலைக் கிழத்திமுக் கவரிலைச் சூலம்
பசுங்கொழுங் குருதி வெள்ளச்
சேறாட வென்றுசிறு முறுவலா டுங்குமர
செங்கீரை யாடி யருளே
செந்நிறக் குடுமிவெண் சேவற் பதாகையாய்
செங்கீரை யாடி யருளே. 15

மகரசல ராசிதனில் வருணன்வந் தடிபரவி
வைத்தமணி முத்துமாலை
வடபூ தரத்தில்விழு மருவியென வுத்தரிக
மார்பிலூ டாடமன்னுந்
தகரமல ரிதழ்முருகு கொப்புளிக் குஞ்சிகைத்
தமனியச் சுட்டியாடத்
தவளமுழு மதியமுத துளியெனத் திருமுகத்
தரளவெயர் வாடமுழுதும்
பகரவரு மறைமுனிவர் கொண்டாட முழுவாளி
பங்காளி திருமுலைப்பால்
பருகக் குழைந்துசிறு பண்டியுந் தண்டையும்
பாதமும் புழுதியாடச்
சிகரவரை யரமகளிர் சிறுமுறுவ லாடநீ
செங்கீரை யாடி யருளே
செந்நிறக் குடுமிவெண் சேவற் பதாகையாய்
செங்கீரை யாடி யருளே. 16

## வேறு

இந்திர னுஞ்சசி யும்பர வும்படி
யிங்கே வந்தார்கா
ணிந்திரை யுங்கர சங்குமு குந்தனு
மிந்தா வந்தார்பா
ரந்தண னுங்கலை மங்கையு நின்சர
ணஞ்சேர் கின்றார்போ
யண்டரு டன்பல தொண்டர்ப ணிந்தன
ரஞ்சே லென்றாளாய்
முந்துத டந்திரை யுந்துவ லம்புரி
மொண்டே கொண்டேக
முன்றிறொ றுந்தர ளங்களு மிழ்ந்திட
முந்தூர் நந்தூருஞ்

செந்தில்வ ளம்பதி வந்தரு ளுங்குக
செங்கோ செங்கீரை
தென்றன்ம ணங்கமழ் குன்றுபு ரந்தவ
செங்கோ செங்கீரை. 17

வரைபொரு புளகித மலைமுலை யரிவையர்
வந்தார் பந்தாட
மற்கட லிறைதரு நவமணி வடமது
வண்டார் தண்டார்பா
ருரைபொரு கவிஞரு முனிவரு மமரரு
முன்போ லுண்டோதா
னுரையெமர் வழிவழி யடிமையி துளதென
வுன்பா லன்பானார்
கரைபொரு கடறிட ரெழுமயின் மிசைவரு
கந்தா செந்தூரா
கழிமட வனமொடு முதுகுரு கொருபுடை
கண்சாய் தண்கானற்
றிரைபொரு திருநகர் மருவிய குருபர
செங்கோ செங்கீரை
செருவினி லெதிர்பொரு நிசிசரர் தினகர
செங்கோ செங்கீரை. 18

## வேறு

உரைசெய் வரையர மகளிர் முறைமுறை
யுன்பேர் கொண்டாட
விலகு மிவையவ ருலகு மரகர
வுய்ந்தோ மென்றாட

வரைசெய் வனமுலை மகளி ரெழுவரும்
வந்தே பண்பாட
மலய முனியொடு பிரம முனிதொழ
வந்தார் கண்டாயே

கரையின் மணலிடு கழியி னெடியக
வஞ்சே ருஞ்சார்பிற்
கரிய முதுபனை யடியில் வலைஞர்க
ணஞ்சூழ் மென்கானிற்



றிரையில் வளைதவழ் நகரில் வருகுக
செங்கோ செங்கீரை
செருவி னிசிசர திமிர தினகர
செங்கோ செங்கீரை. 19

## வேறு

குறுமுகை விண்ட நெட்டிலைத் தாழை
யடியில்வி ளைந்த முட்குடக் காயி
லினிய குவளை யோடையில் விண்டோ யுந்தேவர்
குணலைபு ரிந்த கற்பகச் சோலை
நிழலிடு பந்த ரிட்ட பொற்றூணி
லளவர் குடிலில் வாசலி னின்றோடுந் தோணி
குழுவொடு வந்து விட்டிளைப் பாறு
துறைமணல் வண்ட லிட்டுவற் றாத
பழைய குமிழி வாவியில் வண்டா னந்தாவுங்
குரவுநெ ருங்கு மெக்கரிற் கான
லுழுநர்ப ரம்பி னெற்குலைத் தாளி
லிளைய குமர ரூர்சிறு திண்டேர் மென்காவி
லிறுகுகு ரும்பை யொத்தபொற் பார
நகிலரி ருந்து வைத்தவைப் பூச
லருகி லிளைஞ ரூடலில் வண்டார் தண்டாரி
லெவருமகிழ்ந்த சித்திரச் சாலை
நிழன்மணி துன்று தெற்றியிற் றேவர்
மகுட மிடறு பூமியில் வங்கா ளஞ்சீன
மெனமொழி தங்கு மற்புதத் தீவில்
வணிகரின் வந்த மிக்கபட் டாடை
வகையி லெறியு மாரவ டம்பூ ணும்பூணி
லிரைகவர் ஞெண்டு முக்குளித் தூறு
மளறுகி டங்கில் வித்துவித் தாரத்
தூரவி லிடுமுள் வேலியில் வெங்கா மன்காண
முறுகவி ளைந்து முற்றி முத்தேறு
கரியக ரும்பு சுற்றுசிற் றாலை
நிலையின் முதிய தாழியில் வெந்தா றும்பாகின்
முடியை விளம்பி வைத்துமுட் டாது
கடைசித ருகின்ற கட்குடப் பானை
முதுகின் முளைகொள் சாலியின் மென்பூ கந்தோறு

முருகுது ளும்பு கொத்துடைப் பாளை
சிதறியு திர்ந்த பித்திகைப் பீட
மறுகின் முதல்வர் தேவியர் பந்தாடுங் காவின்
முனிவர்வி ரும்பு கற்புடைப் பான்மை
மகளிர்கள் மொண்டெ டுத்தகைச் சாலின்
மடுவின் முழுகு மேதியில் வம்பே செஞ்சேல்பாய்
செறுவில்வி ளைந்த நெற்குலைக் காயி
லுழவிலு டைந்த கட்டியிற் பார
மதகு செறியு மேரியின் மண்டு கம்பானல்
செருமிமு ழங்கு கற்பிளப் பான
புடையின்வி ழும்பு னற்பெருக் கான
தமர திமிர வாவியி லெங்கே யுந்தாவுந்
திரையில் வலம்பு ரிக்கணத் தோடு
பணிலமு ழங்கு பட்டினக் காவற்
றிகிரி முருக வேலவ செங்கோ செங்கீரை
தினகர ரஞ்ச விட்புலத் தேவர்
மகபதி முன்கு வித்த வித்தார
மவுலி திறைகொள் சேவக செங்கோ செங்கீரை. 20

## 3. தாலப்பருவம்

அடரும் பருநவ மணிமுடி யமரரு
மமரர்க் கிறைவனுநீ
டளகைந ராதியு மீரொன் பதின்மரு
மருமறை முனிவோருஞ்
சுடருந் தருமிரு சுடரும் பரவிய
தோகைய ரெழுவருமுத்
தொழின்முக் கடவுளு மவரவர் தங்குறை
சொல்லித் துதிசெய்தார்
படருங் கிரணப் பரிதி நெடுங்கதிர்
பாயும் பகிரண்டம்
பழுமர மென்னப் பனையென நிமிரும்
பாழிக் கைநீட்டித்
தடவும் புகர்முக தந்திக் கிளையாய்
தாலோ தாலேலோ
சந்த மணங்கமழ் செந்திற் பதியாய்
தாலோ தாலேலோ. 21



கங்குல் பொருந்திய குவளைக் குழியிற்
கழியிற் பழனத்திற்
கரையிற் கரைபொரு திரையில் வளைந்த
கவைக்கால் வரியலவன்
பொங்கு குறுந்துளி வாடையி னொந்து
பொறாதே வெயில்காயும்
புளினத் திடரிற் கவரிற் றுரவிற்
புன்னை நறுந்தாதிற்
கொங்கு விரிந்த மடற்பொதி தாழைக்
குழுமுட் கரியபசுங்
கோலச் சிறிய குடக்கா யிற்புயல்
கொழுதுஞ் செய்குன்றிற்
சங்கு முழங்கிய செந்திற் பதியாய்
தாலோ தாலேலோ
சமய விரோதிக டிமிர திவாகர
தாலோ தாலேலோ. 22

### வேறு

தண்டே னொழுகு மொழிமடவார்
தாமங் கொழுதிச் சுருண்டிருண்டு
தமரக் களிவண் டடைகிடந்து
தழைத்து நெறித்த குழற்பாரங்
கொண்டே மெலிந்த தல்லாது
குரும்பைக் களப முலைசுமந்து
கொடிபோன் மருங்குல் குடிவாங்கக்
குழையிற் குதித்த விழிக்கயலைக்
கண்டே வெருவிக் கயன்மறுகக்
கனக வெயின்மா ளிகையுடுத்துக்
ககனந் தடவுங் கோபுரத்தைக்
கருதி வடவெற் பெனக்கதிரோன்
றிண்டேர் மறுகுந் திருச்செந்தூர்ச்
செல்வா தாலோ தாலேலோ
தெய்வக் களிற்றை மணம்புணர்ந்த
சிறுவா தாலோ தாலேலோ. 23

பாம்பா லுததி தனைக்கடைந்து
படருங் கொடுங்கார் சொரிமழைக்குப்

பரிய வரையைக் குடைகவித்துப்
பசுக்கள் வெருவிப் பதறாமற்
காம்பா லிசையின் றொனியழைத்துக்
கதறுந் தமரக் காளிந்திக்
கரையி னிரைப்பின் னேநடந்த
கண்ணன் மருகா முகையுடைக்கும்
பூம்பா சடைப்பங் கயத்தடத்திற்
புனிற்றுக் கவரி முலைநெரித்துப்
பொழியு மமுதந் தனைக்கண்டு
புனலைப் பிரித்துப் போட்டெகினந்
தீம்பால் பருகுந் திருச்செந்தூர்ச்
செல்வா தாலோ தாலேலோ
தெய்வக் களிற்றை மணம்புணர்ந்த
சிறுவா தாலோ தாலேலோ. 24

மங்கல மங்கலநூ லெங்குமொ ழிந்தனர்காண்
வானோ ரேனோர்போய்
வந்துவ ணங்கினர்மே லந்தர துந்துபிகேள்
வாரூ டாடாதே
கொங்கைசு மந்திடைநூ லஞ்சும ணங்கனையார்
கூடா தூடாரோ
கொண்டவ ரந்தருவா யண்டர்பெ ருந்தவமே
கோமா னாமாநீ
செங்கம லந்தனிலே பைங்குமு தங்களிலே
சேல்பாய் வானாடா
தென்ற லுடன்றமிழ்தேர் தென்பொதி யம்பயில்வாழ்
தேனார் தார்மார்பா
சங்குர லம்புரிசூழ் செந்தில்வ ளம்பதியாய்
தாலோ தாலேலோ
சங்கரி தன்குமரா மங்கையர் தங்கணவா
தாலோ தாலேலோ. 25

## வேறு

மரகத வடிவஞ் செங்கதிர் வெயிலால்
வாகாய் வாடாதோ
மதிமுக முழுதுந் தண்டுளி தரவே
வார்வேர் சோராதோ



கரமல ரணைதந் தின்புறு மடவார்
காணா தேபோமோ
கனமணி குலவுங் குண்டல மரைஞா
ணோடே போனால்வார்

பொருமிய முலையுந் தந்திட வுடனே
தாய்மார் தேடாரோ
புரவல ரெவருங் கண்டடி தொழுவார்
போதாய் போதாநீள்

சரவண மருவுந் தண்டமிழ் முருகா
தாலோ தாலேலோ
சதுமறை பரவுஞ் செந்திலை யுடையாய்
தாலோ தாலேலோ. 26

## வேறு

கூருமிகல் சாய்த்த வீரா தீரா தார்மார்பா
கூறுமியல் பார்த்துன் மேலே யாரார் பாடாதார்
மேருவரை நாட்டு வாழ்வார் வானா டாள்வார்போல்
வேளையென மீட்டுன் மேலே வீழ்வர் சூழ்வார்பா
ராருமிரை பார்த்து நீணீ ரூடே தாராமே
யானகழி நீக்கி மேலே நாவா யோடேசேல்
சேருமலை வாய்க்கு நாதா தாலோ தாலேலோ
தேவர்சிறை மீட்ட தேவா தாலோ தாலேலோ. 27

## வேறு

அரைவடமுந் தண்டையு மின்புரை யரைமணியுங்
கிண்கிணி யுங்கல னணியு மாறா வீறார்சீ
ரறுமுகமுந் தொங்கல் சுமந்தபன் னிருகரமும்
குண்டல முங்குழை யழகு மாரார் பாராதார்
விரைபொரு மென்குஞ்சி யலம்பிய புழுதியுமங்
கங்குழை பண்டியு மெலியு மேலே வீழ்வார்பார்
வெகுவிதமுங் கொண்டு தவழ்ந்திடி லவரவர்தங்
கண்கள் படும்பிழை விளையு மேதே னேகாதே
வரைமணியுந் தங்கமு மொன்றிய கனபரியங்
கந்தனி லின்றுகண் வளர் வாராய் வாழ்வேநீ
மணிநகையுங் கொண்டு துயின்றிலை விரலமுதங்
கொண்டுகி டந்தனை மதுர மாய்நீ பேசாயோ

திரைபொருதென் செந்தில் வளம்பதி வளரவருங்
கந்தசி வன்பெறு சிறுவா தாலோ தாலேலோ
திசைமுகனுஞ் சங்கரி யுஞ்சது மறையுமிறைஞ்
சும்பரை யம்பிகை சிறுவா தாலோ தாலேலோ. 28

### வேறு

அரவுசிறு பிறையிதழி திரிபதகை பொதிசடிலர்
பாலா வேலாதே
ரருணவெயி லிரவிசூழ லிமகிரியி லரிவைபெறு
வாழ்வாய் வாழ்வோனே
குரவருள மகிழவுயர் குருவடிவு தருபெருமை
கோடாய் தாடாளா
குமரகுரு பரமுருக குதலைமொழி தெரியவுரை
கூறாய் மாறாதே
இரவலரு முனிவர்களு மிமையவரு முனதடிமை
யாமே யாமேநீ
யெமைமுனியி லொருதுணையு மிலையடிமை யடிமையென
வீழ்வார் சூழ்வார்பார்
பரசமய குலகலக சிவசமய கு..திலக
தாலோ தாலேலோ
பணிலமுமிழ் மணியையலை யெறியுநகர் வருகடவுள்
தாலோ தாலேலோ. 29

### வேறு

பங்கயன் முதலோ ரிந்திர னிமையோர் பாரோ
ரேனோர்பார்
பண்புடனுனையே சிந்தையி னினைவார் பானீ
மால்கூராய்
வெங்கட கரிதூ ழெண்டிசை யுறைவார் வீணாள் காணாதே
மின்பரி புரதாள் பொன்புரை முடிமேல்
வேய்வார்வீறாலே
செங்கனி மணிவாய் தங்கிய நகைதா தேவா சீறாதே
திண்டிறன் முருகா தண்டமிழ் விரகா சேரார்
போரேறே
சங்கரி மருகா சங்கரி சிறுவா தாலோ தாலேலோ
சந்தத மியறேர் செந்திலை யுடையாய் தாலோ
தாலேலோ. 30



## 4. சப்பாணிப்பருவம்

பரவரிய நவமணி யழுத்துகல னுக்கழகு
பாலித்து வீறு பெற்ற
பன்னிரு புயங்குலுங் காமனீள் குழைதொறும்
பருவயிர குண்ட லங்க
ளிரவியொளி மட்கநின் றசையாம லமுதொழுகு
மிந்துமுக மண்ட லத்தி
லெழுதரிய திருநுதற் புண்டரங் குறுவெயர்
விறைக்கச் சிதைந்தி டாமற்
கரகமல மலர்விரல் சிவப்புறா மற்கடக
கங்கண மொலித்தி டாமற்
கழிவண் டலம்புங் கருங்குவளை யோடைசூழ்
கழிதொறுங் கான றோறுந்
தரளமுழு மணிநிலவு தருசெந்தில் வேலவா
சப்பாணி கொட்டி யருளே
சமரமுக ரணவீர பரசமய திமிராரி
சப்பாணி கொட்டி யருளே. 31

அண்டர்தந் துயரொழித் தனமென்று கொண்டாடி
யாவலங் கொட்ட மன்னு
மயிராணி கலவியமு துண்டன மெனத்தேவ
ரரசிரு கரங்கள் கொட்டத்
துண்டவெண் பிறைபுரை யெயிற்றுவெஞ் சூருளந்
துண்ணெனப் பறைகொட் டநீள்
சுருதியந் தணரிடந் தோறுமங் கலப்பெருந்
தூரியங் கொட்ட முட்டப்
பண்டரு பெருங்கவிப் புலமைக்கு நீசொன்ன
படிதிண்டி மங்கொட் டவெம்
பகைநிசா சரர்வளம் பதிமுழுது நெய்தலம்
பறைகொட்ட வெள்வளை தருந்
தண்டரள மலைமொண்டு கொட்டுநக ராதிபா
சப்பாணி கொட்டி யருளே
சமரமுக ரணவீர பரசமய திமிராரி
சப்பாணி கொட்டி யருளே. 32

பௌவமெறி கடலாடை யுலகிலொரு வேடுவன்
பறவைக்கு நிறைபு குந்த

பார்த்திவன் பாவையு மியற்குலச் சிறையும்
பணித்தருள மதுரை புக்குத்
தெவ்வரிடு திருமடத் தெரிசெழிய னுடலுறச்
சென்றுபற் றலுமெ வர்க்குந்
தீராத வடவையனல் வெப்புமுது கூனுந்
திருத்தியொரு வாது வென்று
வெவ்வழலி லெழுதியிடு மேடும் பெருக்காற்று
விட்டதமி ழேடு மொக்க
வேகாம லெதிரே குடக்கேற வெங்கழுவில்
வெய்யசமண் மூக ரேறச்
சைவநெறி யீடேற வருகவுணி யக்குழவி
சப்பாணி கொட்டி யருளே
சமரமுக ரணவீர பரசமய திமிராரி
சப்பாணி கொட்டி யருளே. 33

பைந்தா டழைச்சிறைக் கானவா ரணமருவு
பந்தரிடு முல்லை வேலி
பாயுமுட் பணைமருப் பேறுதழு வியுமுடைப்
பாலறா மேனி மடவார்
கொந்தார் குரும்பையிள வனமுலை முகக்கோடு
குத்தக் குருந்தொ சித்துங்
குறுங்கழைத் துண்டந் தனிற்சிறு துளைக்கருவி
குன்றுருக நின்ற ழைக்குஞ்
செந்தா மரைக்கைவிரல் கொடுபுதைத் துஞ்சுருதி
தெரியவிரன் முறையில் விட்டுந்
தேனுவின் பிறகே திரிந்துங் கவுட்குழி
திறந்துமத மாரி சிந்துந்
தந்தா வளந்தனக் குதவுதிரு மான்மருக
சப்பாணி கொட்டி யருளே
தரளமெறி கரையில்வளை தவழ்செந்தில் வேலவா
சப்பாணி கொட்டி யருளே. 34

கார்கொண்ட பேரண்ட கூடமோ ரேழுநீ
கற்பிக்கு மந்த்ர சாலை
கற்பதா ருவுநின் புயத்தினுக் கணிமாலை
கட்டவளர் நந்தன வனஞ்
சீர்கொண்ட புருகூத னுந்தேவர் குழுவுநின்
றிருநாம மறவா தபேர்



சிகரகன காசலமு முன துதிரு வாபரண
சேர்வைசேர் பேழை கடனீர்
போர்கொண்ட வேலின் புலால்கழுவு நீரேழு
பொழிலுமத் தனைதீ வுமோர்
பொலிவினுட னேநின் கலாபமயில் வையாளி
போய்மீளும் வீதி யெனவே
தார்கொண்ட மணிமார்ப செந்தில்வடி வேலனே
சப்பாணி கொட்டி யருளே
தரளமெறி கரையில்வளை தவழ்செந்தில் வேலவா
சப்பாணி கொட்டி யருளே. 35

கவளமத வெற்புநிலை யுலகுபர வப்ரபைகொள்
கைத்தா மரைக் கடகபூண்
கதிரொளி விரிக்கவளர் சிகையினிடு சுட்டிமிசை
கட்டாணி முத்தொ ளிரவே
பவளவிதழ் புத்தமுத மொழுகுமத லைக்குதலை
பற்பாதி சொற்றெ ரியவே
பரிபுர மொலிக்கவரு குறுநகை யெழுப்பியிடு
பைச்சேட னுச்சி குழிபா
யுவளக மனைத்துமின வரிவளை முழக்கவெடி
யுற்றேபெ ருத்த கயல்போ
யொருபுடை குதிக்கவரி யலவனளை யிற்புகுத
வுப்பூறு நெட்ட கழிதோய்
தவளமணி முத்தையலை யெறியுநக ருக்கதிப
சப்பாணி கொட்டி யருளே
சருவிய புறச்சமய விரதியர் குலக்கலக
சப்பாணி கொட்டி யருளே. 36

## வேறு

கருதிய தமனிய மணியரை வடமிடு
கட்டுவ டத்தோடுங்
கழலிடு பரிபுர மொலியெழ மணியுமிழ்
கைக்கட கப்பூணு
மிருசுட ரொளிபெற மருவிய தளர்நடை
யிட்டும திப்பாக
வெழுமதி புரைதிரு முகமலர் குறுவெய
ரிட்டுவ ரத்தாமஞ்

சொருகிய நறுமலர் முகையவிழ் சிகையிடு
சுட்டிநு தற்றாழத்
தொழுதுனை வழிபடு மடியவ ரிளையவர்
சொற்படி தப்பாமற்
குருமணி யலையெறி திருநக ரதிபதி
கொட்டுக சப்பாணி
குருபர சரவண பவசிவ மழவிடை
கொட்டுக சப்பாணி. 37

வரைபுரை புயமிசை யிடுதொடி யணிகலன்
மற்றுள முத்தார
மணிமுடி குழையிடு மிருசிகை யழகெழ
மைக்குவ ளைப்போதின்
விரைசெறி குழலியர் செவிலிய ரவரவர்
மிக்கவி ருப்பரனார்
விபுதரு முனிவரு முனதடி பரவியுன்
வெற்றியு ரைப்பார்சீ
ரரைமணி யுடைமணி கணகண கணவென
வத்திமு கத்தானு
மரிபிர மனுமுமை கணவனு மனமகி
ழற்புவி ளைத்தார்பார்
குரைகட லலையெறி திருநக ரதிபதி
கொட்டுக சப்பாணி
குருபர சரவண பவசிவ மழவிடை
கொட்டுக சப்பாணி. 38

கந்தத் தகட்குனர் விந்தத் தனிக்கடவுள்
கற்பா யெனச்சுருதி நூல்
கண்டித் துரைத்திடவு மிந்தக் கரத்திலுரை
கற்பா லுரைத்தி யெனவே
யந்தப் பொருட்பகுதி யந்தத் தினைப்பகரு
மப்போ வெறுத்து முனிவா
யஞ்சத் திருக்குமய னஞ்சச் சிறைக்குளிடு
மப்பா சிறக்கு மமலா
பந்தப் பிறப்பொழிய வந்தித் திருக்குமவர்
பற்றாக நிற்கு முதல்வா
பண்டைக் குடத்திலுறு முண்டச் சிறுத்தமுனி
பற்றாசை யுற்று மிகவாழ்



சந்தப் பொருப்பிறைவ செந்திற் பதிக்குமர
சப்பாணி கொட்டி யருளே
சங்கத் தமிழ்ப்புலவ துங்கக் கொடைக்குமர
சப்பாணி கொட்டி யருளே. 39

வேறு

முதுமொழி நினைவுதெ ரிந்த நாவலர்
முட்டா துனைப்பு கழவே
முளரியில் மருவி யிருந்த நான்முகன்
முக்காலு மிச்சை சொலவே
புதுமலர் சிதறிம கிழ்ந்து வானவர்
பொற்றா ளினைப்ப ரவவே
புகலரு மிசைதெரி தும்பு ராதியர்
புக்கா தரித்து வரவே
மதுகர மிடறிய தொங்கன் மாலிகை
மற்பூத ரத்த சையவே
மணியொளி வயிரம லம்பு தோள்வளை
மட்டாய் நெருக்க முறவே
சதுமறை முனிவர்க டங்க ணாயக
சப்பாணி கொட்டி யருளே
சரவண பவகுக செந்தில் வேலவ
சப்பாணி கொட்டி யருளே. 40

## 5. முத்தப்பருவம்

கத்துந் தரங்க மெடுத்தெறியக்
கடுஞ்சூ லுளைந்து வலம்புரிகள்
கரையிற் றவழ்ந்து வாலுகத்திற்
கான்ற மணிக்கு விலையுண்டு
தத்துங் கரட விகடதட
தந்திப் பிறைக்கூன் மருப்பில்விளை
தரளந் தனக்கு விலையுண்டு
தழைத்துக் கழுத்து வளைந்தமணிக்
கொத்துஞ் சுமந்த பசுஞ்சாலிக்
குளிர்முத் தினுக்கு விலையுண்டு
கொண்ட றருநித் திலந்தனக்குக்
கூறுந் தரமுண் டுன்கனிவாய்
முத்தந் தனக்கு விலையில்லை
முருகா முத்தந் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முதல்வா முத்தந் தருகவே. 41

வளைக்குந் தமரக் கருங்கடலின்
வளைவா யுகுத்த மணிமுத்துன்
படிவேற் கறைபட் டுடல்கறுத்து
மாசு படைத்த மணிமுத்தந்
துளைக்குங் கழையிற் பருமுத்தந்
துளபத் தொடைமா லிதழ்பருகித்
தூற்றுந் திவலை தெறித்தமுத்தஞ்
சுரக்கும் புயலிற் சொரிமுத்தந்
திளைக்குங் கவன மயிற்சிறையிற்
சிறுதூட் பொதிந்த குறுமுத்தஞ்
செந்நெல் முத்தங் கடைசியர்கா
றேய்த்த முத்தஞ் செழுந்தண்டேன்
முளைக்குங் குமுதக் கனிவாயான்
முருகா முத்தந் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முதல்வா முத்தந் தருகவே. 42

கலைப்பால் குறைத்த பிறைமுடிக்குங்
கடவு ளுடலின் விளைபோகங்
கனலி கரத்தி லளிக்கவந்தக்
கனலி பொறுக்க மாட்டாமன்
மலைப்பால் விளங்குஞ் சரவணத்தில்
வந்து புகுத வோராறு
மடவார் வயிறு சூலுளைந்து
மைந்த ரறுவர்ப் பயந்தெடுப்பக்
கொலைப்பால் விளங்கும் பரசுதரன்
குன்றி லவரைக் கொடுசெல்லக்
கூட்டி யணைத்துச் சேரவொரு
கோல மாக்கிக் கவுரிதிரு
முலைப்பால் குடித்த கனிவாயால்
முருகா முத்தந் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முதல்வா முத்தந் தருகவே. 43

கத்துங் கடலி னெடும்படவிற்
கழியிற் கழுநீ ரிற்சுழியிற்
கானற் கரையிற் கரைதிகழுங்
கைதைப் பொதும்பிற் சுரும்பினங்க



டத்துங் கமலப் பசும்பொகுட்டிற்
சாலிக் குலையிற் சாலடியிற்
றழைக்குங் கதலி யடிமடலிற்
றழைவைத் துழுத முதுகுரம்பைக்
குத்துந் தரங்கப் புனற்கவரிற்
குவளைத் தடத்தின் மடைவாயிற்
குடக்கூன் சிறுமுட் பணிலமொரு
கோடி கோடி யீற்றுளைந்து
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முருகா முத்தந் தருகவே
மொழியுஞ் சமய மனைத்தினுக்கு
முதல்வா முத்தந் தருகவே. 44

வயலுஞ் செறிந்த கதலிவன
மாடஞ் செறிந்த கதலிவன
மலர்க்கா வெங்குந் தேனினிரை
மாலை தோறுந் தேனினிரை
புயலுஞ் செறித்த கனகவெயிற்
புடையே பரந்த கனகவெயில்
பொதும்பர் தோறு மோதிமமென்
புளினந் தோறு மோதிமஞ்செங்
கயலுஞ் செறிந்த கட்கடையார்
கலவி தரும்போர் கட்கடையார்
கருணை புரியு மடியாருன்
காதல் புரியு மடியார்சீர்
முயலும் படிவாழ் திருச்செந்தூர்
முருகா முத்தந் தருகவே
மொழியுஞ் சமய மனைத்தினுக்கு
முதல்வா முத்தந் தருகவே. 45

தொழுதுந் துதித்துந் துயரகற்றிச்
சுரருக் கிறையுஞ் சுரருமுடன்
சூழ்ந்த கடம்பா டவியிலுறை
சொக்கக் கடவு டனைமூன்று
பொழுதும் பரவி யெழுத்துச்சொற்
போலப் பொருளும் புகறியெனப்
புகலு மாறஞ் சிரட்டிதிணைப்
பொருட்சூத் திரத்தின் பொருண்மயங்கா

தெழுதும் பனுவற் பரணன்முத
லேழேழ் பெருமைக் கவிப்புலவ
ரிதயங் களிக்க விருப்பமுட
னிறையோன் பொருட்குப் பொருள்விரித்து
முழுதும் பகர்ந்த கனிவாயான்
முருகா முத்தந் தருகவே
மொழியுஞ் சமய மனைத்தினுக்கு
முதல்வா முத்தந் தருகவே. 46

## வேறு

கடுந டைச்சிந் துரம ருப்பின்
கதிர்கொண் முத்துஞ் சரவைநீள்
கடல ளிக்கும் பணில முத்துங்
கழையின் முத்துங் கரடுவா
னுடுமு கட்டம் புயல்க ருக்கொண்
டுமிழு முத்தங் கருகறே
னொழுகு பொற்பங் கயம டற்றந்
தொளிரு முத்தந் திருகல்காண்
படுக ரைக்குண் டகழி நத்தின்
பரிய முத்தந் தெரியவே
பரவை யெற்றுந் திரைகொழிக்கும்
படியின் முத்தஞ் சிறுமகார்
கொடுப ரப்பும் பதிபு ரக்குங்
குமர முத்தந் தருகவே
குறுமு னிக்குந் தமிழு ரைக்குங்
முழவி முத்தந் தருகவே. 47

பருவ முற்றுங் குடவ யிற்றொண்
பணில மொய்க்குந் துறையெலாம்
பருமு ரட்செங் கயல்கு திக்கும்
பலப டத்தெண் டிரைமுநீர்
பொருது குத்துந் திடர னைத்தும்
புறவு மொய்க்கும் புறவுசேர்
புளின வெற்பெங் கணுநி ரைக்கும்
புளின மொய்க்குங் குவளைவா
யரும டற்கண் டினமெ னச்சென்
றளிகண் மொய்க்கும் புதியசூ



லலவன் மொய்க்குங் குழிவ ழிச்சென்
றலைகொ ழிக்குங் கரையெலாங்
குருகு மொய்க்கும் பதிபு ரக்குங்
குமர முத்தந் தருகவே
முறுமு னிக்குந் தமிழு ரைக்குங்
குழவி முத்தந் தருகவே. 48

## வேறு

பையரவி னுச்சிகுழி யப்பொருங் குண்டகட்
படுகடற் பணில முத்தம்
பார்வையா லுஞ்சிறிது பாரோமி தன்றிப்
பசுங்கழை வெடித்த முத்தஞ்
செய்யசிந் தையினுமிது வேணுமென் றொருபொழுது
சிந்தியோ முத்தி வட்டத்
திரைமுழங் கக்கொழுந் திங்கள்வட் டக்குடைச்
செழுநிழற் சம்ப ராரி
யெய்யுமலர் வாளியை யெடுத்துத் தெரிந்துநா
ணிறுகப் பிணித்த வல்வி
லீன்றகுளிர் முத்தத்தை முத்தமென் றணுகோ
மிதழ்க்கமல முகையு டைக்குந்
துய்யமணி முத்தந் தனைத்தொடே முன்னுடைய
துகிரில்விளை முத்த மருளே
தோகைமே காரவா கனசெந்தி லாயுனது
துகிரில்விளை முத்த மருளே. 49

இறுகல்கரு குதல்முரிவி லட்சுமி புடாயமுள்
ளேறல்புகை யேறல் செம்ம
ணேறல்வெச் சந்திருகன் மத்தகக் குழிவன்றி
யிரவியொளி யிற்க ரத்தன்
மறுவறு தகட்டிலோ ரத்திலுயர் தூக்கத்தின்
மன்னுமா தளைக விர்ப்பூ
மாந்தளிர் முயற்குருதி செவ்வரத் தங்கோப
மருவுமணி வகைய ளிப்பேர்
முறுகல்வளி யேறல்கல் லேறல்சிப் பிப்பத்து
முரிதறிரு குதல்சி வப்பு
முருந்திற் குருத்துச் செருந்துருவி யிடையாடி
மூரிகுதை வடிவொ துங்க

றுறுமுகங் கக்கலொளி மட்கல்கர டென்னாத
துகிரில்விளை முத்த மருளே
தோகைமே காரவா கனசெந்தி லாயுனது
துகிரில்விளை முத்த மருளே. 50

கோதிவரி வண்டுமது வுண்டுகுடி கொள்ளுமெங்
குழலுக் குடைந்து விண்ணிற்
குடிகொண்ட கொண்டற் குறுந்துளியி னித்திலக்
கோவையொரு கால்வி ரும்பேங்
காதிலுறும் வள்ளைமக ரக்குழை கடக்குமெங்
கண்ணுக் குடைந்து தொல்லைக்
கயத்திற் குளித்தசேல் வெண்டரள மென்னிலொரு
காலமுங் கருதி நயவேம்
போதிலுறு பசுமடற் பாளைமென் பூகம்
பொருந்துமெங் கந்த ரத்தைப்
பொருவுறா வேள்வலம் புரியார மின்புறேம்
பொற்றோ டனக்கு டைந்த
சோதிவேய் முத்தந் தனைத்தொடே நின்னுடைய
துகிரில்விளை முத்த மருளே
தோகைமே காரவா கனசெந்தி லாயுனது
துகிரில்விளை முத்த மருளே. 51

## 6. வாரானைப்பருவம்

மூரிப் பகட்டு வரிவாளை
முழங்கிக் குதிக்கக் கால்சாய்ந்து
முதிர விளைந்து சடைபின்னி
முடங்கும் பசுங்காய்க் குலைச்செந்நெல்
சேரிக் கருங்கை மள்ளர்குயந்
தீட்டி யரிந்த கொத்தினுக்குத்
தெண்முத் தளப்பச் சிறுகுடிலிற்
சேரக் கொடுபோ யவர்குவிப்ப
வேரிக் குவளைக் குழியில்வரி
வெண்சங் கினங்க ளீற்றுளைந்து
மேட்டி லுகுத்த பருமுத்தை
வெள்ளோ திமந்தன் முட்டையென



வாரிக் குவிக்குந் திருச்செந்தூர்
வடிவேன் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. 52

புள்ள மரிந்த கதிர்ச்செந்நெற்
போரிற் பகடு தனைநெருங்கப்
பூட்டி யடித்து வைகளைந்து
போதக் குவித்த பொலிக்குவையை
விள்ள வரிய குடகாற்று
வீசப் பதடி தனைநீக்கி
வெள்ளிக் கிரிபோற் கனகவட
மேரு கிரிபோன் மிகத்தூற்றிக்
கள்ள மெறியுங் கருங்கடைக்கட்
கடைசி பிரித்த மணிமுத்தைக்
களத்தி லெறிய வம்முத்தைக்
கண்டு குடித்த கட்குவிலை
மள்ள ரளக்குந் திருச்செந்தூர்
வடிவேன் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. 53

தேட வரிய மணியரைஞாண்
சேர்க்க வருக விரற்காழி
செறிக்க வருக திலதநுத
றீட்ட வருக மறுகில்விளை
யாட வருக மடியிலெடுத்
தணைக்க வருக புதுப்பனிநீ
ராட்ட வருக நெறித்தமுலை
யமுதம் பருக வருக முத்தஞ்
சூட வருக வுடற்புழுதி
துடைக்க வருக வொருமாற்றஞ்
சொல்ல வருக தள்ளிநடை
தோன்ற வருக சோதிமணி
மாட நெருங்குந் திருச்செந்தூர்
வடிவேன் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. 54

இறுகு மரைஞா ணினிப்பூட்டே
னிலங்கு மகர குண்டலத்தை
யெடுத்துக் குழையின் மீதணியே
னினியுன் முகத்துக் கேற்கவொரு
சிறுகுந் திலதந் தனைத்தீட்டேன்
றிருக்கண் மலர்க்கு மையெழுதேன்
செம்பொற் கமலச் சீரடிக்குச்
சிலம்பு திருத்தே னெறித்துவிம்மி
முறுகு முலைப்பா லினிதூட்டேன்
முகம்பார்த் திருந்து மொழிபகரேன்
முருகா வருக சிவசமய
முதல்வா வருக திரைகொழித்து
மறுகு மலைவாய்க் கரைசேர்ந்த
மழலைச் சிறுவா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. 55

எள்ளத் தனைவந் துறுபசிக்கு
மிரங்கிப் பரந்து சிறுபண்டி
யெக்கிக் குழைந்து மணித்துவர்வா
யிதழைக் குவித்து விரித்தழுது
துள்ளித் துடித்துப் புடைபெயர்ந்து
தொட்டி லுதைந்து பெருவிரலைச்
சுவைத்துக் கடைவாய் நீரொழுகத்
தோளின் மகரக் குழைதவழ
மெள்ளத் தவழ்ந்து குறுமூரல்
விளைத்து மடியின் மீதிருந்து
விம்மிப் பொருமி முகம்பார்த்து
வேண்டு முமையாள் களபமுலை
வள்ளத் தமுதுண் டகமகிழ்ந்த
மழலைச் சிறுவா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. 56

வெண்மைச் சிறப்புள் ளோதிமங்கள்
விரைக்கே தகையின் மடலெடுத்து
விரும்புங் குழவி யெனமடியின்
மீதே யிருத்திக் கோதாட்டித்



திண்மைச் சுரிசங் கினிற்குவளைத்
தேறன் முகந்து பாலூட்டிச்
செழுந்தா மரைநெட் டிதழ்விரித்துச்
சேர்த்துத் துயிற்றித் தாலாட்டப்
பெண்மைக் குருகுக் கொருசேவற்
பெரிய குருகு தன்வாயிற்
பெய்யு மிரையைக் கூரலகு
பிளந்து பெட்பி னினிதளிக்கும்
வண்மைப் புதுமைத் திருச்செந்தூர்
வடிவேன் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. 57

ஓடைக் குளிர்தண் டுளிப்புனியா
லுடைந்து திரையிற் றவழ்ந்தேறி
யொளிரும் புளினத் திடையொதுங்கி
யுறங்குங் கமடந் தனைக்கடந்து
கோடைக் குளிர்காற் றடிக்கவுடல்
கொடுகி நடுங்கி யூன்கழிந்த
குடக்கூன் பணிலத் துட்புகுந்து
குஞ்சுக் கிரங்கி யிரைகொடுக்கும்
பேடைக் குருகுக் கொருசேவற்
பெரிய குருகின் சிறைப்புறத்துப்
பிள்ளைக் குருகு தனையணைத்துப்
பிரச மடற்கே தகைப்பொதும்பின்
வாடைக் கொதுங்குந் திருச்செந்தூர்
வடிவேன் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. 58

விண்டு மாவின் கனிதடத்தின்
மீதே வீழக் குருகினங்கள்
வெருவி யிரியக் கயல்வெகுண்டு
வெடிபோய் மீள மண்டுகங்
கண்டு பாய வரிவாளை
கழிக்கே பாயக் கழிக்கானற்
கம்புள் வெகுண்டு துண்ணெனக்கட்
கடைதான் விழித்துத் தன்பார்ப்பைக்

கொண்டு போயக் கருவாளைக்
குலைக்கே பாயக் குடக்கனியின்
குறுங்காற் பலவு வேர்சாய்ந்த
குழிக்கே கோடி கோடிவரி
வண்டு பாயுந் திருச்செந்தூர்
வடிவேன் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. 59

பேரா தரிக்கு மடியவர்தம்
பிறப்பை யொழித்துப் பெருவாழ்வும்
பேறுங் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமா னென்னும் பேராளா
சேரா நிருதர் குலகலகா
சேவற் கொடியாய் திருச்செந்தூர்த்
தேவா தேவர் சிறைமீட்ட
செல்வா வென்றுன் றிருமுகத்தைப்
பாரா மகிழ்ந்து முலைத்தாயர்
பரவிப் புகழ்ந்து விருப்புடனப்
பாவா வாவென் றுனைப்போற்றப்
பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்
வாரா திருக்க வழக்குண்டோ
வடிவேன் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. 60

## வேறு

கலைதெரி புகலி வளமுற மருவு
கவுணிய வருக வருகவே
கருணையி னுரிமை யடியவர் கொடிய
கலிகெட வருக வருகவே
சிலைபொரு புருவ வனிதைய ரறுவர்
திருவுள மகிழ வருகவே
சிறுதுளி வெயர்வு குதிகொள வுனது
திருமுக மலர வருகவே
கொலைபுரி விகட மணிமுடி நிருதர்
குலமற வருக வருகவே



குருமணி வயிர மிருசிகை நெடிய
குழைபொர வருக வருகவே
மலைமகள் கவுரி திருமுலை பருகு
மழவிடை வருக வருகவே
வளையுமிழ் தரள மலையெறி நகரில்
வரபதி வருக வருகவே. 61

அணிநெடு மவுலி யெறிசிறு புழுதி
யழகுட னொழுக வருகவே
யடியிடு மளவி லரைமணி முரலு
மரவொலி பெருக வருகவே
பணிவிடை புரிய வருமட மகளிர்
பரவினர் புகழ வருகவே
பலபல முனிவ ரனைவரு முனது
பதமலர் பரவ வருகவே
பிணிமுக முதுகி லரியணை யழகு
பெறவரு முருக வருகவே
பிறைபொரு சடிலர் தமதிட மருவு
பிடிபெறு களிறு வருகவே
மணியித ழொழுகு மமுதுகு குதலை
மழவிடை வருக வருகவே
வளையுமிழ் தரள மல்லையெறி நகரில்
வரபதி வருக வருகவே. 62

## 7. அம்புலிப்பருவம்

கலையா னிரம்பாத கலையுண் டுனக்குநிறை
கலையுண் டிவன்றனக்குக்
களங்கமரு குறமா னுனக்குண்டு குறமான்
கருத்துண் டிவன்றனக்குத்
தொலையாத கணமுண் டுனக்குமங் கலகணத்
தொகையுண் டிவன்றனக்குத்
துளியமுத முண்டுனக் கிவனுக்கு மாறாத
சொல்லமுத முண்டுனக்குக்
கொலையா டராவழிப் பகையுண்டு கடுவிடங்
கொப்புளிக் குங்கட்செவிக்
கோளரா வைக்கொத்தி யெறியுமே காரமிக்
குமரனுக் குண்டுகண்டா

யலைவாழி சூழ்திருச் செந்தில்வடி வேலனுட
னம்புலீ யாடவாவே
யரவின்முடி நெளியமயின் முதுகில்வரு குமரனுட
னம்புலீ யாடவாவே. 63

மாமோக மண்டல மகற்றியறி வென்னுமுழு
மண்டலத் தைத்தொடுத்து
வடவைமுக மண்டலத் தழலா லுருக்கியினன்
மண்டலத் தூடுபுக்குச்
சோமோத யக்கிரண மண்டலத் தமுதத்
துளித்திவலை பருகியுடலைச்
சோதிமண் டலமென விளங்குமவ ரிவனுடைய
துய்யமுக மண்டலத்தை
யேமோ கருத்துற விருத்திப் பெரும்பரத்
தெல்லைமண் டலமெய்தலா
மென்றுகொண் டிவன்மண் டலச்சக்ர நிலையா
றெழுத்திலீ டேறுவருனக்
காமோ பெருக்கமென் செந்தில்வடி வேலனுட
னம்புலீ யாடவாவே
யரவின்முடி நெளியமயின் முதுகில்வரு குமரனுட
னம்புலீ யாடவாவே. 64

முதிருமிசை வரிவண் டலம்புகம லாலய
முகிழ்க்குமிரு நாலிதழ்க்குண்
முக்கோண நடுவிலொரு வட்டச் சுழிக்குண்மலர்
முகமண் டலத்துவெயிலா
லெதிருமரு ளந்தகா ரப்படலை தள்ளிவந்
தெழுமிரவி மண்டலத்தி
லின்புற்று நீவந் தொளிக்குமிட மந்தவா
னிரவிமண் டலமுடுக்க
ளுதிருமடு செருவிலிவன் வேலேறு பட்டவ
ருகந்தபெரு வெளியாகையா
லொள்ளமு துகுத்தபதி னாறுகலை கொள்ளுமுன்
னுடலினுங் குறைபடாதோ
வதிருமக ராழிசூழ் செந்தில்வடி வேலனுட
னம்புலீ யாடவாவே
யரவின்முடி நெளியமயின் முதுகில்வரு குமரனுட
னம்புலீ யாடவாவே. 65

*காந்தளகம்*
*ஒளி அச்சுக்கோப்பு*



வெறியா ரிலைத்தொடைத் தக்கனழல் வேள்வியை
வெகுண்டுபகல் பல்லுகுத்து
வெள்ளிவிழி யைக்கெடுத் தயிரா வதப்பாகன்
வேறுருக் கொடுபறக்கச்
செறியா டகத்தகட் டிதழ்முளரி நான்முகன்
சென்னியைத் திருகிவாணி
செய்யதுண் டந்துண்ட மாக்கியத் தக்கன்
சிரத்தையொரு வழிபடுத்திப்
பொறியா ரழற்கடவுள் கைத்தல மறத்துவிண்
புலவர்முப் பத்துமூவர்
போனவழி யொருவர்போ காமலுன் னுடலையும்
புழுதியிற் றேய்த்ததெல்லா
மறியாத தல்லநீ செந்தில்வடி வேலனுட
னம்புலீ யாடவாவே
யரவின்முடி நெளியமயின் முதுகில்வரு குமரனுட
னம்புலீ யாடவாவே. 66

விடமொழுகு துளைமுள் ளெயிற்றுவன் கட்செவி
விரிக்கும் பணாடவியறா
மென்பொறி யுடற்பெரும் பகுவா யராவடிவை
வெம்பசி யெடுத்துவெம்பிக்
குடதிசைக் கோடையைப் பருகிக் குணக்கெழுங்
கொண்டலை யருந்திவாடைக்
கொழுந்தையுந் தென்றலையு மள்ளிக் குடித்துக்
கொழுங்கதிரை யுண்டதினியுன்
னிடமொழிய வேறோ ரிலக்கில்லை நீயதற்
கெதிர்நிற்க வல்லையல்லை
யிவனுடன் கூடிவிளை யாடிநீ யிங்கே
யிருக்கலா மிங்குவந்தா
லடல்புனையு மயிலுண் டுனக்குதவி யாகையா
லம்புலீ யாடவாவே
யரவின்முடி நெளியமயின் முதுகில்வரு குமரனுட
னம்புலீ யாடவாவே. 67

பண்டுபோ லின்னமுத மின்னங் கடைந்திடப்
பழையமந் தரமில்லையோ
படர்கடற் குண்டகழி யளறாக வற்றிப்
பாரினிற் றிடரானதோ

விண்டலத் தமரர்களு மமரேச னுஞ்சேர
வீடிநீ டந்தகார
மேவியெழு பகிரண்ட கூடம்வெளி யானதோ
விடமொழுகு நெட்டெயிற்று
மண்டுவா சுகிதுண்ட மானதோ வின்னமொரு
வாலிக்கு வாலில்லையோ
மதியிலா மதியமே யிவனினைந் தாலெந்த
வகைசெலா தாகையானீ
யண்டர்நா யகனெங்கள் செந்தில்வடி வேலனுட
னம்புலீ யாடவாவே
யருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுட
னம்புலீ யாடவாவே. 68

வட்டமா கத்துள்வெளி வடிவுகொள லாலென்று
மானைத் தரித்திடுகையான்
மந்தா கினித்தரங் கத்துவள மெய்தலான்
மன்னுங் கணஞ்சூழ்தலால்
இட்டமொடு பேரிரவில் வீறுபெற லாலுலகி
லெவருந் துதித்திடுதலா
லிரவிகண் ணுறுதலா னிடபத்தி லேறலா
லேமமால் வரையெய்தலான்
முட்டமறை வேள்விக் குரித்தாகை யால்வெய்ய
மூரியர வுக்குடைதலான்
முக்கணுமை பங்கனா ரொக்குநீ யென்றுதிரு
முகமலர்ந் துனையழைத்தா
லட்டபோ கம்பெறுவை செந்தில்வடி வேலனுட
னம்புலீ யாடவாவே
யருவ்ரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுட
னம்புலீ யாடவாவே. 69

காதலா லெறிதிரைக் கடன்மகளிர் சிறுமகார்
கரையிற் குவித்தமுத்துங்
கருவாய் வலம்புரி யுமிழ்ந்தமணி முத்துமுட்
கண்டன்மடல் விண்டசுண்ணத்
தாதலர விளவாடை கொடுவருங் கானல்வெண்
சங்குநொந் தீற்றுளைந்து
தனியே யுகுத்தபரு முத்தமுந் தன்னிலே
சததகோடி நிலவெறிக்கு



மீதலா லொருசிறிது மிரவில்லை யெவருக்கு
மிரவில்லை நீயுமிங்கே
யேகினா லுனதுடற் கறைதுடைத் திடுதலா
மென்பதற் கையமில்லை
யாதலா னீதிபுனை செந்தில்வடி வேலனுட
னம்புலீ யாடவாவே
யருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுட
னம்புலீ யாடவாவே. 70

கடியவளி யெறியுந் தழைச்சிறைக் கூருகிர்க்
கருடவா கனனுமிகல்கூர்
கட்டைமுள் ளரைநாள நெட்டித ழுடுத்தபொற்
கமலயோ னியுமெழுந்து
கொடியவெங் கொலைபுரி வராகமென வொருவனெழு
குவலய மிடந்துதேடக்
குறித்தொருவ னெகினமா யண்டபகி ரண்டமுங்
கொழுதிக் குடைந்துதேட
முடியவிது காறுமவ ரறிவுறா வகைநின்ற
முழுமுதற் கடவுளடியு
முடியுநீ கண்டனை யெனக்கருதி யின்றுதிரு
முகமலர்ந் துனையழைத்தா
லடியவரை வாழ்வித்த செந்தில்வடி வேலனுட
னம்புலீ யாடவாவே
யருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுட
னம்புலீ யாடவாவே. 71

பெரியமா கத்துணீ வருவையிவன் வஞ்சகம்
பேசுமா கத்துள்வாரான்
பெருகநீ வேலையிற் புகுவா யிவன்பார்
பிளக்கவோ வேலைவிட்டா
னுரியமா குணவரையி லுறுவைநீ யிவனன்
புறாதகுண வரையேயுறா
னுடலிலே முழுமறு வுனக்குண் டிவன்றனக்
கொருமறுவு மில்லைமீளக்
கரியமா முகிலிலே மறைவைநீ யிவனெடுங்
கரியமா முகிலின்மறையான்

கருதிநீ யிவையெலா முணரிவன் பெருமையைக்
கண்டுநீ யங்கிராதே
யரியமா தவனெங்கள் செந்தில்வடி வேலனுட
னம்புலீ யாடவாவே
யருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுட
னம்புலீ யாடவாவே. 72

பரியநிழ றன்னைச் சுளித்துவெயி லொடுபொருது
பாதசங் கிலியைநூறிப்
பாரிசா தத்தருவை யிடுகுள கெனக்கவுட்
பகுவாய் புகக்குதட்டித்
தரியலர் நகர்ப்புறத் தெயிலிடு கபாடந்
தனைத்தூள் படுத்தியவர்பொற்
றருணமணி முடியிடறி முறைமுறை யழைக்குந்
தழைச்செவிப் பிறைமருப்புச்
சொரியுமத தாரைக் குறுங்கட் பெருங்கொலைத்
துடியடிப் புகரொருத்தல்
துங்கவே ளிவனுடைய முன்றிற் புறத்திற்
றுளைக்கர நிமிர்த்துநிற்கு
மரியகரு நாகமென வெருவல்கொல் லிவனுட
னம்புலீ யாடவாவே
யருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுட
னம்புலீ யாடவாவே. 73

## 8. சிறுபறைப்பருவம்

பொருவாகை சூடுமர வக்கொடிக் குருகுலப்
பூபால ரேறுமந்தப்
பூபால னுக்கிளைய துணைவர்நூற் றுவரும்
பொருபதினெட் டக்குரோணி
யொருவாய்மை சொற்றபடை வீரருஞ் செருவினி
லுருத்தெழலு நீதியைவ
ருடனாக நின்றுபற் குனன்மணித் தேரினுக்
குள்ளசா ரதியாகியம்
மருவார்க டானையிற் பட்டவர்த் தனர்மகுட
வர்த்தன ரடங்கலும்போய்
மயங்கவொரு நாள்விசைய னுக்குவிசை யம்பெருக
மண்ணேழு முண்டுமிழ்ந்த



திருவாய் வலம்புரி முழக்குதிரு மான்மருக
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே. 74

முருந்தாரு மணிமுறுவ னெய்தனில் மகளிரிள
முகிழ்முலை தனக்குடைந்து
முளரிமுகை நீரிற் குளித்துநின் றொருதாளின்
முற்றிய தவம்புரியவெங்
கருந்தாரை நெட்டிலைப் புகர்வே லெனப்பொருங்
கட்கடைக் குள்ளுடைந்து
காவிமலர் பங்கப் படக்கருங் குழல்கண்டு
கரியமுகி லுடல்வெளுத்துப்
பொருந்தாம லோடியந் தரசாரி யாயொரு
பொருப்பேற வளமையேறும்
புகழேற வாழுந் திருச்செந்தி லாயுனது
பொற்றாள் வணக்கமுற்றுத்
திருந்தார்க ளெஞ்சம் பெரும்பறை முழக்கநீ
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே. 75

கங்கையணி யுஞ்சடையில் வைத்தகுழ விப்பிறைக்
கடவுளா லயமனைத்துங்
கங்குற் கருங்கடல் கழிந்தவை கறையிற்
கலித்தவால் வளைமுழக்கும்
பங்கய மலர்ப்பொகுட் டிதழ்வாய் துளிக்கும்
பசுந்தேற லுண்டுமெள்ளப்
பலகோடி சஞ்சரீ கப்படலை பெடையொடு
படிந்துபல கான்முழக்கும்
வெங்கய முடக்கும் புழைக்கர நிமிர்த்துவெளி
மேகநீ ரைக்குடித்து
வீதிவாய் நின்றுபிளி றித்தின முழங்கும்வெறி
வெண்டிரைக் குண்டகழியிற்
செங்கயன் முழக்குந் திருச்செந்தில் வேலனே
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே. 76

காவான பாரிசா தத்தருக் குலநிழற்
கடவுடெரு வீதிதோறுங்
கடிமணப் புதுமங் கலத்தொனி முழக்கமுகை
கட்டவிழ்த் திதழுடைக்கும்
பூவாரி லைத்தொடைய லளகா புரேசன்
புரந்தொறுங் குளிறுமுரசம்
பொம்மென முழக்கமன் மதனுடைய பல்லியப்
பொங்குதெண் டிரைமுழக்கப்
பாவாணர் மங்கலக் கவிவாழி பாடிப்
பரிந்துதிண் டிமமுழக்கப்
பரவரிய திருவிழா வென்றுபல பல்லியம்
பட்டினந் தொறுமுழக்கத்
தேவாதி தேவருயர் சதுமறை முழக்கநீ
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே. 77

வரைவாய் முழக்குங் கடாயானை வெங்கூன்
மருப்பில்விளை முத்துமிளவேய்
மணிமுத்து மடுபாலை வனசுரத் திற்கரு
வராகத்தின் முத்துமண்ட
ருரைவாய் முழக்கும் பெரும்புறவி லுந்திநத்
துமிழுமணி முத்துமள்ள
ரொளியறா மருதவே லிச்செந்நெல் கன்னறரு
மொளிமுத்து மோங்குநெய்தற்
கரைவாய் முழக்குமுட் கூனல்வெண் பணிலங்
கடுஞ்சூ லுளைந்துகான்ற
கதிர்முத்து மொக்கக் கொழித்துவரு பொருநைபாய்
கழிதொறுங் கயல்குதிக்கத்
திரைவாய் முழக்குந் திருச்செந்தில் வேலனே
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே. 78

முனைவாளை வடிவேலை வடுவைவெங் கடுவையிதழ்
முளரியைப் பிணையைமதவேள்
மோகவா ளியையடு சகோரத்தை வென்றுகுழை
முட்டிமீ ளுங்கண்மடவார்



நினைவாளை வாண்முறுவ லாடியிள முலையானை
நேர்நேர் நிறுத்திநெய்த
னீடுமள காடவி வனத்திற் பிணித்துவெண்
ணித்தில வடந்தெரிந்து
புனைவாளை நான்முடி விளம்பிநடு வாளைமென்
போதிலுறை வாளையொப்புப்
பொலிவாளை நின்றுகளை களைவாளை நாடிவிளை
போங்கழி கடந்துமெள்ளச்
சினைவாளை பாயுந் திருச்செந்தில் வேலனே
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே. 79

அறந்தரு புரந்தரா தியருலகி லரமகளி
ராடுமணி யூசல்சிற்றில்
அம்மனை கழங்குபல செறியுந் தடஞ்சார
லருவிபாய் பரங்கிரியுமுட்
புறந்தரு புனிற்றுவெள் வளைகடற் றிரைதொறும்
பொருதசீ ரலைவாயுமென்
போதுகமழ் திருவாவி னன்குடியு மரியமறை
புகலுமே ரகமுமினிமைக்
குறந்தரு கொடிச்சியர் பெருங்குரவை முறைகுலவு
குன்றுதோ றாடலுந்தண்
கொண்மூ முழங்குவது கண்டின மெனக்கரட
குஞ்சரம் பிளிறுமரவஞ்
சிறந்தபழ முதிர்சோலை மலையும் புரந்தநீ
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே. 80

எழுமிரவி மட்கவொளி தருமணி யழுத்துமுடி
யிமையவர் மகிழ்ச்சிபெறவே
யிருகுழை பிடித்தவிழி யரமகளிர் சுற்றிநட
மிதுவென நடித்துவரவே
வழுவறு தமிழ்ப்பனுவன் முறைமுறை யுரைத்துவெகு
வரகவிஞ ருட்குழையவே
மகபதியு மிக்கமுனி வரர்கணமு மிச்சையுடன்
வழியடிமை செப்பியிடவே

பொழுதுதொறு மொக்கவிதி முறையுனை
யருச்சனைசெய்
புனிதசிவ விப்ரருடனே
புகலரிய பத்தசன மரகர வெனக்குலவு
புரவலர் விருப்பமுறவே
செழுமறை முழக்கவரு முருககும ரக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே
திரளுமணி முத்தையலை யெறியுநக ருக்கதிப
சிறுபறை முழக்கியருளே. 81

தவனனிர தப்புரவி வலமுறையில் வட்டமிடு
தருணவட வெற்பசையவே
தமரதிமி ரத்துமித மெறியுமக ரப்பெரிய
சலதியொலி யற்றவியவே
புவனமுழு தொக்கமணி முடிமிசை யிருத்துபல
பொறியுரக னச்சமுறவே
புணரியிடை வற்றமொகு மொகுமொகுவெனப்பருகு
புயலுருமு வெட்கியிடவே
பவனனு மிகுத்தகடை யுகமுடி வெனப்பெருமை
பரவியடி யிற்பணியவே
படகநிபி டத்துழனி யசுரர்வெரு விக்கரிய
பரியவரை யிற்புகுதவே
சிவனருண் மதிக்கவரு முருககும ரக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே
திரளுமணி முத்தையலை யெறியுநக ருக்கதிப
சிறுபறை முழக்கியருளே. 82

சகரமக ரச்சலதி யுலகுதனி லிப்பொழுது
சருவிய புறச்சமயநூ
றலையழிய முத்திதரு சிவசமய முத்தர்பெறு
தவநெறி தழைத்துவரவே
யகரவுக ரத்தில்விளை பொருளடைவு பத்தியுறு
மடியவர் தமக்கருளவே
யமரருல கத்தவரு மெவருமரு விப்பரவி
யடியிணை தனைப்பணியவே
பகரவு நினைத்திடவு மரிதுனது சொற்பெருமை
பரகதி யளிக்குமெனவே



பலபல முனித்தலைவ ரனைவரு முனக்கினிய
பணிவிடை தனைப்புரியவே
சிகரபர வெற்பில்வரு முருககும ரக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே
திரளுமணி முத்தையலை யெறியுநக ருக்கதிப
சிறுபறை முழக்கியருளே. 83

## 9. சிற்றிற்பருவம்

பொன்னின் மணக்கும் புதுப்புனலிற்
புடைசூழ் பணில முத்தெடுத்துப்
புறக்கோட் டகமுண் டாக்கிவலம்
புரியைத் தூதைக் கலமமைத்துக்
கன்னி மணக்குங் கழனியிற்செங்
கமலப்பொகுட்டு முகையுடைத்துக்
கக்குஞ் செழுந்தே னுலையேற்றிக்
கழைநித் திலவல் சியைப்புகட்டிப்
பன்னி மணக்கும் புதுப்பொழிலிற்
பலபூப் பறித்துக் கறிதிருத்திப்
பரிந்து சிறுசோ றடுமருமை
பாரா யயிரா வதப்பாகன்
சென்னி மணக்குஞ் சேவடியாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே. 84

தையன் மடவா ரிழைத்தவண்ட
றன்னை யழிக்கு மதுக்கல்ல
தரளமுறுத்தி யுனது பொற்பூந்
தண்டைத் திருத்தா டடியாதோ
துய்ய தவளப் பிறைமுடிக்குஞ்
சோதி யெடுத்து முகத்தணைத்துத்
தோளி லிருத்தும் பொழுதுமணித்
தோளிற் புழுதி தோயாதோ
வைய மனைத்து மீன்றெடுத்தும்
வயதுமுதிரா மடப்பாவை
மடியி லிருத்தி முலையூட்டி
வதனத் தணைக்கி லுன்கழற்காற்

செய்ய சிறுதூள் செறியாதோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே. 85

தெளவுங் கரட மடையுடைக்குந்
தந்திப் பகடு பிடிபட்டுந்
தருவு மமுது மிருநிதியுந்
தனியே கொள்ளை போகாம
லெவ்வ முறவிட் புலத்தமர
ரேக்க முறாம லயிராணி
யிடுமங் கலநா ணழியாம
லிமையோ ரிறைஞ்சு மரமகளிர்
பெளவ மெறியுந் துயராழிப்
பழுவத் தழுந்தி முழுகாமற்
பரக்குஞ் சுருதித் துறைவேள்வி
பழுதா காமற் பரவரிய
தெவ்வர் புரத்தை யடுஞ்சிறுவா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே. 86

ஆடுங் கொடித்தே ரெழுபுரவி
யருண னடத்து மகலிடத்தை
யடைவே படைத்தும் படைத்தபடி
யளித்துந் துடைத்து முத்தொழிலுங்
கூடும் பெருமை யுனக்குளது
கூடார் புரத்தைக் குழாம்பறிக்கக்
கொள்ளுங் கருத்து நின்கருத்துக்
கொங்கை சுமந்து கொடிமருங்குல்
வாடுங் கலக விழிமடவார்
மலர்கை சிவப்ப மணற்கொழித்து
வண்ட லிழைத்த மனையழிக்கை
வன்போ சுரரு மகவானுந்
தேடுங் கமலத் திருத்தாளாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே. 87



புற்றி லரவந் தனைப்புனைந்த
புனித ருடனே வீற்றிருக்கப்
பொலியுந் திகிரி வாளகிரிப்
பொருப்பை வளர்த்துச் சுவராக்கிச்
சுற்றில் வளர்ந்த வரையனைத்துஞ்
சுவர்க்கா லாக்கிச் சுடரிரவி
தோன்றி மறையுஞ் சுருப்பைவெளி
தொறுந்தோ ரணக்கா லெனநாட்டி
மற்றி லுவமை யெனுங்கனக
வரையைத் துளைத்து வழியாக்கி
மாக முகிலை விதானமென
வகுத்து மடவா ருடன்கூடிச்
சிற்றி லிழைத்த பெருமாட்டி
சிறுவா சிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே. 88

மிஞ்சுங் கனக மணித்தொட்டின்
மீதே யிருத்தித் தாலுரைத்து
வேண்டும் படிசப் பாணிகொட்டி
விருப்பாய் முத்தந் தனைக்கேட்டு
நெஞ்சு மகிழ வரவழைத்து
நிலவை வருவா யெனப்புகன்று
நித்த லுனது பணிவிடையி
னிலைமை குலையேம் நீயறிவாய்
பிஞ்சு மதியி னொருமருப்புப்
பிறங்கு மிருதாட் கவுட்சுவடு
பிழியுங் கரட மும்மதத்துப்
பெருத்த நால்வாய்த் திருத்தமிகு
மஞ்சு கரக்குஞ் சரத்துணையே
யடியேஞ் சிற்றி லழியேலே
யலைமுத் தெறியுந் திருச்செந்தூ
ரரசே சிற்றி லழியேலே. 89

துன்று திரைக்குண் டகழ்மடுவிற்
சூர னொளிக்கப் பகைநிருதர்
தொல்லைப் பதியு மவரிருந்து
துய்த்த வளமுந் தூளாக்கி

வென்று செருவிற் பொருதழித்தாய்
வேதா விதித்த விதிப்படியை
விலக்கி வெகுண்டு மீண்டளித்தாய்
வேண்டு மடியார் வினையொழித்தாய்
கன்று மமணர் கழுவேறக்
காழிப் பதியில் வந்துதித்துக்
கள்ளப் பிரச மயக்குறும்பர்
கலக மொழித்துக் கட்டழித்தா
யன்று தொடுத்துன் வழியடிமை
யடியேஞ் சிற்றில் சிதையேலே
அலைமுத் தெறியுந் திருச்செந்தூ
ரரசே சிற்றில் சிதையேலே. 90

களிப்பா ருனைக்கண் டவரவரே
கண்ணு மனமும் வேறாகிக்
கள்ள னிவனை நம்முடைய
காதல் வலையிற் கட்டுமென
விளிப்பார் விரக மங்குரித்த
வேடப் பலிப்பைப் பாரென்று
மெள்ள நகைப்பா ரிவருடனே
விளையாடாமல் வேறாகித்
துளிப்பார் திரைக்குண் டகழுடுத்த
தொல்லைப் பதியும் பகிரண்டத்
தொகையுந் தொகையில் பல்லுயிருந்
தோற்ற மொடுக்கந் துணையாய்நின்
றளிப்பா யழிக்கை கடனலகா
ணடியேஞ் சிற்றி லழியேலே
அலைமுத் தெறியுந் திருச்செந்தூ
ரரசே சிற்றி லழியேலே. 91

கூவிப் பரிந்து முலைத்தாயர்
கூட்டி யெடுத்து முலையூட்டிக்
குடுமி திருத்தி மலர் செருகிக்
கோலம் புனைந்து கொண்டாடிப்
பூவிற் பொலிந்த திருமேனிப்
புனிதா வண்டற் புறத்தெயிலிற்
புகுந்தா லினியுன் னுடலேறப்
புழுதி யிறைத்துப் போகாமற்



காவிக் குறுந்தோட் டிதழ்நெருக்குங்
கண்ணி தனைக்கொண் டோச்சிவளைக்
கானற் றரளத் தொடையாலுன்
கைத்தா மரையைக் கட்டிவிடோ
மாவித் துணையே வழியடிமை
யடியேஞ் சிற்றி லழியேலே
அலைமுத் தெறியுந் திருச்செந்தூ
ரரசே சிற்றி லழியேலே. 92

பொய்யா வளமை தரும்பெருமைப்
பொருநைத் துறையி னீராட்டிப்
பூட்டுங் கலன்கள் வகைவகையே
பூட்டி யெடுத்து முலையூட்டி
மெய்யா லணைத்து மறுகுதனில்
விட்டா ரவரைவெ றாமலுனை
வெறுக்க வேறு கடனுமுண்டோ
விரும்பிப் பரலைக் கொழித்தெடுத்துக்
கையா லிழைத்த சிற்றிலைநின்
காலா லழிக்கை கடனலகாண்
காப்பா னழிக்கத் தொடங்கிலெங்கள்
கவலை யெவரோ டினியுரைப்போ
மையா வுனது வழியடிமை
யடியேஞ் சிற்றி லழியேலே
அலைமுத் தெறியுந் திருச்செந்தூ
ரரசே சிற்றி லழியேலே. 93

## 10. சிறுதேர்ப்பருவம்

தண்டே னுடைந்தொழுகு மருமாலை நீண்முடி
தரிக்குஞ் சதக்கி ருதுசெந்
தருணமணி யாசனத் தேறமா தலிசெழுந்
தமனியத் தேரு ருட்டப்
பண்டே பழம்பகை நிசாசரர்க ளுட்கப்
பரப்புநிலை கெட்ட தென்று
பரவுங்கு பேரன்வட பூதரம் பொருபுட்
பகத்தே ருருட்ட வீறு

கொண்டே யுதித்தசெங் கதிரா யிரக்கடவுள்
குண்டலந் திருவில் வீசக்
கோலப்ர பாமண் டலச்சுடர் துலக்கமுட்
கோலெடுத் தருண வருணன்
றிண்டே ருருட்டவளர் செந்தில்வாழ் கந்தனே
சிறுதே ருருட்டி யருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே
சிறுதே ருருட்டி யருளே. 94

வாராரு மிளமுலை முடைத்துகிற் பொதுவியர்
மனைக்குட் புகுந்து மெல்ல
வைத்தவெண் டயிருண்டு குடமுருட் டிப்பெருக
வாரிவெண் ணெயையு ருட்டிப்
பாராம லுண்டுசெங் கனிவாய் துடைத்துப்
பருஞ்சகடு தன்னை யன்று
பரிபுரத் தாளா லுருட்டிவிளை யாடுமொரு
பச்சைமான் மருக பத்தி
யாராமை கூருமடி யவர்பழ வினைக்குறும்
பறவே யுருட்டி மேலை
யண்டபகி ரண்டமு மனைத்துலக முஞ்செல்லு
மாணையா ழியையு ருட்டிச்
சேராநி சாசரர் சிரக்குவ டுருட்டநீ
சிறுதே ருருட்டி யருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே
சிறுதே ருருட்டி யருளே. 95

கொந்தவிழ் தடஞ்சாரன் மலயமால் வரைநெடுங்
குடுமியில் வளர்ந்த தெய்வக்
கொழுந்தென்ற லங்கன்று மாடகப் பசுநிறங்
கொண்டுவிளை யும்பரு வரைச்
சந்தன நெடுந்தரு மலர்ப்பொதும் பருமியற்
றண்பொருநை மாநதி யுமத்
தண்பொருநை பாயவிளை சாலிநெற் குலையுமச்
சாலிநெற் குலைப டர்ந்து
முந்தவிளை யும்பரு முளிக்கரும் பும்பரு
முளிக்கரும் பைக்க றித்து
முலைநெறிக் கும்புனிற் றெருமைவா யுஞ்சிறுவர்
மொழியும் பரந்த வழியுஞ்



செந்தமிழ் மணக்குந் திருச்செந்தில் வேலனே
சிறுதே ருருட்டி யருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே
சிறுதே ருருட்டி யருளே. 96

பெருமையுட னீடலத் திருவர்பர சமயமும்
பேதம் பிதற்றி விட்ட
பிறைமருப் புக்கரும் பகடுமுந் நீரிற்
பிழைத்துநீள் கரையி லேறப்
பொருவருஞ் சன்னிதியி லெய்துவது போன்மணி
புடைக்குமிள நீரி ரண்டு
புணரியின் மிதந்துசன் னிதியேற விந்நாட்
பொருந்தவிளை யாடி முன்னா
ளிருதரையி னிற்சந் தனக்கொடி மரத்தினை
யிழுத்துவரு மெருமை யேற்றை
யெப்பொழுது முதியகற் பகடாக வுலகத்தி
லியாவருங் காண வென்று
திருவுள மகிழ்ந்துதிரு விளையாடல் கண்டநீ
சிறுதே ருருட்டி யருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே
சிறுதே ருருட்டி யருளே. 97

ஆதிநூன் மரபாகி யதனுறும் பொருளாகி
யல்லவை யனைத்து மாகி
யளவினுக் களவாகி யணுவினுக் கணுவா
யனைத்துயிரு மாகி யதனின்
சாதியின் பிரிவாகி வெவ்வேறு சமயங்க
டானாகி நானாகி மெய்ச்
சாலோக சாமீப சாரூப சாயுச்ய
தன்னொளியி லீலை யாகி
யோதிய தனைத்தினு மடங்காமல் வேறாகி
யுள்ளும் புறம்பு மாகி
யொளியிலொளி யாகிமற் றிரவுபக லற்றவிட
மொப்புவித் தெனையி ருத்தித்
தீதினை யகற்றிநின் திருவருள் புரிந்தவா
சிறுதே ருருட்டி யருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே
சிறுதே ருருட்டி யருளே. 98

## வேறு

புலமை வித்தக மயூரவா கனவள்ளி
போகபூ ஷணசூரன்
சலமொ ழித்தவ நிசாசரர் குலாந்தக
சடாக்ஷர காங்கேய
குலவு கொற்றவ குமாரகண் டீரவ
குருபர புருகூத
னுலக ளித்தவா செந்தில்வாழ் கந்தனே
யுருட்டுக சிறுதேரே
யுரக நாயகன் பஃறலை பொடிபட
வுருட்டுக சிறுதேரே. 99

வீதிமங்கல விழாவணி விரும்பிய
விண்ணவ ரரமாதர்
சோதி மங்கல கலசகுங் குமமுலை
தோய்ந்தகங் களிகூரச்
சாதி மங்கல வலம்புரி யினமெனத்
தழைச்சிறை யொடுபுல்லி
யோதி மந்துயில் செந்தில்வாழ் கந்தனே
யுருட்டுக சிறுதேரே
யுரக நாயகன் பஃறலை பொடிபட
வுருட்டுக சிறுதேரே. 100

விரைத்த டம்பொழில் வரைமணி யாசனத்
திருந்துவிண் ணவர்போற்றி
வரைத்த டம்புரை மழவிடை யெம்பிரான்
மனமகிழ்ந் திடவாக்கா
லிரைத்த பல்கலைப் பரப்பெலாந் திரட்டிமற்
றிதுபொரு ளெனமேனா
ளுரைத்த தேசிகா செந்தில்வாழ் கந்தனே
யுருட்டுக சிறுதேரே
யுரக நாயகன் பஃறலை பொடிபட
வுருட்டுக சிறுதேரே. 101

மாது நாயக மெனவடி வுடையசீர்
வள்ளிநா யகமண்ணி



லீது நாயக மெனவுனை யன்றிவே
றெண்ணநா யகமுண்டோ
போது நாயகன் புணரியி னாயகன்
பொருப்புநா யகன்போற்றி
யோது நாயக செந்தில்வாழ் கந்தனே
யுருட்டுக சிறுதேரே
யுரக நாயகன் பஃறலை பொடிபட
வுருட்டுக சிறுதேரே. 102

தக்க பூசனைச் சிவமறை யோர்பெருந்
தானநா யகர்தம்பேர்
திக்க னைத்தினு மெண்முத லிமையோர்
தேவர்தந் திருமேனி
மிக்க மாலிகை தருபவ ரடியவர்
மின்னனார் சமயத்தோர்
ஒக்க வாழ்கெனச் செந்தில்வாழ் கந்தனே
யுருட்டுக சிறுதேரே
யுரக நாயகன் பஃறலை பொடிபட
வுருட்டுக சிறுதேரே. 103

## சிறப்புப்பாயிரம்

### நேரிசை வெண்பா

செந்தமிழ்க்கு வாய்த்ததிருச் செந்திற் பதிவாழ
கந்தனுக்குப் பிள்ளைக் கவிசெய்தா—னந்தோ
திருமாது சேர்மார்பன் றேர்ப்பாகற் கன்பு
தருமால் பகழிக்கூத் தன். 104

### அவையடக்கம்

அத்தனையும் புன்சொல்லே யானாலும் பாவேந்தர்
எத்தனையுங் கண்டுமகிழ்ந் தெய்துவார்—முத்தி
புரக்குமரன் றந்தகந்தன் பூணணிமுந் நான்கு
கரக்குமரன் பிள்ளைக் கவி. 105

## நூற்பயன்

மருநாண் மலர்ப்பொழி லுடுத்ததட மெங்குமலை
வாய்கொழித் தெறியுமுத்தை
வண்டலிடு மெக்கர்புடை சூழ்திருச் செந்தில்வரு
மயில்வா கனக்கடவுளெங்

குருநாத னொருதெய்வ யானைதன் பாகக்
குறக்கொடிக் குந்தழைசிறைக்
கோழிக் கொடிக்குங் குமார கம்பீரன்
குறும்பிறை முடிக்கும்பிரான்

இருநாழி நெற்கொண்டு முப்பத்தி ரண்டறமு
மெங்குமுட் டாதளக்கு
மிறைவிதிரு முலையமுத முண்டுஞா னம்பெருகு
மெம்பிரா னினியபிள்ளைத்

திருநாம மெழுதுவார் கற்பார் படிப்பார்
செகம்பொது வறப்புரந்து
தேவாதி தேவரும் பரவுசா யுச்சியச்
சிவபதத் தெய்துவாரே. 106

திச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் முற்றிற்று



# திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ்

## கந்தப்ப அய்யர்

### விநாயகர் துதி

சத்தினி பதிந்து வினை ஒத்த மல பரிபாகர்
தமது இதையகூடம் அதனில்
தங்கு வயிராகம் ஆம் தறி நாட்டி, அன்பு எனும்
தளையை இரு காலின் மாட்டி,

மெத்து இனிய ஞானநீர் ஆட்டி, நிறை சாந்தம் ஆம்
மென் மலர் அணிந்து, உயிர் எனும்
வீயாத கவளம் கொடுத்திட, மகிழ்ந்து, உண்டு,
விளையாடு கரியை நினைவாம்—

சித்து இனிய யோகியர் நெருங்கு குகை எங்கணும்
செறி திருத்தணிகை மருவும்
செவ்வேள்தனக்கு அருணகிரிநாதர் நல் நயம்
தேர்ந்து, மகிழ் கூர்ந்து, நுவலும்

பத்தினுடன் ஆறாயிரம் திருப்புகழ்-அமுது
பருகு பன்னிரு செவியினும்
பரவு நவ ரசம் ஒன்றும் அறியாத சிறியனேன்
பன்னு பைந்தமிழ் தழையவே. 1

### 1. காப்புப் பருவம்

### திருமால் துதி

நீர் தந்த உததி முதிர் நிலவுலகு புகழ்கின்ற
நீலமலர் எந்நாளினும்
நீள் சுனையில் முப்போதும் மலர்கின்ற கல்லார
நெடு வரையில் வீற்றிருந்து,

சீர் தந்த பிரணவப் பொருளை இறைவன் திருச்
செஞ்செவியில் அறிவுறுத்த
தேசிகனை, வாசவன் அளித்த பொற்கொடி மருவு
செவ்வேளை, இனிது காக்க—

கார் தந்த மேகம் தடித்து இடைவிடாது உற,
கதிரவனும் ஓர்பால் உற,
க்லை நிறையும் வெண் மதியம் ஓர்பால் உற, குலவு
காட்சி நிகர் மணி வண்ணமும்

ஏர் கொண்ட பொன் மார்பு இலங்க, ஒரு கைத் திகிரி
ஏந்தி, ஒரு கையில் வெண் சங்கு
ஏந்தி, உலகு ஈரேழும் அனுதினம் அளித்து, உவணம்
ஏறியருள் செங்கண் மாலே! 2

## சிவபெருமான் துதி

திங்கள் அம் குழவி விடு வெண் கதிரும் அரவின் மணி
தேக்கு செங்கதிரும் அளவி,
செம்பொனில் செய்த புரி வெண்பொனில் செய்த புரி
சேர்த்துத் திரித்த கயிறாய்,

கங்கை தங்கும் செஞ்சடாடவிக் கற்றையைக்
கட்டிவைத்தென மொய்த்திடும்
கண்ணுதல் செந்திலதம் ஒப்ப மிளிர் ஐம்முகக்
கடவுள் இணை அடி பரவுவாம்—

மங்கலம் பூண அயிராணிதன் கண்டத்து
மாயை மருகியர் கழுத்தின்
மன்னும் உயிர் அகரம் முதல் மருவு மங்கலம் ஆக
வளர் கடைக்கண் சிவந்து

செங்கை இலைவேல் தொட்டு மலையலை அரக்கர் நிலை
சிந்தி அயிராவதத்தில்
தேவர்-உலகைப் பவனிவந்து, தென் தணிகை அமர்
சேயைப் புரக்க என்றே. 3

## உமாதேவியார் துதி

ஆண் உருவினால் அழிவு இல் அந்தகாசூரனுக்கு
அஞ்சி அழியும் சுரர் எல்லாம்



அபயம் என ஓலம் இட, அஞ்சல் என்று,
அவர்களொடும்
அன்று பின்பக்கம் மருவ,

பூண் அரவம் ஆம் இறைவர் கண்சாடை காட்டலும்
பொற்சிலைக் கைப்பிடித்து,
பொருது அழித்து அந்தகனை, இமையவர்தமைக் காத்த
பூரணியை அஞ்சலிப்பாம்—

தாணு நுதலின்கண் தழல்-பொறியதாய், கங்கை
தங்கி, இமயச் சாரல் வாழ்
சரவணப் பொய்கைதனில் ஆறு மக உருவமாய்,
சாரும் அறுமீன் முலைப்பால்

மாணும் மலர் வாயினில் நுகர்ந்து, மது வார்ந்து ஒழுகு
வனச மா மலரணையின்மேல்
வண்டு தாலாட்ட, விழி துயில்கூர் திருத்தணிகை
மயில் இறைவனைக் காக்கவே. 4

## கணபதி துதி

கோது அற்ற மேரு என்ஏட்டிலே
கோழ் உற்ற வால் வளைக் கோட்டினால்,
ஆதிப் பொற் பாரதம் தீட்டிய
ஆபற்சகாயனைப் போற்றுவாம்—

தாதைப் பொற் கால் தளை பூட்டியே
தாழ் நித்தற்கு ஓர் மொழி காட்டி, நால்
வேதத்தின் ஆர் தணிகைக்குளே
மேவுற்ற வேலனைக் காக்கவே. 5

## பிரமன் துதி

காய்த்த குலைக்கதிர் வாய்த்த தினைப்புனம்
காத்த குறப்பெணின்பாற் செலா
காட்டில் மிகப் பசி வாட்டுது எனக்கு அருள்
காட்டிடு எனத் தனி நோக்கியே

தேய்த்த இடைக் கொடி மாத்திரளைப் பிழி
தேக்கிலையில் கடிது ஊட்ட, வாய்
தேக்கி, வினைத்திடர் நீக்கு செருத்தணி
சேர்க்கும் ஒருத்தனைக் காக்கவே—

மாத் தவளத்து உரு ஏய்த்த வனத்து எழில்
மாற்று பனத்தியை நாக்கிலே
மாட்டி, இருக்கு எனும் பாட்டை உரைத்து, உயிர்
வாய்த்த சகத்தை உண்டாக்கினோன்,

தோய்த்த தயிர்க்குடம் போய்த் திருடித் தினி
சூட்டு அரவப் பணப் பாய்க்கணே
தூக்கம் மிகுத்தவன் மோட்டு உதரப்புழை
தோற்று மலர்ப் பரமேட்டியே! 6

## கங்கையின் துதி

தூயோர் சகரர்க்கு அளற்று நோய்
தோயாது உயர்நல் துறக்கமேல்
சோராது அமர, தரைக்கண் வீ
சூடு ஆர் சுடலைப் பொடிக்குள் நீர்

பாயா நனையப் பொருத்தினோன்
பாடு ஆர் தவம் மிக்கு இயற்ற, வான்
பாலாய் அரன் பொற்சடைக்குள் வீழ்
பாகீரதியைப் பழிச்சுவாம்—

தீ ஆர் விழியில் பொறிக்குள் ஓர்
சேயாய் உதித்து, குளத்திலே
தேன் ஆர் கமலப் பொகுட்டின்மேல்
சேரா மகிழ்வுற்று உயிர்க்கு எலாம்

மாயா இடரைக் கொடுத்த சூர்
மாவாய் மலையத் துணித்து, நீள்
வான் ஆர் தணிகைப் பொருப்பிலே
வாழ் வேலவனைப் புரக்கவே 7

## வீரபத்திரர் துதி

நேரில் தக்கன் சிரத்தினை வீட்டினான்,
நேய எச்சனை அப்படி மாட்டினான்,
நீழல் அக்கினியைக் கரம் வாட்டினான்,
நீள் குயில் சிறை அற்றிட ஓட்டினான்,

மேருவிற்கு இறையைப் புறம்பு ஆக்கியே,
வேள்வியில் தகரைத் தினுவோர்க்கு எலாம்



வீறு அழித்து, இடர் பற்பல ஆக்கிய
வீரபத்திரன் மெய்ப்பதம் போற்றுவாம்—

கார் உடுத்த குவட்டு உறு தேக்கினை,
காமர் பச்சிலையை, திருவாத்தியை,
காழ் அகில் சினையை, சுளை வேர்ப்பலாக்
காயினைத் திரையில் பெயர்த்து ஈர்த்து எழீஇ,

சாரலில் கழைமுத்தினை, பூக்களை,
தா இல் வச்சிரத்தை, கரிக்கோட்டினைச்
சாடியிட்டு அருவித்திரள் ஆர்ப்பொடு
தாழ் செருத்தணி வெற்பனைக் காக்கவே. 8

## வயிரவக்கடவுள் துதி

விராவு மதமொடு புராரிதனை இகழ்
விரோத மொழிபல வாக்கினில் சாற்றிட
வினாவு பிரணவம் முனான சதுமறை
விகாதம் அறுபொருள் தேற்றிடக் கேட்டிலன்

கராவின் அறிவு அழி பிதாவின் உயர்தலை
கடாவு விரல் உகிரால் பறித்து, ஆர்ப்பொடு
கண்ஆயிரவன் முதல் விணாடர் பலிகொளும்
கபால வயிரவர் தாள்-துணை போற்றுதும்—

ஓர் ஆறு சிரமுடன் இராறு புயமுடன்
உகாத சிறைமயில் ஏற்றினுக்கு ஏற்றிடும்
உலாசன், நொடிவரை செலாமுன், உலகினை
உலாவி வலம்வரு சீர்த்தியைப் போர்த்தவன்,

மராவின் மலரொடு குராவின் மலர் நறை
மறாத தொடைபுனை மூர்த்தி, நல் கார்த்திகை
வழாமல் அருள் குகன், கலாரகிரி உறை
வலாரி மருகனை வாய்ப்புறக் காக்கவே. 9

## இந்திரன் துதி

கரிய மதன் அம்பு பட்டு, விரகமதின் நொந்து இளைத்து
கனி இதழ் மடந்தையர்க்கு மோகம் ஆம்
கவலை உறு துன்பு ஒழித்து, வினை இரு சமம் கிடைத்து,

கருதரிய இன்ப முத்தி நாடியே
கமல மலர் உந்தி உற்ற கனலையும் அறிந்து எழுப்பி,
கடிகொள் இடை பிங்கலைக்குள் ஓடிமீள்

புரை வளி இரண்டு அடக்கி, சுழுமுனையில் நெஞ்சு இருத்தி,
புருவ நடு விந்துவுக்குள் ஓமமே
புரியும் மதி-மண்டலத்தின் மருவு பரை இன்பம்உற்ற
பொருளினை அறிந்து இயற்றும் யோகினோர்
புணர் மலம் ஒழிந்து வெற்பின் குகையிடை வதிந்துநித்தம்
புகழ் தணிகை மன் குகற்கு ஓர் காவல் ஆம்

தருமலர் புனைந்து, கற்பின் சசிதனை மணந்து, சொர்க்கம்
தனி அரசு இயைந்து மைக்கண் ஏறியே,
சலமழை பொழிந்திட, பைந்தழை பயிர் விளைந்து எவர்க்கும்
தகை உண உவந்து அளிக்கும் நீர்மையான்,
தவள மத குஞ்சரத்தின் முதுகிடை இவர்ந்து அரக்கர்
தலை அற எறிந்து, சித்தர் பாடவே,

இருடியர் கணங்கள் சுற்ற, சுரர் தலை கரங் குவிப்ப,
இளமுலை அரம்பை மெச்சி ஆடவே,
இருநிதி வளம் கொழிப்ப, மருவலர் புறங்கொடுப்ப,
இகல் அற நடந்து வெற்றி கூடவே,
எழுபுவியின் மன்பதைக்கும் இடர்புரிதரும் பொருப்பின்
இரு சிறை அரிந்த வச்சிர பாணியே.
10

## பலதேவர்கள் துதி

வம்பு அவிழும் பரங்குன்றமும் நந்தினை,
வார் அலைவாய் உறுசீர் அலைவாயினும்,
வாவி தண்டலை மனும் ஆவினன் குடியினும்,
வார் அகம் உற்றிடும் ஏரக வெற்பினும்,

பம்பிய குன்றுதொறு ஆடலினும், திருப்
பழமுதிர் சோலையினும் விளையாடிய
பாவலனை, செழுஞ் சேவலனை, சிவன்
பாலகனை, தணிகாசலனைத் தினம்—

வெம்பிய சூரியர், சந்திரர், மாதவர்,
விண்ணவர், பண் அமர் விஞ்சையர், கின்னரர்



வீறும் உருத்திரர், கூறும் மருத்துவர்,
மேதகும் ஓர் எழு மாதர்கள் ஆதியர்,

தம்பியரா உறும் ஒன்பது வீரர்கள்,
தக்க இலக்கம் எனும் கணநாதர்கள்,
தள்ளரும் வெள்ளம் இராயிரம் பூதர்கள்,
தா இலராய்ப் புறம் காவலர் ஆவரே. 11

## 2. செங்கீரைப்பருவம்

புகழ் பூத்த கார்த்திகை எனும் செவிலிமாதர் தண்
புனல் ஆட்டி, மெய் தொடைத்து
புவியில் வாய்நீர் உமிழ்ந்து, அணி விரலினால் தேய்த்துப்
புது நுதல் திலகம் இட்டு,

மகிழ் பூத்த பூதித் திருக்காப்பு அணிந்து, தம்
மடிமேல் இருத்தி, எழில் சேர்
மணி முலைப் பால் ஊட்டி, மார்பு அணைத்து,
உச்சிதனை
மோந்து, வாய் முத்தம் ஆடி,

அகழ் பூத்த சரவணப் பொய்கை அம் தொட்டில் மலர்
அணையில் கிடத்தி அகல,
அளியினம் தாலாட்ட, அலை கயிறதாய் வளி
அசைப்ப, துயின்று எழுந்து,

திகழ் பூத்த விளையாடல் பயில் செருத்தணிகை இறை!
செங்கீரை ஆடியருளே!
சேணாடர் அர்ச்சனை செய் சேனாபதிக் குரிசில்
செங்கீரை ஆடியருளே! 12

மேனை எனும் மாதாமகீ தந்த பொற்சுட்டி
வெண் பிறை நுதற்கண் ஆட,
மென்முலைப் பால் கறந்து ஊட்டியிடு கைத்தாய்
மிலைச்சு பூஞ் சுடிகை ஆட,

வானம் உறு கார்த்திகைத் தாதியர்கள் செவியில் அணி
மகர குண்டலமும் ஆட,
வரநதி எனும் செவிலி புனையும் அரைமணி ஆட,
வளர் சரவணப் பொய்கை ஆம்

மானம் உறு கோடாய் அணிந்த வயிரக் கடகம்
மரைமலர்க் கையில் ஆட,
வண்மை பெறு பாண்டிமாதேவி எனும் நற்றாய்
வனைந்திடு சதங்கை ஆட,

தேன் ஒழுகு பைங்குவளை மலர் செருத்தணிகை இறை
செங்கீரை ஆடியருளே!
சேணாடர் அர்ச்சனை செய் சேனாபதிக் குரிசில்
செங்கீரை ஆடியருளே! 13

பூமி எனும் நல் மாமி அசுரர் புரி வேதனை
பொறுக்கலாது அயர் துன்பு எலாம்
போக்குவல் எனத் திரு உரத்து இரு கை வைத்தல்போல்
பொற்கரம் நிலத்தில் ஊன்றி,

மீமிசை உறும் தேவர் படு சிறை எலாம் களைய
மேக்கு எழும் செய்கை மான
மென்மெலக் கந்தரம் எடுத்துஎடுத்து அந்தர-
மிசைப் பசுந் தலை நிமிர்த்து

தோம் இல் தவ மாமுனிவருக்கு இடர் விளைத்த ஒரு
தூர் வலிதனைக் கறுவல்போல்
சுந்தரப் பொன்முடி அசைத்து அசைத்துத் தண்டை
சூழ் கால் சதங்கை கொஞ்ச,

தேமருவு கல்லாரம் அலர் செருத்தணிகை இறை
செங்கீரை ஆடியருளே!
சேணாடர் அர்ச்சனை செய் சேனாபதிக் குரிசில்
செங்கீரை ஆடியருளே! 14

பொன்மலைச் சாரலின் உறும் திருச் சரவணப்
பொய்கை ஒரு கட்டில் ஆக,
பூந்தாமரைச் சேக்கை மலர் மெத்தை ஆக,
புனற்கரை மரம் கால்கள் ஆய்,

மின் மலியும் மீனின் நெருங்கிப் பரந்த வான்
வெண்மலர்ப் பந்தர் ஆக,
வீறு பைந் தருமலரின் இடைவிடாது ஒழுகு தேன்
விசித்த ஊசல் கயிறது ஆய்,



துன் மலைகள் ஆம் அலையின் ஒலி முழவது ஆய், வளைத்
தொனி மிகத் தும்பி பாட,
தோலடிப் பறவை ஒலி செஞ்சிலம்பு ஓசையின்
தோன்ற மகிழ் கூர்ந்து துயிலும்

தென் மலய மாமுனிக்கு அருள் செருத்தணிகை இறை
செங்கீரை ஆடியருளே!
சேணாடர் அர்ச்சனை செய் சேனாபதிக் குரிசில்
செங்கீரை ஆடியருளே! 15

வெள்ளி வரையில் குடி விழைந்த பரமன் செவியில்
வீறு சங்கக் குழையினை
மென் மலர்க் கைப் பிடித்து, உரம் மேவு சிரமாலை
மீது ஏறு சோபானமாய்,

துள்ளிக் களித்து, அடி சிவப்புற மிதித்துத்
துவைத்துச் சுவற்கண் ஏறி,
சுடர் பொற் கடுக்கை பொதி வேணியை அவிழ்த்திட,
சுரநதி குதிப்ப மூழ்கி,

பிள்ளைமதியைப் பிடித்து அரவின்வாய் வைத்து, அவண்
பிரியாத முகிலை ஈர்ப்ப,
பெரிது உடல் நடுங்கித் தடித்தொடும் இடித்து மழை
பெய்ய விளையாட்டு அயர்தரும்

தெள்ளு புனல் ஊறு கற்சுனை மருவு தணிகை இறை
செங்கீரை ஆடியருளே!
சேணாடர் அர்ச்சனை செய் சேனாபதிக் குரிசில்
செங்கீரை ஆடியருளே! 16

## வேறு

மழை நிகர் விழியின் அருட்கடை ஆட,
மணிப்பட்டமும் ஆட,
மார்பில் அணிந்த மதாணியும் ஆட,
வரைத்தோள் அணி ஆட,

தழை கனிவாய் ஒழுகும் புனல் ஆட,
சரி தொந்தியும் ஆட,
தண்டை சதங்கை புலம்பு பதம் திகழ்
தனி நூபுரம் ஆட,

குழை அணியும் பன்னிரு செவி ஆட,
குஞ்சி அசைந்து ஆட,
கோது அறு பொன் அரைநாண் அரை ஆட,
குற்றுடைவாள் ஆட,

அழிவு இல் பதம் தரு தணிகை அமர்ந்தவன்
ஆடுக, செங்கீரை!
அமரர் புகழ்ந்திட அசுரரை வென்றவன்
ஆடுக, செங்கீரை! 17

நிறம் திகழ் குஞ்சி புனைந்திடு மலரொடு
நிமிர்தலை ஆறு ஆட,
நெடுநிலமிசை எழு வரை உறழ் திணிபுய
நீள் கடகமும் ஆட,

மறம் திகழ் அவுணர் உரம் தொளைபட விடு
வைவேல் வெயில் ஆட
மார்பில் வனைந்திடு நீபம் உறும் களி
வண்டு ததைந்து ஆட,

சிறந்திடு செங்கழுநீர் இதழ் அங்குலி
செறி மோதிரம் ஆட,
செவ் அரையில் திகழ் வட்டுடை ஆட,
சேவற் கொடி ஆட,

அறம் திகழ் அன்பர் தொழும் தணிகைப் பரன்
ஆடுக, செங்கீரை!
அமரர் புகழ்ந்திட அசுரரை வென்றவன்
ஆடுக, செங்கீரை! 18

திருமலர் வாய்தொறும் நகைநிலவு ஆட,
செந்துவர் இதழ் ஆட,
தெரிவையர் மதர்விழி இருபுறம் ஆட,
சிறுநுதல் வேர்வு ஆட,

குரு மணி மேகலை புனை வடம் ஆட,
குல மா மயில் ஆட,
கோது அறு மாதவர் பூசுரர் நெஞ்சு
குழைந்து குழைந்து ஆட,



தரு அயிராணி பொன்மாது எனும் மாமியர்
தாம் களி கூர்ந்து ஆட,
தாரகை ஆகிய தாயரும் ஆசை
தழைந்து மகிழ்ந்து ஆட,

அரி கமலாசனர் பணி தணிகாசலன்
ஆடுக, செங்கீரை!
அமரர் புகழ்ந்திட அசுரரை வென்றவன்
ஆடுக, செங்கீரை! 19

(வேறு)

உமையொடு பரசிவன், 'உலகினை வலம் முனம்
வந்தால், இன்றேதான்
ஒரு கனி உதவுதும்;இது பொழுது அகலுதிர்!'
என்றே முன்பு ஓத,

தமையனொடு இகல் புரிதரு பிணிமுகமிசை
தங்காது அங்கு ஏறி,
சகம் முழுதையும் ஒரு நொடியினில் வலம்வரு
தந்தாய்! செந்தூரா!

கமை அறு நிசிசரர் அவிதர அயில் விடு
கந்தா! மந்தாரக்
கடிமலர் முடிபுனை சசிமகள் வடுவகிர்
கண் பாவும் தோளா!

சிமையமது உயரிய தணிகையில் அறுமுக!
செங்கோ செங்கீரை!
திருமகள் மருமகன் என வரு குருபர!
செங்கோ செங்கீரை! 20

கஞ்சன் இகழ்ந்து நடந்திட, அங்கு அது
கண்டே, வெங்கோபக்
கனல் படு மனமொடும், 'உலகினை மறைகொடு
தந்தாய் என்றால், நீ

விஞ்சிய சங்கிரகம் படு மந்திரம்
முந்து ''ஓம்'' என்பாயேல்,
விரி பொருள் எது? அது புகலுதி!' எனலும்,
மயங்கா நின்றானை.

குஞ்சி உறும் தலை பொந்து படும்படி
கொந்து ஆரும் பாணிக்
குரு விரல் பொதிதர, ஒரு முறை அறைதரு
குன்றே! பொன் தோய் கற்

செஞ்சிலை கொண்டவன் அன்று அருள் சுந்தர!
செங்கோ செங்கீரை
திணி மல இருள் தவிர் தணிகையில் வரு குக!
செங்கோ செங்கீரை! 21

## 3. தாலப்பருவம்

பாயாவேங்கை நிழற் பிணைமேல்
பாயும் வேங்கை அதிர்ப்பு ஒலியால்
பறவாக்குளவி நிழல் இருந்து,
பறக்கும் சிறை எண்காற்பறவை

காயா-அத்திக் கொம்பு ஒடித்து,
கடுகும் வயமாவினைக் கவர்ந்து,
காய்க்கும் அத்திமிசை இறங்க
கனி தேர் கடுவன் கற்பகத்தில்

தாய் வான் அரம்பைக்கு எதிர் நடிப்ப,
தனி வானவர் ஆன் பால் ஊட்டும்
தணியா வளம் கூர் இறும்பூது
தழைக்கும் தணிகாசலத்தில் இருந்து

ஆயாய் உயிரைப் புரந்து அளிக்கும்
அரசே! தாலோ தாலேலோ!
அழகு ஆர் மயில்வாகனம் ஏறும்
அமுதே! தாலோ தாலேலோ! 22

ஏலமரம், தக்கோலம், அகில்
இலவங்கம், பச்சிலைமரம், தேக்கு,
எழில் சந்தனம், குங்குமமரம்
எறிந்து கொளுவி வனசரர்கள்

சால வெறுத்து வனம் புகுந்து
தவம் செய் முனிவர் உதிர் சருகு
தண்ணீர் கிழங்கு ஆதிகள் உண்ணும்
தகைமை காட்டு மலைச் சாரல்



கோலம் அகழும் அளையில் அராக்
கொழுஞ்சூட்டு எரியும் மணி வெயிலால்
குளிர் பூம் பொழிலின் இருள் நீங்க,
குற மா மகளிர் விழைந்து ஆடும்

ஆலம் பெருகும் சுனைத் தணிகைக்கு
அரசே! தாலோ தாலேலோ!
அழகு ஆர் மயில் வாகனம் ஏறும்
அமுதே! தாலோ தாலேலோ! 23

வெள்ளில் கனியால் அடுப்பு அமைத்து,
வேரல்உகு முத்து-அரிசிதனை
வேடர் அரிந்து கொணர்ந்து அளித்த
வேழச் செவி ஆம் முறத்து ஏற்றும்

புள்ளி படு மான் தோல்-பாய் மேல்
புடைத்துக் கொழித்துத் தறித்து எடுத்தும்
பொன்னம் துடிக்கண் தாழியுறும்
புதுத் தேனொடும் பெய்து, உலை ஏற்றி,

சுள்ளி அகில் சந்தன விறகில்
சுடர் மாணிக்கத் .தீ மூட்டி,
துடுப்பா மருப்பில் துழாவு சிறு
சோறு அட்டு, எயினப் பேதையர் கை

அள்ளி விளையாட்டு அயர் தணிகைக்கு
அரசே! தாலோ தாலேலோ!
அழகு ஆர் மயில்வாகனம் ஏறும்
அமுதே! தாலோ தாலேலோ! 24

கல்ஆர் சுனையில் சுரபியினம்
கறந்த பாலில் செவ் அரம்பைக்
கனிகள் நழுவி விழ, அதனை—
கனியின் பணை வாழ் கிளியினமும்

வில் ஆர் வேடப் பாவையரும்
விளரி இசை யாழ் விஞ்சையரும்
வெற்பில் தவம் செய் முனிவரரும்
வேழப் பிடியின் கரிணிகளும்

செல் ஆர் பொழில் சேர் கோடரமும்
சிறக்கும் தெய்வ மடந்தையரும்—
தின்று, களிப்புற்று, அனுதினமும்
தீரா இறும்பூதுடன் உறையும்

அல் ஆர் நீலம் அலர்தணிகைக்கு
அரசே! தாலோ தாலேலோ!
அழகு ஆர் மயில் வாகனம் ஏறும்
அமுதே! தாலோ தாலேலோ. 25

வேரல் மணியின் குவை ஒருபால்,
வேழமருப்பின் குவை ஒருபால்,
விளங்கும் வயிரக் குவை ஒருபால்,
விழையும் வைடூரியம் ஒருபால்,

நேர் இல் அரவ மணி ஒருபால்,
நீல மணியின் குவை ஒருபால்,
நிழல் சேர் பச்சைக் குவை ஒருபால்,
நிறம் ஆர் கனகக் குவை ஒருபால்,

தேரும் புகழ்க் கல்லார கிரிச்
செட்டி எனப் பேர் படைத்ததனால்,
தெரிந்து விலை ஆக்குறக் குவித்த
சீர்மை பொருவும் திருத்தணிகை,

ஆரல் உதவும் பன்னிரு கை
அரசே! தாலோ தாலேலோ!
அழகு ஆர் மயில்வாகனம் ஏறும்
அமுதே! தாலோ தாலேலோ! 26

(வேறு)

துணிபடு வெண்பிறை தவழ் முடியின் புடை
சொரி முகிலின் புனல் வார்
சுனையில் விழுந்து, அதின் உறு புனலும் கொடு
தொடர் மதம் உந்தியிடா;

திணி அகில் சந்தன மரம், முதிர் குங்குமம்,
திகழ் துடியும் பெயரா;
செறி பனசம், கணி, மலர்வழை, பைங்கழை
சிறு மிளகும் கொணரா;



மணி வயிரம், கதிர் மரகதம், அஞ்சன
மணியினொடும் புணரா;
மருவு புலன் கெழும் அருவி இழிந்திடு
வளமை தழைந்து, எழில் கூர்

தணிகை நெடுங்கிரி அமரும் நெடுந்தகை!
தாலோ தாலேலோ!
சந்தனமும் புழுகும் புனை சுந்தர!
தாலோ தாலேலோ! 27

வானதியும், குளிர் தேனடை விண்டு இழி
வார் மதுவும், கரியின்
மா மதமும், புடை சூழ் சுனையின் புனல்
மண்டிக் கொண்டு இழியா;

ஏனல், கருந்தினை, சாமை, இறுங்கு உறும்
இதையில் மிகப் பெருகி;
இறவுளர் முன்புரி மடைகள் அழிந்திட,
எல்லை கடந்து ஓடி;

கானம் அருந்தி, தவழ்ந்து, நிறைந்து, இரு
கரைகள் அழித்து ஏகும்
கம்பலை அம்பரர் கம்பம் உறும்படி
கார் ஒலியைச் சினவா;

தானம் எழும் தணிகாசல வேலவ!
தாலோ தாலேலோ!
சந்தனமும் புழுகும் புனை சுந்தர!
தாலோ தாலேலோ! 28

சூதக் கனியொடு பனசக் கனி, பொழில்
சோர் கதலிக் கனியும்,
துதை வயலில் படும் எருவின் முளைத்து, எழில்
துன்னிய செந்நெல் எலாம்—

வேதக்கிழவர் உளத்துறு காதல்
விட, கனகத்தினொடு,
மேதினி மன்னர் விடுத்திடு தான
விழுப்புனல், பூஞ்சுனை நீர்,

காதல் குறவர்கள் நானத்தொடு குடை
கல் அருவிப் புதுநீர்,
காலின் விழுந்து எதிர் பாய,-வளர்ந்து,ஒளிர்
கதிரவன் மிசை ஓங்கும்

தாதின் பொலிதரு காவிக்கிரி இறை!
தாலோ தாலேலோ!
சந்தனமும் புழுகும் புனை சுந்தர!
தாலோ தாலேலோ! 29

மரு அலர் கற்பகம் முடி அணி பொற்சசி
வாழ் வீண் ஆகாதே,
மகபதி வச்சிரதரனும் உவப்புறும்
ஊர் பாழ் ஆகாதே,

இருடிகள் சித்தர்கள் உரகர் இயக்கர்கள்
வாணாள் போகாதே,
எழுகடல் சுற்றிய புடவி இடத்துறு—
வார் நோய் ஆழாதே,

பொரு கரி பற்பல பரவி மிடுக்கு உறு
காலாள் தேரோடும்
பொருத தயித்தியர் சிரமலை அற்றிட,
வாள் கோல் வேல்ஏவும்

தரு மலர் மொய்த்திடு பரகிரியில் குக!
தாலோ, தாலேலோ!
தணிகை மலைக்கு இறை என வரு சிற்பர!
தாலோ தாலேலோ! 30

நாலு முகத்தவன் மாலை அழித்திடு
நாதா! வாதாபி
நாசம் உறச் செயும் ஞானமுனிக்கு அருள்
போதா! நீள் பாதா!

பாலின் மொழிக் கனிவாய் உமை, தற்பரை
பாலா! மா சீலா!
பாவை எழில் தெய்வயானை அணைத்திடு
மார்பா! கூதாளா!



கோல வனத்து உறு வேடர் மகட்கு இசை
கோவே! கூர்வேலா!
கூடலரைத் தெறும் கோழி மயிற் கொடி
வீரா! தேன்ஆர் பூச்

சாலை மிகுத்துள சோலை மலைக்கு இறை!
தாலோ! தாலேலோ!
தா இல் செருத்தணி மேவிய சிற்பர!
தாலோ தாலேலோ! 31

## 4. சப்பாணிப் பருவம்

இரைத்துத் திரைத்து நுரை பொங்கு கடல் ஓர் ஏழும்
இணை அறு கிடங்கது ஆக,
இடைப்படு வரைப்பு எலாம் திருஉலாப் போந்துவரும்
ஏழ் பெருந் தெருவது ஆக,

நிரைத்துத் தழைத்த பொழில் ஏழும் உய்யானமா,
நேமிவரை நெடிய மதிலா,
நீர்ப் புறக்கடல் ஆடு தெப்பக் குளத்தின் இயல்
நேராக, மேருவரை சூழ்

வரைப்பு அனைத்தும் புறக்கோவிலா, தணிகைமலை
மருவும் அந்தப்புரமதாய்,
மன் உயிர் எலாம் புரந்து ஆண்டு அரசு புரிகின்ற
வள்ளி தெய்வானை கணவா!

தரைக்குள் உயர் கும்பமுனி முடி வைத்த செங்கை கொடு
சப்பாணி கொட்டியருளே!
சரவணப் பொய்கைதனில் அவதரித்திடு முருக!
சப்பாணி கொட்டியருளே! 32

மலை அலையை அங்கையில் அடக்கி, இகல் வாதாவி
மலையலை வயிற்று அடக்கி
வண்தமிழ் எனும் புதிய தென்கலையுடன் பழைய
வடகலையை நா அடக்கி,

நிலவலயம் உத்தரம் தாழ்ந்து தென் திக்கின்மேல்
நிமிர்தலைத் தாள் அடக்கி,
நீல் நிற விடத்தினை மிடற்று அடக்கும் கயிலை
நிமலனை உளத்து அடக்கி,

குலவிய கருப்பம் நிறை மாதர் என மந்த நடை
கொண்டு வளர் தென்றல் எனும் ஓர்
குழவியைத் தன்வயின் அடக்கு மலயத்தில் அமர்
குறுமுனிக்கு அருள் குரவனாய்,

தலைமை பெறு வீட்டுநெறி காட்டு தணிகைக்கு இறைவ!
சப்பாணி கொட்டியருளே!
சரவணப் பொய்கைதனில் அவதரித்திடு முருக!
சப்பாணி கொட்டியருளே! 33

பொன்மலையை வெள்ளி வெற்பு ஆக்கி, உயர் வெள்ளிப்
பொருப்பை நீலக் கிரியதாய்ப்
புதுக்கி, இந்திரநீல வெற்பை மாணிக்கப்
பொருப்பு ஆக்கி, மாணிக்க மா

மின் மலையினைப் பவளம் ஆக்கி, மரகத வெற்பை
வெள்வயிர வெற்பது ஆக்கி,
விண் உலகை மண் ஆக்கி, மண் உலகை விண் ஆக்கி,
விரிகதிரை மதியம் ஆக்கி,

நன் மதியினைக் கதிரது ஆக்கி, விண்ணவர்கள்தமை
நானிலத்தவர்கள் ஆக்கி,
நானிலத்தவர்கள் தமை உரகர் ஆக்கி, புதுமை
நாட்டு விளையாட்டு அயர்தரும்

தன்ம விடை ஏறும் அரன் அருள் தணிகை வளர் குழவி!
சப்பாணி கொட்டியருளே!
சரவணப் பொய்கைதனில் அவதரித்திடு முருக!
சப்பாணி கொட்டியருளே! 34

பருந்தினொடு நிழல் செலும் பான்மை என விஞ்சையர்கள்
பயிலும் இயல் இசைகள் பாட,
பாங்கர் உறு வேங்கையின் பனிமலர்ச் சினை மேவு
பைந்தோகை கேட்டு உறங்கும்—

முருந்தினொடு முத்தம் உறழ் மூரல் கொடிச்சியர்கள்
முருகு வாய் வைத்து அருந்தி,
முருகன் எதிர் சாரல் வெறியாட்டு அயர்தல் நோக்கியே
முதைப் புனம் இதைப் புனம் சூழ்



குருந்தினொடு கொன்றைமிசை அமர் பசுங் கிளிகள் மகிழ்
கூர்ந்து பூவைக்கு இசைக்கும்—
குளிர் தணிகை வெற்பினில் இருந்து, மானிட வடிவு
கொண்டு, புனம் எய்தி, வள்ளி

தரும் தினையின் இடி இரந்து ஏற்ற நீள் அங்கைகொடு
சப்பாணி கொட்டியருளே!
சரவணப் பொய்கைதனில் அவதரித்திடு முருக!
சப்பாணி கொட்டியருளே! 35

கிம்புரிப் பூண் அமர் மருப்பு எனும் உலக்கை கொடு
கேழ் நிறச் சந்த உரலில்
கேடு இல் சாதிக்காய் லவங்கமொடு கர்ப்புரம்
கீறு தக்கோலம் ஏலம்

வம்பு உறு கொடிச்சியர், இடித்த வாசப் பொடிகள்
வாங்கி எழில் விஞ்சை மகளிர்,
வளர் கதிர்க் கற்றை கால் பீதாம்பரத்தை விலை
மாற்றிடும் வள்ளிமலையில்

கொம்பு முற்று அலர் வேங்கை மரமாய், விருத்தனாய்,
குன்றவர் தமக்கு ஒளித்து,
குறமான்தனக்கு மயல் பூட்டி, எழில் காட்டி, அணை
குமரனே! நிமல அழல் ஆம்

தம்பம் உற்றவன் உதவு தணிகாசலக் கடவுள்!
சப்பாணி கொட்டியருளே!
சரவணப் பொய்கைதனில் அவதரித்திடு முருக!
சப்பாணி கொட்டியருளே! 36

(வேறு)

உரகம் முழக்கிய ஒலியை அடக்கிடும்
உழைகள் உரப்பொலி; அவ்
உழையின் உரப்பொலிதனையும் அடக்கிடும்
உழுவை முழக்கு; கொடு—

வரியின் இரைப்பொலி நலிய அடக்கிடும்
வழுவை சிலப்பொலி; அவ்
வழுவை சிலப்பொலி மறைய அடக்கிடும்
வயவரிக் கர்ச்சனைகள்;

சரபம் அதிர்ப்பொலி அரியின் மிடுக்கொலி
தனையும் அடக்கியிடும்
தரு வனம் மொய்த்திடு சரி அருவித் திகழ்
தணிகை மலைக்கு இறை ஆம்

குருபர! சித்திர மயில் வரு தற்பர!
கொட்டுக சப்பாணி!
குறுமுனிவற்கு அரு மறை புகல் உத்தம!
கொட்டுக சப்பாணி! 37

தவரை வளைத்திடு சவரர் வடிக் கணை
தைத்திடும் எய்த் தேகம்
தனை உதற, கணை நிகர் கரு முள் பட
எய்த்திடும் மைக் கேழல்

அவிர் பிறையின் பிறழ் வளை எயிறு இற்றிட,
முற்கலையைப் பாயும்;
அதுவும் மருப்பு உக, எதிர் புலி கொட்புற
முட்டி எடுத்து ஏகி,

இவர் சருவில் படும்-அருவி, தினைப்புனம்
உற்று ஓடி, காவின்
இழி நறவத்தொடு செழிய மலர்த் தடம்
வற்றாமல் பாயும்—

குவளை தழைத்திடு தணிகை மலைக்கு இறை!
கொட்டுக சப்பாணி!
குறுமுனிவற்கு அரு மறை புகல் உத்தம!
கொட்டுக, சப்பாணி! 38

கந்தரம் மொய்த்திடல் கண்டு, வயப்புலி,
குஞ்சரம் என வியவா,
கடுகி அடித்திட, மழைகள் தடித்து இடி
கான்றிட, உளம் நாணி

வந்து எதிர் உற்றிடு கைம்மலை தன்னையும்
மைம்முகில் என இகழா,
மது நுகர் மக்களின் அறிவு அழிய, சரி
மலை-முழையுள் புகுதும்—



சந்திரன் வந்திட, முந்து குறத்தியர்
தண் நிழல் ஆடி என,
சந்தன குங்கும ஒண்திலதம் புனை
தனி எழிலைப் பார்க்கும்—

கொந்து அலர் பைங்குவளைத் தணிகைக்கு இறை!
கொட்டுக, சப்பாணி!
குறுமுனிவற்கு அருமறை புகல் உத்தம!
கொட்டுக சப்பாணி! 39

(வேறு)

நிரை உலகு எங்கணும் உலவி இறப்பொடும், இப்போது
நிகழ்வு வரும் செயல் அறிதரு நல்-தவன் நட்போடும்
புரியும் மகம்தனில் எழுதரு செச்சை மதத்தாலே
பொருது, கொடுஞ்சினம் முடுகி, அனைத்தும்
அழித்து ஏகல்

கருதி, மறிந்திடு சுரர் அபயத்தொடும் முன் போத,
கருணை புரிந்து, அச வலியை அடக்கி, அடித்து ஏறும்
தரு நிகர் செங்கையில் ஒருமுறை கொட்டுக சப்பாணி!
தணிகை நெடுங்கிரி வரும் இறை! கொட்டுக,
சப்பாணி! 40

வேழமுகத்தவ னோடு இகலி, கனியைப் பேணி
மேதினி சுற்றுறும் மாதிரம் எட்டும் நொடிப் போதில்
சூழு மயிற்பரி ஏறி, மணிக் கடலில் போகி,
சூரனை அட்டு, உயர் வானவர் பொற்பதியில் கூடி

வாழ அளித்து, ஒரு வாசவன் பெற்ற மடப்பாவை —
வாய் வதுவைத் தொழில் யாவும் முடித்திடு
மெய்த்தேவ!
தாழும் மறக்கொடி நாயக! கொட்டுக, சப்பாணி
தா இல் செருத்தணி வேலவ! கொட்டுக,
சப்பாணி! 41

## 5. முத்தப்பருவம்

தூங்கும் துளைக்கைப் பிறைமருப்புச்
சொரி மும்மதம் தாழ் கவுள் உரல்-கால்
சுழலும் சிறுகண் புகர்முகத்துத்
தும்பி நிகரும், சம்பு முதிர்

வீங்கும் கனிகள் விழுந்து அழிந்து
விரி சார் அருவி ஒழுகு இமய
வெற்பின் தவத்தால் அவதரித்து
விளங்கும் தெய்வப்பிடி மணந்து,

தீங்கு இல் ஐந்து முகத் தேவர்
சிங்கம் எனவும் பெயர் படைத்து,
செழிக்கும் திருவாலங்காட்டில்
தேவர் வணங்க நடம் புரியும்

மூங்கில் அளித்த முத்தம் அருள்
முத்தே! முத்தம் தருகவே!
மூலாத் திரியில் எழு ஞான
முளையே! முத்தம் தருகவே! 42

வழங்கும் அயமா மகம் புரிந்த
மன்னன் புதல்வர் எனும் சகரர்
வானத்து இறைவன் புரிந்த நெடு
வஞ்சம் அறியா, மாநிலத்தைக்

கிழங்கின் அகழ் மண் எல்லாம் அருந்திக்
கீழ் போய், தவம் செய்திடு முனிபால்
கிளரும் பரி கண்டு, அவற் சீற,
கிளத்து முனிவன் தவக் கனலால்

சழங்கி மாய்ந்து நிரையம் உறும்
தன்மை வினவி, பகீரதனார்
தவம் ஆறு அயுதம் ஆண்டு இயற்ற,
சதுமா மறையோன் உலகு அகன்று,

முழங்கி வரு வானதி அளித்த
முத்தே! முத்தம் தருகவே!
மூலாத் திரியில் எழு ஞான
முளையே! முத்தம் தருகவே! 43

விதி நா அமர் வெள் ஓதிமமும்
விண்டு உரம் சேர் பொன்-அனமும்
மேவும் கொழுங் கண் மலர் பூத்து,
விழையும் மதியோர்க்கு அருட்செந்தேன்



பொதி சேதாம்பல் இதழ் அவிழ்ந்து,
புரை தீர் கங்காநதி குலவி,
பொலியும் பவள வனம் அடர்ந்து,
பொன்றாது அணி மங்கல வளையின்

கதிர் வாய்ந்து, ஐங்கைக் களிற்றினுக்கும்
கவுணியனுக்கும் திருமுலைப்பால்
கறந்து கொடுத்த நேமியம்புள்
களுலி, உயிர்கள் பல அளித்தும்

முதிரா நீலக்கடல் அளித்த
முத்தே! முத்தம் தருகவே!
மூலாத்திரியில் எழு ஞான
முளையே! முத்தம் தருகவே! 44

விளரித் தீஞ் சொல் அரமகளிர்
விழைந்து குடையும் மயிர்ச் சாந்தும்
விண்-நின்று இழி கார்த்திகை மடவார்
விம்மிச் சுரக்கும் முலைப்பாலும்,

கிளர் மைக் கருங்கண் உமை கறந்த
கிண்ணத்து ஒழுகும் முலைப்பாலும்,
கேடு இல் கூலத் தரு மலரில்
கிண்டும் அளியால் சொரி தேனும்,

தளர்வு இல் சங்கு, மீன், போதா,
தாரா, நாரை, குருகு உண்டு,
தழைப்பத் தவம் செய் சரவணத்தின்
தண்ணீர்மிசை ஆயிரம் இதழ்த் தேன்

முளிரப் பூஞ் சேக்கையில் குலவு
முத்தே! முத்தம் தருகவே!
மூலாத் திரியில் எழு ஞான
முளையே! முத்தம் தருகவே! 45

மெய் வாய் மூக்குக் கண் செவியின்
வழி போய், விடயங்களை அருந்தி,
விரவும் வினையால் சுழல் பிறவி—
வேலை கடக்கும் கருத்துடையார்

ஐவாய் வேட்கை அவா ஒழிந்திட்டு
ஆறு ஆதாரப் படி ஏறி,
ஆறோடு ஆறு அங்குலம் மீதில்
அறியும் நிமலப் பெருவெளியில்

கை வாய் மழுவும் கறை மிடறும்
கண் ஆர் நுதலும் பிறை முடியும்
கவினத் தோன்றும் சிவனிடத்தில்
கலந்த உமையாள் உடன்பிறந்த

மொய் வான் அறுமீன் உவந்து அளித்த
முத்தே! முத்தம் தருகவே!
மூலாத் திரியில் எழு ஞான
முளையே! முத்தம் தருகவே! 46

(வேறு)

கயிலை வெற்பும், பனி கொள் இமய வெற்பும், புதிய
கனக வெற்பும், குறைகள் தீர்
கடவுள் வெற்பும், சமரபுரியின் வெற்பும், பலவு
கனியும் வெற்பும், புனிதமா

மயிலை வெற்பும், தழலின் அருணை வெற்பும், பொதிய
மலைய வெற்பும், கலை நிலா
மதிய வெற்பும், கதிரின் உதய வெற்பும், சுருதி
மறையின் வெற்பும், கொடி உறா

நியம வெற்பும், சுடிகை உரக வெற்பும், களிறு
நியதி அர்ச்சனை புரிய வாழ்
நெடிய வெற்பும், திகிரி வடிவு வெற்பும், வதுவை
நிகழும் வெற்பும், விடையதாம்

சயில வெற்பும், பழைய குடியிருக்கும் குமர!
தருக, முத்தம் தருகவே!
தணிகை வெற்பின்கண் அமர் அறுமுகப் பொன் குழவி!
தருக, முத்தம் தருகவே! 47

இருடியர்க்கும் பழைய உரகருக்கும் துயர் இல்
இமையவர்க்கும் கிரணம் ஆர்
எரி கதிர்க்கும் குளிரும் மதியினுக்கும் புவியில்
எவர்களுக்கும் வழியதாய்,



வரவிடுத்து, அங்கு அவர்கள் அறிவு அழித்து, அஞ்சி உயிர்
மடி இருட் கங்குல் எனவே
மதி மயக்கும் குருகு பெயர் படைத்து, அண்டம் உறு
மலையினுள் சென்று துயர் கூர்

உருவுடைத் தம்பியரும் உயர் இலக்கம் பெயரும்
ஒளி பெருக்கும் கணவரோடு
உயிர் படைத்து, அங்கண் எழ மலையொடு அத்
தும்பிமுக
னொடு கணத்து அஞ்சி விழவே

தருமலர்ச் செங்கை உறு மயில் விடுக்கும் குமர!
தருக, முத்தம் தருகவே!
தணிகை வெற்பின்கண் அமர் அறுமுகப் பொன்குழவி!
தருக, முத்தம் தருகவே! 48

மழையின் முத்தும், தவள மதியின் முத்தும், கமல
மலரின் முத்தும், கரியின் நீள்
வளர் மருப்பின்கண் ஒளி கிளரும் முத்தும், கதலி
வரு கனிக்கண் பொழி நிலா

விதையும் முத்தும், குருகு தலையின் முத்தும், கமுகின்
மிடையும் முத்தும், தெரிவைமார்
மிடறின் முத்தும், கிருடி எயிறு முத்தும், கிளையின்
விளையும் முத்தும், பணையின் ஆர்

கழையின் முத்தும், பணிலம் உதவும் முத்தும், செநெலின்
கதிரின் முத்தும், புனல் உலாம்
கயலின் முத்தும், சலவர் முழுகு நத்தின் வயிறு
கலுழும் முத்தும், புகழதாய்த்

தழையும் முத்தும் புனையும் மணி உரத்தின் குமர!
தருக, முத்தம் தருகவே!
தணிகை வெற்பின்கண் அமர் அறுமுகப் பொன்குழவி!
தருக, முத்தம் தருகவே! 49

(வேறு)

தருவும் சுரபியும் மணியும் கடை விழி
தத்தும் அருட்பார்வை
தனை நம்புற, இரு புறமும் செறிதர,
மொய்த்த கடற்சேனை

மருவும் சபைதனில் எவரும் பணி செய
உற்ற கொலுக்கூடம்
மணியின் கணம் ஒளிர் அணையின் புடை அரசு
உற்ற சசிக்கோவின்

திருவெண்கரி தரும் ஒரு பைங்கொடி படர்
வெற்றி மணித்தோளில்
திகழ் சந்தனம் அகில் புழுகும் புனைதரு
சித்ர மயிற்பாகா!

முருகு உண்டு அளியினம் உலவும் தணிகையில்
முத்தம் அளித்தருளே!
முதிரும் சுவையமுது ஒழுகும் துவர்இதழ்
முத்தம் அளித்தருளே! 50

உனது இன்புறு கவிபுகல் என்று அனுதினம்
உற்று அறிவித்திடவும்,
உயர் செந்தமிழ் சிறிது அறைகின்றிலன் என
ஒட்டு கவிப்புலவன்

அனம் இன்று என மதுரையில் அந்தணன்அடர்
வற்கடம் உற்றிடலும்
அழுது அன்பொடு தொழ, அறிசுந்தரன் அருள்
பொற்கவியைச் சொலவே,

இனிது அன்று இது பொருள் என வந்து, இறைதரு
குட்டம் அடுத்திடு நோய்
இடரும் குகை உறு சிறையும் தவிர்தரு
நற்கவி சொற்றிடலும்,

முனிவு இன்று எதிர் வரும் முருகன் தணிகையில்
முத்தம் அளித்தருளே!
முதிரும் சுவையமுது ஒழுகும் துவர் இதழ்
முத்தம் அளித்தருளே! 51

## 6. வருகைப் பருவம்

**கண்ணனும்** கனக நிற வண்ணனும் திரு நுதற்-
**கண்ணனும்** ஒருங்கு உறைதல்போல்
கருமலை இடத்து உற, செம்மலை வலத்து உற,
கவினும் வெண்மலை இடையதாய்,



பண் அமரும் நந்திநதி புடைசூழ, இடைஇடைப்
பைஞ்சுனை வயங்க, மீச்செல்
பயோதரம் வயா நலிவுற, கொடி கடாக்கல் பல
பாவையர் மருத்துவம் செய்து,

உள் நிலவு நீர் மகவு உயிர்த்திட, விலாப்புறத்து
ஒண் கரத்தால் வருடல்போல்,
ஓங்கு முடிமேல் ஊன்று வெள்ளிவீழ் என்ன மழை
ஒழுகு நீர் அருவி இழிதல்

தண் நிலவு கல்லார மாலை அணி மாண்பு நிகர்
தணிகை நாயகன் வருகவே!
தடா மலப்பிணி எனை அடாது சிற்சுகம் அருள்
சடானனக் குரு வருகவே! 52

நாவலம் பெயர்புனை பொலந்தகடு அணிந்ததுஎன
நனை இதழ் முறுக்கு அவிழ்ந்து,
நளிர் வண்டு உணாது ஒளிர் விளக்கு ஏற்றி
வைத்தது என
நறு மலர்கள் துறு செண்பகக்

காவில், அந்தணர் புரியும் ஓம அங்கியின் நிமிர்
கரும்புகைப் படலம் மீப் போய்,
கடவுளர்க்கு ஆயுளை வளர்த்துமுகில் மேனி பொதி
காட்சியால் களி துளும்பி,

தூவுமின் குலவு நகை வாய் நவின்று உரறி மதி
தோறும் மும்மாரி பொழி நீர்
துன்னு கண் பணையில் வளர் செஞ்சாலி ஓங்கு கதிர்
சூரியன் பரிகள் தினவே,

தா இல் இன்பு உறு குடிகள் மேவு தண்ணடை குலவு
தணிகை நாயகன் வருகவே!
தடா மலப் பிணி எனை அடாது சிற்சுகம் அருள்
சடானனக் குரு வருகவே! 53

ஆசினியின் முட்புறக் கனி பழுத்து, ஒண்புவி
அதிர்ந்திட வெடித்த விடரின்
அவிர் சுளை விரிந்து நறை ஒழுகு மணம் எண்திக்கும்
அளவு கால் வழியின் ஓடி,

மூசு வண்டினம் அளவி மொய்த்தல், நிதியின் புதையல்
முன் கண்டு கவரும் வறியோர்
முறைமகள் தெரித்திடும் சாரல் உறு சோலைகளின்
முதிர் கறிக்கொடியின் மிளகைக்

கூசு கரும் இள மந்தி தின்று, அழுதல் கண்டு, வன்
கோடரம் தேனின் அடையைக்
கொண்டு வந்து அதன் நாவிடைப் பிழிந்திடலும், மகிழ்
கூர்ந்து விளையாடு பணைசூழ்

தாசரதி ஆசிரியன் ஆகி உயர் வாழ்வு தரு
தணிகை நாயகன் வருகவே!
தடா மலப்பிணி எனை அடாது சிற்சுகம் அருள்
சடானனக் குரு வருகவே! 54

கானத்தை ஒத்த பைங் கதலியின் புலி அடிய
காய்க்குலை அறுத்து, மீப் போய்,
கமுகு இளம் பாளை மடல் கீறி, முப்புடைய தெங்-
கம் பழம் உதிர்த்து எழுந்து,

வானத்து அகட்டைப் பிளந்து, மழை சிதறி, உயர்
மதியின் உறு மானை முட்டி,
வானமீனைச் சினந்து, ஆகாயகங் கையிடை
வளர் சுறவின் முள் தகர்த்து,

கூன் நத்தை ஒத்த கண்டத்து அரம்பையர் செவிக்
குழை மகரமும் கிழித்து,
கோளகை இடித்து, புறம் கோத்த நீரில்
குதிக்கும் இள வாளை உகளும்

தானத்தினொடு மருவி, நீர் ஆறு பாய் வயல்
தணிகை நாயகன் வருகவே!
தடா மலப் பிணி எனை அடாது சிற்சுகம் அருள்
சடானனக் குரு வருகவே! 55

வாள் தடங்கண் செறி உழத்தியர் சரோருக
மலர்க்களை எடுத்து, அருந்தி,
மரு மலர்க்கைக் கோப்புடன் குரவை ஆடும் ஒலி
மஞ்சின் ஒலியைப் புடைப்ப,



நாட்ட அருஞ் சுமைகள் தரு தொழுவரைப் போர்மேல்
நயந்து இவர்ந்து ஏறும் உழவர்,
நாவலோ!' என்று கூவிளி கொளும் சும்மை அலை
நரலையைத் தட்ப, வயலின்

ஈட்ட அருங்கள் தரளம் முதிர் கரும்பைத் தறித்து
எந்திரத்து இட்டு மள்ளர்
எறியும் முட்கோல் கொடு கடாவைத் தெழிக்கும் ஒலி
இடி-ஒலியை மாற்ற, அணி தோல்

தாள் துணைச் செஞ்சூட்ட அனம் உலவு பண்ணை சூழ்
தணிகை நாயகன் வருகவே!
தடா மலப் பிணி எனை அடாது சிற்சுகம் அருள்
சடானனக் குரு வருகவே! 56

(வேறு)

கன்னல் குதலைச் செங்கனி வாய்க்
கலச முலைப் பொற் கடைசியர்தம்
கருங்கண் மலரைப் பூந்தடத்தில்
கமலத்து அருகு முறுக்கு அவிழும்

நன்னர்க் குவளை என அறுகால்
நாடி, பெடையினொடு சுழலும்—
நகைத் தண் தரளம் பொழி நிலவால்
நறும் பூங் குமுதம் வாய் விரியும்—

பின்னல். குழலை மேகம் எனப்
பெருகுங் களிமா மயில் அகவும்—
பிறழும் வளைக்கை கஞ்சம் எனப்
பிரியாது அனங்கள் உவந்து ஏறும்—

வன்னப் பணை சூழ் செருத்தணிகை
வாழ்வே! வருக, வருகவே!
மலையான் உதவும் உமையாள் கண்-
மணியே! வருக, வருகவே! 57

தென்றல் கொழுந்து தவழ் பொழிலில்
செறி பூங் கழை சேர் வழை நிழலில்
தினையின் கதிர் தின்று, அருவி இழி
தீம் தேன் உண்டு, வாய் குதட்டும்

குன்றக் குகைவாய் மோட்டு எருமை
குடம் நேர் செருத்தல் உகு தீம் பால்
குட்டம் பலவும் நிரப்பியிட,
குதிக்கும் கயல்கள் உண்டு, மயல்

துன்றி, கமலமிசை உறங்கும்
தூநீர் மருதம் பற்பல சூழ்
சோலை உயர் விண் கற்பகப் பூஞ்
சோலை எனப் பொன்மலர் கஞலும்

மன்றல் குவளை அலர் தணிகை
வாழ்வே! வருக, வருகவே!
மலையான் உதவும் உமையாள் கண்-
மணியே! வருக, வருகவே! 58

பிறப்பும் இறப்பும் எவ்வுயிர்க்கும்
பிறழாது அமரும் திறம் போலப்
பெருகும் புனல் பாய் வயல்கள்தொறும்
பின்னல் கதிரின் செந்நெல் முதிர்ந்து

அறுப்பும் படுப்பும் உழுது பரம்பு
அடித்து விதைத்து நடு நடவும்
அகலாது உழவர் செறி பணை சூழ்ந்து,
அழகு ஆர் கன்னல்-காடு உழக்கி,

ஒறுக்கும் மத வாரணம் பிடியோடு
உலவித் திரியும் சாரல் வளர்ந்து
ஓங்கும் மூங்கில் தலையின் மயில்
உலவும் கழைக்கூத்தரின் அகவி,

மறப்பு இல் இறும்பூது உறும் தணிகை
வாழ்வே! வருக, வருகவே!
மலையான் உதவும் உமையாள் கண்-
மணியே! வருக, வருகவே! 59

(வேறு)

தகுவர் முடிகள் உருள, எயிறு
தரள நிரையின் உதிர, வாய்
தடிகள் உதிரம் ஒழுக, வயிறு
சரிய, மலையை அனைய தோள்



தொகுகை, நெடிய மிடறு, கழல்கள்,
துடைகள், இடைகள் துணியவே,
சுழலும் விழிகள் சிதற, அலகை
சுலவு கழுகு நரிகள் நாய்

புகுத, அயிலை எறியும் இறைவ!
புகர் இல் தணிகை வரையில் வாழ்
புனித முருக! அரியின் மருக!
புலவர் மலர்கள் பொழிய நீள்

மகுட நிரைகள் அசைய, விசைய
மயிலும் அசைய வருகவே!
மறுகும் எமது பிறவி அகல
வருக வருக வருகவே! 60

சரண மலர்கள் அசைய, விருது
தழுவு கழலும் அசையவே,
சகல உலகும் விலை இல் அறுவை
தழையும் இடையும் அசையவே,

அருண கிரண கடகம் அசைய,
அயிலும் அசைய, அழிவு இலா
அழகு புயமும் அசைய, இருவர்
அணையும் மருமம் அசையவே,

முரணும் மகர குழைகள் அசைய,
முறுவல் அணியும் அசைய, நீர்
முழுகு தணிகை வரையில் அலரும்
முருகு குவளை அணி கொள் தார்

மருவும் முடிகள் அசைய, விசைய
மயிலும் அசைய வருகவே!
மறுகும் எமது பிறவி அகல
வருக வருக வருகவே! 61

## 7. அம்புலிப் பருவம்

### சாமம்

சந்ததமும் இறைவர் விழி தோற்றினாய்; இவன் இறைவர்-
தனி நுதல்விழிப் பிறந்தான்;

தாவும் ஒரு மானைப் புணர்ந்தாய்; இவன் குறவர்
தரு மானையும் புணர்ந்தான்;

நந்து கலை ஈரெட்டு மன்னினாய்; அறுபத்து
நாலு கலை இவன் உணர்ந்தான்;
நாகம் அணி ஈசர் முடி ஏறினாய்; இங்கு இவனும்
நாக மணிமுடி ஏறினான்;

வந்த புலவர்க்கு அமுதம் ஈந்தாய்; இவன் புலவர்
வந்திக்க, அமுதம் ஈவான்;
வாலிபம் அறும் குழவி ஆகினாய்; இவன் என்றும்
வாலிபக் குழவி ஆனான்;

அந்த வகை தெரிதி நீ, தென்தணிகை வெற்பனோடு
அம்புலீ! ஆட வாவே!
அறிவாளர் சித்தம் உறும் அறுமா முகத்தனுடன்
அம்புலீ! ஆட வாவே! 62

## பேதம்

மேருவினை என்றும் நீ வலமாக வருவை; இவன்
மேரு தலைகீழ் ஆக்கினான்;
விளம்பும் உபதேச குரு இல் பிழைத்தாய்; இவன்
விளம்பு குரு உரை நயந்தான்;

சாரும் வடிவு அழிதி நீ; இவனும் அழியாது வளர்
சாரு வடிவாய் இருந்தான்;
சந்ததமும் நீங்காக் களங்கம் உற்றாய்; இவன்
சார்ந்திடு களங்கம் இல்லான்;

சீருடைய அத்திரி விழித் தாது ஆகி எண்
திக்கினும் சிதறினை; இவன்
சிவன் நுதற்கண் தழற்பொறியாய்த் தருப்பையில்
சேர்ந்து மக உருவம் ஆனான்;

யாரும் உணர் நிற்கு அதிகம் ஆம் தணிகை வெற்பனோடு
அம்புலீ! ஆட வாவே!
அறிவாளர் சித்தம் உறும் அறுமா முகத்தனுடன்
அம்புலீ! ஆட வாவே! 63

உரோகணி யிடத்து அதிக மோகம் ஆனாய்; இவனும்
ஒளிர் ஆரல் பால் உவந்தான்;



உயர் தலை உவாவினில் கலை அழிந்தாய்; இவனும்
உயர் தலை உவாவில் அழியான்;

சராசர உயிர்க்கு உணவு நல்கினாய்; ஞானியர்
தமக்கு அழிவு இல்வீடு அளித்தான்;
தனி நாளினுக்கு அரசன் ஆகினாய்; இவன் அமரர்
தங்களுக்கு அரசன் ஆனான்;

இராவினிடை வானத்து எழுந்து திரிவாய்; இவன்
இராப் பகல் இலா இடத்தான்;
இழிவு இலாச் சிறுவிதி சபித்திடப்படுவை; இவன்
எழில் விதியினைச் சிறை செய்தான்;

அராவினுக்கு அஞ்சா மயில் தணிகை வெற்பனோடு
அம்புலீ! ஆட வாவே!
அறிவாளர் சித்தம் உறும் அறுமா முகத்தனுடன்
அம்புலீ! ஆட வாவே! 64

## தானம்

தக்கன் நெடு சாபம் தவிர்த்திடுவன்; நரைதிரைகள்
தாங்கும் உடலும் கூனியே
சாய்ந்து கிழம் ஆகி நீ சாம் துயரும் நீக்குவன்;
சகல கலையும் தெரிந்த

மிக்க குரு இல்லைப் பிழைத்த பழி நீக்கிடுவன்;
மெய்க் களங்கமும் அறுப்பன்;
வெங்கதிர்க்கு அஞ்சி ஒளி அவியாமல் அருளுவன்;
விட அரவின் அச்சு அறுப்பன்;

பக்கம் இருபாலும் முன்பக்கமே போல வளர்
பான்மையும் அறிந்து உதவுவன்;
பைங்கூழினுக்கு இறைமை அல்லாமல் உலகு
பதினாலினுக்கு இறைமை தருவன்;

அக்கதை தெரிந்து தணிகைக்கு இறைவனோடு அமர்ந்து
அம்புலீ! ஆட வாவே!
அறிவாளர் சித்தம் உறும் அறுமா முகத்தனுடன்
அம்புலீ! ஆட வாவே! 65

புற இருளை நீக்கியிடும் உனது நெஞ்சு அகலாது
புக்க இருளைத் துரப்பன்;

பொங்கும் அலைகடல் கண்டு மகிழ் உனக்கு அலையாத
பூரணக் கடல் அளிப்பன்;

குறை மதியம் ஆம் உனக்கு அருள் ஞான மோன நிலை
குலவு நிறைமதி அளிப்பன்;
கொடிய அரவுக்கு அஞ்சும் உன் தனக்கு உலகம்
கொடுங் கயிற்று அரவு ஆக்குவன்;

மறுகு அமுத உரு ஆகும் உன்தனக்கு அழியாத
வாய் அமுதமொழி ஈகுவன்;
வான் எலாம் உலவிடும் உனக்கு அரிய சிற்கன
வானம் உறு நிலை அளிப்பன்;

அறுதி பெறு என் சொலை வினாய்த் தணிகை
வெற்பனோடு
அம்புலீ! ஆட வாவே!
அறிவாளர் சித்தம் உறும் அறுமா முகத்தனுடன்
அம்புலீ! ஆட வாவே! 66

### தண்டம்
### (வேறு)

சே ஊரும் சிவன் நீர் மேவும் சடை
சேர்வாய் நன்று இது ஆனாலும்,
தேன் ஆர் பைங்கழை பூ ஆர் அம்பு இறை
சீர் சால் வெண்குடை ஆனாலும்,

கா வாழ் இந்திரன் வானோர் நுங்க முன்
கால்வாய் பொங்கு அமிர்து ஆனாலும்,
கான் ஆரும் பயிர் ஊண் ஆகும்படி
காய்வாய் தண் கதிர் ஆனாலும்,

'நீ வா!' என்று இவன் ஓதா முன்பு எதிர்
நீதான் வந்திலை யானாயேல்,
நீள் காலின் றளையோவாய்; அம்புயம்
நேராகும் துயர் ஈவானால்;

மா ஆர் பைங் கழுநீர் வாழும் கிரி
வாவா அம்புலி வாவாவே!
மாதேவன் குகனோடு ஆடும்படி
வாவா அம்புலி, வாவாவே! 67



தாயாய் இன்பு அருள் சேய் வா என்றலும்
தாழ்வாய் வந்திலை; போவாயேல்,
தாய்வாய் வந்து அலை மோதா நின்று, இருள்
சார்வாய், வஞ்சகனாய் நீயும்

தேய்வாய் வெங்கய நோயால்; வெங்கதிர்
சேர்போது உன் கதிர் வீவாயே;
தீ ஆரும் பணி வாயால் உண்டு இடர்
தீராது அங்கு உழல்வாய் வானில்;

தூய்து ஆம் நின்குரு மால் ஆம் அங்கனை
தூதால் வந்து அணை சோரா! நீள்
சோமா! பெண்பழி போமாறும், கறை
தூழா வண் வடிவு ஆமாறும்,

மாயாது ஒண் கழுநீர் வாழும் கிரி
வாவா அம்புலி வாவாவே!
மாதேவன் குகனோடு ஆடும்படி
வாவா அம்புலி, வாவாவே! 68

வேறு ஆகும் சுரர் மாயோன் நண்பு உறு
வேதாவும் தொழுதே ஏகி,
வீடு ஆர் தம்பதி சேர் மாஒண் கதை
மேலோரும் சொல ஓர்வாய் நீ;

கூறாமுன் வருவாயேல், நன்று அருள்
கூர்வாய்; வண்புகழ் சேர்வாயே;
கூசாது அன்பொடு நீ வா வெம் பணி
கோள் ஆரும் பகை தீர்வாயே;

சீறா வந்து எதிர் மாய் சூரன் செரு
தீரா நின்றது; மா பாவம்
தேயா நின்றது; வாழ்வு ஈகின்றது;
தேன் ஆரும் சுனை ஆர் பானல்

மாறாது அம் புவியோர் தாழும் கிரி
வாவா அம்புலி வாவாவே!
மாதேவன் குகனோடு ஆடும்படி
வாவா அம்புலி, வாவாவே! 69

(வேறு)

வானில் உறுவோர் அந்தணர்கள்
வாடி அழுதே துன்புறலும்,
மாயை தரு சூரன் சிரமும்
வாழும் அரிமாவின் சிரமும்

தான முடி தோயும் கிரியும்
தாருகனும் வீழும்படிமுன்
சாடும் அயில் ஏவும் கரம் நீள்
தாள்கள் தொழுவார் அம் புவியில்

ஊனம் இலரால்; இங்கு வராது
ஓடி உழல்வாய்; நன்று அலவே!
ஓதும் முன் நீ வந்திலையேல்,
ஊனம் உறுவாய்; அங்கு அதனால்

ஆனையினம் ஆரும் தணிகை
ஆட வருவாய், அம்புலியே!
ஆறுமுகனோடு இங்கு ஒரு நீ
ஆட வருவாய், அம்புலியே! 70

வீடு பெறலாம்; அன்பர் பெறு
மேன்மை பெறலாம்; செங்கதிர் முன்
வீறு பெறலாம்; எங்கும் உழல்
வேலை தவிர் வாழ்வும் பெறலாம்;

மாடு பெறலாம்; நொந்து அழியா
வாய்மை பெறலாம்; இன்ப சுக
வாரி பெறலாம்; வெம் பணியின்
வாதை அறலாம்; முந்தை முயற்

கூடும் அறலாம்; பெண் களவில்
கூடு பழி பாவம் தெறலாம்;
கூனும் அறலாம்; வந்திடு எனக்
கூறும் முனம் நீ வந்தனையேல்

ஆடு மயில் சூழ் தென்தணிகை
ஆட வருவாய், அம்புலியே!



ஆறுமுகனோடு இங்கு ஒரு நீ
ஆட வருவாய், அம்புலியே! 71

## 8. சிற்றிற் பருவம்

அல்லிக் கமலத்து அயன் நாவில்
அமரும் காயத்திரி மானும்,
அவனி முழுதும் முடி சுமக்கும்
அனந்தன் இரண்டாயிரம் நாவும்,

சொல்லற்கு அரிய புகழ் நிலவும்
தொலையாச் சூரன்தனை வென்ற
தோற்றம் படைத்து, ஈரேழ் உலகும்
துயர் கூர் பாவ இருள் அகற்றும்

கல்விக் கடலே! நின் பெருமை
கற்றோர்க்கு உதவும் நல் துணையே!
காவில் அரசன் அருள் பிடியும்
கானக் குறவர் தரு பிணையும்

செல்வக் கரத்தால் வருடு அடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேண் ஆர் தணிகை மலைக்கு இறைவா!
சிறியேம் சிற்றில் சிதையேலே! 72

கங்கை அலை மிக்குறப் புடைத்தும்,
கயத்தின் அலர் தாமரை மிதித்தும்,
கானக் குறமான் புனத்து உழன்றும்,
கவின் ஆர் செச்சை விலா உதைத்தும்,

மங்கை உமையாள் மடித்தலத்து
மணிமேகலைக் கல் உறத் தளர்ந்தும்,
மை ஆர் களத்தன் திருமார்பில்
வனைந்த கேழல் மருப்பு அலைத்தும்,

திங்கள் தவழும் கொடுமுடிகள்
செறியும் மலைகள்தொறும் நடந்தும்,
தேவர் புனை மா மணி மகுடம்
தேய்க்கச் சிவந்தும், அரம்பையர்கள்

செங்கை வருடும் சீறடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேண் ஆர் தணிகை மலைக்கு இறைவா!
சிறியேம் சிற்றில் சிதையேலே! 73

கானத்து இறைவா; மலைக்கு இறைவா!
கயிலைக்கு இறைவா! கலைக்கு இறைவா!
கமலத்து இறைவன் செருக்கு ஒழித்த
கருணைக்கு இறைவா! மகத்து இறைவா!

வானத்து இறைவா! மறைக்கு இறைவா!
மயிலுக்கு இறைவா! வருடை மிசை
மன்னும் இறைவா! செங்கடப்ப
மாலைக்கு இறைவா! மதிக்கு இறைவா!

மோனத்து இறைவா! அயிற்கு இறைவா!
மொய்ம்பு ஆர் கோழிக்கொடிக்கு இறைவா!
முனிவர்க்கு இறைவா! வேதாந்த
முத்திக்கு இறைவா! முடிவு இல் இன்பத்

தேன் நக்கு அலர் பொற் சேவடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேண் ஆர் தணிகை மலைக்கு இறைவா!
சிறியேம் சிற்றில் சிதையேலே! 74

வந்தித்திடுவோம் முப்பொழுதும்;
வழுத்தியிருப்போம் திருப்புகழை;
வலம் வந்திடுவோம் நின் கோவில்;
மலரும் தருவோம் பூசனைக்கு!

பந்தித்திடுவோம் ஐம்பொறியும்;
பரம் என்று உனையே நினைந்திடுவோம்;
பாலும் பழமும் உவந்து அளிப்போம்;
பணிக்கும் உனது ஏவலும் புரிவோம்;

சந்தின் புழுகும் கப்புரமும்
தனிக் குங்குமமும் கலந்து அணிவோம்
சலசத்து இறையும் மலை இறையும்
தண்ணம் திருப்பாற்கடல் இறையும்



சிந்தித்திருக்கும் சீறடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேண் ஆர் தணிகை மலைக்கு இறைவா!
சிறியேம் சிற்றில் சிதையேலே! 75

வம்பைப் பொடித்து மான்மதத்தால்
வளரும் எமது முலைக்கரியை
வயங்கி ஒளிர் பன்னிரு புயம் ஆம்
மணிக் கந்து இறுகப் பிணித்திடுவோம்;

பம்பித் தரள முறுவல் நிலாப்
பயிலும் நினது செங்கனி வாய்ப்
பவளக் கடிகைத் துவர் இதழில்
பழுக்கும் சுவைத்தேன் பருகிடுவோம்;

நம்பித் துணை என்று ஒருவரையும்
நாடோம்; உனையே நாம் புணர்வோம்;
நவிற்றும் நினது தேவியர்பால்
நண்ணும் துணைச் சேடியர் ஆவோம்;

செம்பொற் கமலச் சேவடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேண் ஆர் தணிகை மலைக்கு இறைவா!
சிறியேம் சிற்றில் சிதையேலே! 76

(வேறு)

துயில் நீங்கி, கொடுவினை நீங்கி, சிறைத்
துனி நீங்கி, சுரர் களிகூர,
துணை நீங்கி, கொலு-அணை நீங்கி, திரி
துயர் நீங்கி, கரி இறை வாழ,

மயல் நீங்கிச் சுழல் மனம் நீங்கி, பழ
மலம் நீங்கி, தவர் தவம் மேவ
மறம் நீங்கி, திணி பொறை நீங்க, பல
மதம் நீங்கிப் புவிமகள் வீற,

உயிர் நீங்கி, புனை உடை நீங்கி, கருகு
உடல் நீங்கி, தகுவர்கள் மாய,
உரை நீங்கி, புயவலி நீங்கி, பிழை
உறல் நீங்கி, துணைவரும் மேவ,

அயில் ஏந்திக் கருமலை போழ்ந்திட்டவன்
அடியேம் சிற்றிலை அழியேலே!
அருள் தாங்கி, தணிகையில் ஓங்கு உத்தமன்!
அடியேம் சிற்றிலை அழியேலே! 77

தழை பாம்புக்குழை புனை பூம் பொற்கொடி,
சதிர் ஆம் சொற்கிளி, மகமாயி,
சடை தாங்கு உத்தமி, நடை தூங்கல் பிடி,
தனி ஆம் தற்பரை, சதுர்வேதி,

கழை ஆம் பொற்சிலை மலர் ஆங்கு உற்றிடு
கரம் வாய்ந்துற்றவள், அபிராமி,
கலை தேர்ந்திட்டவள், மலையான் பெற்றவள்,
கடு ஆர்ந்திட்டவள், கலியாணி,

எழில் ஆம் பற்பல உலகு ஈன்றிட்டவள்
இனிது ஆம் சிற்சுகம் உறு வாமி,
எனை ஆண்டு அற்புத அருள் ஈந்திட்டவள்,
இடம் ஆம் வித்தகன் விடை ஊரும்

அழலேந்திக்கு ஒரு மகன் ஆம் புத்திர!
அடியேம் சிற்றிலை அழியேலே!
அருள் தாங்கி, தணிகையில் ஓங்கு உத்தமன்!
அடியேம் சிற்றிலை அழியேலே. 78

கொலை ஏங்க, பழி வினை ஏங்க, குடை
கொடி ஏங்க, தகுவர்கள் நீடும்
குடி ஏங்க, கழல் அடி ஏங்க, தழை
குலம் ஏங்க, பெரு வரம் மேவும்

நிலை ஏங்க, சினமொழி ஏங்க, கொடு
நினைவு ஏங்க, புயவலிதானும்
நெடிது ஏங்க, புனைமுடி ஏங்க, படை
நிறைவு ஏங்க, பொறை அறு மாயை

மலை ஏங்க, குகை இருள் ஏங்க, பொலி
வளம் ஏங்க, தகுவியர்தாமும்
மனம் ஏங்க, பரியினம் ஏங்க, கரி
மதம் ஏங்க, புனல் செறி வாரி



அலை ஏங்க, பொரு சிலை வாங்கு அற்புதன்!
அடியேம் சிற்றிலை அழியேலே!
அருள் தாங்கி, தணிகையில் ஓங்கு உத்தமன்!
அடியேம் சிற்றிலை அழியேலே! 79

(வேறு)

முற்றிலின் மணல் வாரி, முத்தொடு முழுநீலம்
மொய்த்திடும் அகில்ஆரம் முற்படு பனிநீர்கள்
வற்புறு நிழல் ஆடி, வச்சிரம் முதலான
மட்டு அவிழ் மலர்மாலை வைத்து அறையது கோலி

நல் தவ முனிவோரும் நச்சு எழில் இளமாதர்
நட்பொடும் எதிர்கூடி, நல் தணிகையில் வீதித்
தெற்றியில் விளையாடும் சிற்றிலை அழியேலே!
சித்திர மயில்வீரா! சிற்றிலை அழியேலே! 80

பற்பல மணியாலும், பச்சிலை மலராலும்,
பத்தி கொள் அறைவீடு, பக்கமது உறு மேடை,
பொற்பு உறு மணி மாடம், புக்கு இனிது உறு கூடம்,
புத்தமிர்து அடு தூதை, பொற்கலம் நிறைசால் நீர்,

வெற்பு உறு குறமாதர் மெய்த்தணிகையில் வீதி
விற்கறி, சிறுசோறு மிக்குற விளையாடும்
சிற்பனும் உளம் நாணும் சிற்றிலை அழியேலே!
சித்திர மயில்வீரா! சிற்றிலை அழியேலே! 81

## 9. சிறுபறைப் பருவம்

கனை கடல் உடுத்த புவி முழுவதும் நொடிப்பு அளவில்
கடிது வலமுற்ற சரணா
கமல மலரில் குடிகொள் பிரமனை அடித்து உலகு
கருணையின் அளித்த சதுரா!

தனை அவிழ் கடப்ப மலர் குவளையொடு செச்சை புனை
நல மலை நிகர்த்த புயனே!
நதி, அரவு, கொக்கு இறகு, பிறைமதி முடித்த சடை
நயன நுதலத்தன் மகனே!

வனை கழல் அரக்கரொடு மயல் புரி பொருப்பினையும்
மடிய, அயில் விட்ட கரனே!

மழையினொடு நல் தவள மதகரி மிசைக் குலவு
மகபதி மகட்கு இனியனே!

தினை வளர் புனத்து அருவி இழி தணிகை வெற்பு அரச!
சிறுபறை முழக்கியருளே!
திமிர மலம் அற்றவர்கள் தெளிய வரு சிற்சொருப!
சிறுபறை முழக்கியருளே! 82

கொலை புரி தயித்தியர்கள் உடல் தலைகள் அற்று ஒழுகு
குருதிகள் குடித்து நரி, நாய்,
குறைபடும் உடற்கு நிகர் கரணமொடு சுற்றிவரு
குறளிகள்தமைக் கறுவ, நீள்

மலை நிகர் பிணக்குவையின் உறுகுடர் புயத்து அணியும்
வயிரவர் களித்து மகிழா,
மருவு கழுமுள் படையை முறைமுறை திரித்து, வய
மகள் எதிர் நடிக்க, அழல் ஆர்

உலை உறு குடத்தினிடை வறைபடு தசைப் பொரியல்
உருகு நிணம் முற்றும் அயிலா,
உறு கழுகு, மைக் கொடிகள் வறுமை அற வெற்றி
அயில்
ஒரு நொடியில் விட்ட முருகா!

சிலை மறவர் மொய்த்து வளர் தணிகை நகருக்கு அரச!
சிறுபறை முழக்கியருளே!
திமிர மலம் அற்றவர்கள் தெளியவரு சிற்சொருப!
சிறுபறை முழக்கியருளே! 83

குறைவு அறு தவத்தை உறு கொடி இடை எயிற்றியர்கள்
குலவு நடை கற்ப, எகினம்
குளிர்முகம் நிகர்ப்ப எழு சுனையிடை முளைத்த ஒரு
கொடிய பதம் வைத்து, நிறைநீர்

உறுதவம் இயற்றல் நிகர்தரு கமல மெத்தைமிசை
உறையுமவர் பொற்பின் நிழல்போல்
உயர் தவம் இயற்றி மகிழ்வொடு தழல் வளர்ப்பது என
ஒளிர் கனல் புடைக்கண் எரியா,

மறு அறு கழைத்தலையில் மயிலினம் நடிக்க, அவர்
மருவு குதலைக்கு நிகர் ஆம்



மறைதரு குயில் தொகுதி, முகிலினம் வர, கடிது
மவுனம் உறு பெற்றிமை குலாய்,

சிறு மிளகு வெற்றிலையின் ஒளிர் தணிகை வெற்பு இறைவ!
சிறுபறை முழக்கியருளே!
திமிர மலம் அற்றவர்கள் தெளியவரு சிற்சொருப!
சிறுபறை முழக்கியருளே! 84

கழையின் உகு முத்தின் நிலவு ஒழுகும் ஒளியில் குவளை
கடி இதழ் அவிழ்க்க, வளையின்
கதிர் மணியினில் குமுதமுகை புரி முறுக்கு விரி
கழனி அலை தத்து புனலின்

நுழை சிறு கயல் புகுதும் அளவில் எதிர் குத்தி இடை
நொசி கமுகின் மொய்த்த குலைமேல்
நுகரும் முது கொக்கின் வளை மிடறு ஒடிதரச் சினவி,
நொடி வரை குதித்து எழு வரால்

மழை அகடு முட்டி, மிசை வரு கதிரை எட்டி, உயர்
மதியமுது உகுத்து, வெடி போய்
மட நடையுடைக் கனக வன வளமுடைப் புவன
மடு நடுவில் உற்ற கமலச்

செழு மலர் மிசைத் துயிலும் உயர் தணிகை வெற்பு இறைவ!
சிறுபறை முழக்கியருளே!
திமிர மலம் அற்றவர்கள் தெளியவரு சிற்சொருப!
சிறுபறை முழக்கியருளே! 85

நடம் இடு மயில் தொகுதி, இசை வளர் குயில் தொகுதி
நடை பயில் அனத் தொகுதி போல்
நவில் இயல் தழைத்து இனிய மழலை மொழி கற்று
இளைஞர்
நகு நடை படைத்த மடவார்

தட வரை முடிக்கண் இவர்தரலுறு சுவர்க்கம் உறு
சசியின் எழிலைக் கவர, வான்
தலைமிசை நடிக்க எழு தகைமையை நிகர்க்கும் மழை
ததைதரு மலைச் சரிவிலே,

பட அர முடிக்கண் ஒளிர் மணி வெயில் எறிப்ப, இருள்
படு குகை விளக்கம் எனவே,

பயன் உறு கரிக்கணமும் அயல் உறும் அரிக்கணமும்
பகைமை அற ஒத்து, உறைதரும்

திடம் உள பொருப்பர் குடியிறு தணிகை வெற்பு இறைவ!
சிறுபறை முழக்கியருளே!
திமிர மலம் அற்றவர்கள் தெளிய வரு சிற்சொருப!
சிறுபறை முழக்கியருளே! 86

வட வரை முகட்டில் உறு துருவனும், மகத்து இறையும்,
வனச மலர் உற்ற அயனும்,
மதியமும், உடுக்குலமும், மலர்கதிரும், மைக்கடலும்,
மகிதலமும், மற்றையவரும்,

பட அரவம் எட்டினொடு கட கரிகள் எட்டும் அவை
பயில் திசைகள் எட்டும் இறினும்,
பயன் உறு தவத்தின் நிலை அழிவு அரிய சித்தரொடு
பல முனிவர் மொய்த்த குகை சூழ்,

மட நடை எயிற்றியர்கள் இயல் உறும் மணிக் கலவ
மயில் முகில்வர, கணிகள்மேல்
மனம் மகிழ்தரக் குலவி, நடம் இடு சதிக்கு இசைய
வனசரர்கள் கொட்டு துடி ஆர்,

திடம் உறு துகிற் கொடிகள் உயர் தணிகை வெற்பு இறைவ!
சிறுபறை முழக்கியருளே!
திமிர மலம் அற்றவர்கள் தெளியவரு சிற்சொருப!
சிறுபறை முழக்கியருளே! 87

(வேறு)

தழைத்திடு தமனியம் இழைத்திடு மணிவெயில்
ததைத்திடும் எழுநிலைமேல்
சரித்திடு வனிதையர் முகத்து எழில் கவர்மதி
தளைப்படு நுழைவழி போய்,

மழைக்குலம் அவர்குழல் வனப்பினை நனி கவர்
மகிழ்ச்சியின் மழை பொழியும்
வருத்திடும் அவர் இடை எழில் கவர் தரு மினும்
மதத்தொடு நொடி அழியும்

செழித்திடு புரிசைகள் மிசைப்படு கொடி வளி
செறித்திட அசைதரலால்,



சிறப்பு உற வரு கதிர் இளைப்புறு துயர் தவிர்
செருத்தணி மலை இறைவா!

முழைச் செவி மலை உடல் அரக்கரை அடு குக!
முழக்குக, சிறுபறையே!
முழுத்திய மல இருள் ஒழித்திடு தினகர!
முழக்குக, சிறுபறையே! 88

மலைச் சரிவினில் வளர் தினைக் கதிரினை நுகர்
வரிக் கிளிதனை இதண்மேல்
மறத்தியர் அணி விரல் சுழற்றிய கவண் எறி
மணிக்கல் வல் விசையொடு போய்,

புலத்து உறு கடைசியர் களித்திடு குரவையின்
பொழில்-கமுகு உறு குலைமேல்
பொருக்கென விழ, முதிர் பழத் திரள் பல இரு
புறத்து உதிர் தரு கனியும்,

செலைத்தொடு கதலியின் குலைக்கனிகளும் எழில்
திளைத்திடும் உழவர் எலாம்
செறித்து அனுதினம் உழு வயல்தலை எரு இடு
செருத்தணி மலை இறைவா!

முலைக் குவடு அசைதர, மறத்தியர் நகைசெய,
முழக்குக சிறுபறையே
முழுத்திய மல இருள் ஒழித்திடு தினகர!
முழக்குக, சிறுபறையே! 89

கடைப்படு பிறவியின் அகப்படும் இருவினை
கலக்குற நிலை குலையா,
கறைப்படு நரகொடு துறக்கமும் உழல்தரு
கசட்டனை அருள் விழியால்,

தடைப்படு மயலினை அறுத்து, இகல் அற ஒளிர்
தனிக் கழல் நிழல் நிறுவி,
சலிப்பு அறு பரசுக அளக்கரில் எனது உயிர்
தழைத்திட விடு முருகா!

குடத்தினை நிகர்தன மறத்தியர் இயல் மயில்
குறித்து அனுதினம் மருவா,
குறிச்சியில் உறு கனி மரத்தினில் அமர்தரு
குகைத் தணி மலை இறைவா!

முடக்கிய மணி விரல் பிடித்திடு குணில் கொடு
முழக்குக, சிறுபறையே!
முழுத்திய மல இருள் ஒழித்திடு தினகர!
முழக்குக, சிறுபறையே! 90

தகைத்திடு பொறிவழி உகைத்திடு புலனொடு
தடைப்படும் மனம் நிறுவா,
தவத்தினை அநுதினம் உஞற்றிய முனிவரர்
தமக்கு எதிர் பிணிமுக மேல்,

மிகுத்திடு நறை பொழி கடப்பலர் அணிதரு
விறல் புயம் அசைதரவே,
விணில் செறி பிடியொடு குறக்கொடி இருபுறம்
விருப்புற வருபவனே!

திகைத்திடு நிருதர்கள் பகைத்து எதிர் விடு கணை
சிதைத்து அவர் தலை அறவே
செகுத்திடும் இலை அயில் பிடித்திடும் அறுமுக!
செருத்தணி மலை இறைவா!

முகிழ்த்திடும் அணி விரல் பிணித்திடு குணில் கொடு
முழக்குக, சிறுபறையே!
முழுத்திய மல இருள் ஒழித்திடு தினகர!
முழக்குக, சிறுபறையே! 91

## 10. சிறுதேர்ப் பருவம்

அறுபதம் மிதிப்ப, முகை விண்டு தண் தேன் துளி
அசும்பு சலசப் பொகுட்டின்
அரசு இள அனம், சங்கு வயிறு உளைந்து ஈன்ற மணி
அவிர் பெடை உயிர்த்த கரு என்று,



உறு சிறை அகத்து வைத்து அடைகிடந்திடு வயல்
உடுத்த கன்னல்-காடு வான்
ஓங்கு கமுகைத் தீண்ட, வளர் கமுகு தெங்கின் முப்
புடைய கனியைத் தாவிட,

செறி இலை முடத் தாழை இரவி இரதம் தொட,
செழித்த தண்ணடைகள் புடைசூழ்
திருநந்தி ஆறு புனல் பெருகு கால் ஊர்தொறும்
திகழ் திருத் தணிகை நாடா!

சிறை தவிர் அமரர் உறு குறை தவிர்த்து அருள் குமர!
சிறுதேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர!
சிறுதேர் உருட்டியருளே! 92

கவான் மலையில் விளையாடு வனசரர் சிறார் விளாங்
கனி உதிரவே எறிந்த
கரி மருப்பு அயல் சூழும் மருதம் உறு தண் பலாக்
கனியினைச் சாடி, உழவர்

குவால் உறப் புரியும் நெற்போர்மீது வரையின் ஊர்
குழவிமதி ஒப்ப வீழும்;
கொண்டல் உருவக் களமர் தரு மகார் வான் ஓங்கு
கொக்கின் முதிர் கனி உதிரவே

தவாது எடுத்து எறி சங்கு வெள்ளில் அம் கனிகளைச்
சாடி, வனசரர் குடிசைமேல்
தவழும் முழுநிலவு எனத் திகழும் அதிசயம் மருவு
தணிகை அம் கிரி முருகனே!

திவாகரன் இவர்ந்துவரு தேர் நாண ஒளிர்மணிச்
சிறுதேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர!
சிறுதேர் உருட்டியருளே! 93

கொந்து ஊர் மலர்த் தடத்து, அரவிந்த மெத்தையில்
குடிகொண்ட வாழ்க்கை ஒருவி,
குட வயிறு உளைந்து அலறி வாய்விட்டு அரற்ற, நீர்க்
கோடு ஏறி வயலின் ஊர்ந்து,

முந்து ஊர் புனற் காலின் ஓடித் தவழ்ந்து, உழவர்
முன்றிலில் சென்று, மேதி
முதுகில் தவழ்ந்து ஏறி, அசலம் நிகர் நெற்போரின்
முடிமிசைச் சென்று இறங்கி,

சந்து ஊரும் மலையருவி நீரினில் எதிர் ஏறி,
தடஞ் சுனை எலாம் உழக்கி,
தவர் உறு முழைக்குள் தவழ்ந்து, முத்து ஈன்று, வளை
தங்கு தென் தணிகை இறைவா!

செந்தூர் இருந்து அவுணர் நந்து ஊர் அழித்த குக!
சிறு தேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர
சிறு தேர் உருட்டியருளே! 94

சகத்திரத் தோடு விரி கஞ்சப் பொகுட்டில் உறை
சதுமுக விரிஞ்சன் எழுதும்
தலைப்பொறி அனைத்தையும் உணர்ந்த சித்திரகுத்தர்
சாற்றிய கணக்கை வினவி,

மிகப் பருத்து ஓங்கி வளையும் கருங் கோட்டு, முழை
மேவு பிலவாய, செங்கண்
மேதிக் கடாவைக் கடாவி, முச் சிகை மருவு
வெள் வேல் திரித்து முகிலின்

வகைப்படும் இருட்டு உருவம் அசனி உரை வாய்ந்து, பிறை-
வாள் எயிறு இலங்கு சண்டன்
வாராமுன் என்தனைக் காத்தருள் திருத்தணிகை
மா மலையில் வாழும் முருகா!

செகத்தில் உயிர் யாவையும் அளித்த அம்பிகை மதலை!
சிறுதேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வருஞான சத்திதர!
சிறுதேர் உருட்டியருளே! 95

தாரகன் தேரினை உருட்டி, அரிமாமுகன்
தனது பேய்த்தேர் உருட்டி
தா இலாச் சூரன் இந்திரஞால இரதம்
தகர்ந்திட உதைத்து உருட்டி,



வீரர் ஒன் பதின்மர் தேரொடு படைத்தலைவர் தேர்
வெவ்வேறு புடை சூழ் தர,
மேதினி எனும் பரமன் ஏறு தேர் எங்கும்
விரிந்திடும் இரண்டாயிரம்

பேர் எனும் தொகை மருவு பூதவெள்ளத்தின் நடு
பிறழ் மணித் தேரில் ஏறி,
பெயர்த்து அலை எறிந்திடு கடல்-தலை நிசாசரர்
பிணக் குவை படத் தொலைத்து,

தீர அரிது ஆம் சினம் தவிர் செருத்தணிகை இறை!
சிறுதேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர!
சிறுதேர் உருட்டியருளே! 96

மங்குலைத் தீண்டு கொடி மணி மாட முடி தவழும்
மதி-இளம்பிள்ளை மடவார்
மடிமீது சிறு குழவி என உவந்து ஏறலும்,
மகிழ்ந்து, மணி முறுவல் பூத்து,

பங்கய மலர்க் கரத்து ஏந்தி வாய் முத்தாடி,
பஞ்சணையின் மீது சேர்த்தி,
பாலொடு பழம் கனிந்து உதவி முகமன் சொலி,
பரிந்து, விளையாடி வா என்று

அங்கண் அகலும்படி விடுத்திடு விருப்பினால்
அனுதினம் கலைகள் வளரும்
அழகிய செருத்தணிகை வரை நினைந்தவர் வினை
அறுத்தருளும் ஆறுமுகவா!

செங்கதிர்த் தேர் நாண, அம்புவித் தேர்மீது
சிறுதேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர!
சிறுதேர் உருட்டியருளே! 97

பேய்த்தேரை நீர் எனக் கொண்டு உழலும் இரலையின்,
பிணித்திடு கயிற்றில் அரவப்
பிராந்தி உறும் ஒருவனின், சுத்தி நிகழ் இரசிதப்
பித்து அடைந்திடு பேதையின்,

பூத்தேரின் உறு வாழ்வு மெய் என்று கருதி, யான்
பொறிவழிச் சென்று, பஞ்சப்
புலனையும் அருந்தி, யான் எனது எனும் அகந்தையால்
புன் பிறவி அணுகு மலநோய்

நீத்து, ஏர் பெறும் திருவடித் தாமரைப் போதின்
நீழல் தந்து, ஆனந்தம் ஆம்
நித்த பரிபூரண சிதாகாச வெளியிலே
நிலைபெற விடுத்த முருகா!

தேய்த்தே முடிக்கண் மதி தவழ் தணிகை வெற்பின்மேல்
சிறுதேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர!
சிறுதேர் உருட்டியருளே! 98

காமக் குரோதம் மிகு லோபமொடு மோகமும்
கருதி மத மாச்சரியமும்
கட்டிப் பிணித்து நிரயத்தில் இடும் ஐம்புலக்
காதலும் அறத் துறந்து,

தாம் உற்றிடும் துறவறத்தின் நிலை தவறாது
தழை கானகத்து அடைந்து,
சரகு அருந்தி, பஞ்ச தழலிடை இருந்து, நல்
தவம் இயற்றிடு மாதவர்

தோம் அற்ற சிந்தனைக்கு எட்டாத நின் திருத்
துணை மலர்ப்பத நீழலில்
துயர் அற இருத்தி, எனை ஆண்டருள் செருத்தணி
சுடர்க்கிரி அமர்ந்த முருகா!

சேமித்த மறை நெறிகள் எங்கணும் விளங்கிட,
சிறுதேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர!
சிறுதேர் உருட்டியருளே! 99

(வேறு)

மனத்தொடு மொழி உடல் ஒருப்படும் அடியவர்
வணக்கொடும் அடி பேண,
மலத்தொடும் இரு வினை அகப்படும் உயிர் அருள்
வசப்படு திறம் நாடி,



சினத்தொடு மயல் விழைவு அளித்திடு பொறி புலன்
சிதைத்து, அறிவினில் ஓவாச்
சிவத்தினை அடைதர, அவத்தைகள் கழிவுறு
செயற்கையை எளிது ஈய,

தனித்து ஒரு மயில்மிசை இருத்திய கழலொடு
தவத்தினர் புடை சூழ,
சலிப்பு அற எதிர் வரும் அருத்திகொள் அறுமுக!
தலத்து உயர் குருநாதா!

உனக்கு உறு வலவனும் மனத்து அதிசயம் உற,
உருட்டுக, சிறுதேரே!
உலப்பு அறு வளம் மலி செருத்தணி மலையவன்
உருட்டுக, சிறுதேரே! 100

தரைத்தலை முனிவர்கள் உரைத்திடு சுருதிகள்
தழைத்த பனிரு காதில்
தமிழ்க்கடல் உறு விதி தினைத்துணை அறிவிலி
சலிப்பு அறும் விழைவாலே

விரித்திடு புகழ்பெறு பிளைத்தமிழ் ஒருசத
விருத்தமும் நனி ஏறும்,
வெளிற்று உரு உறு கரிமிசைக் குலவிய கழல்
வெறிக்கணும் உறலாலே;

குருப் பொலி இமையவர் அளித்திடும் அமுதொடு
குறத்தியர் தினைமாவும்
குளிர்ப்புற நுகர்தரு களிப்பொடு மகிழ்பெறு
குலப் புதுமலர் வாயா!

ஒருத்தரும் நிகர் அறு செருத்தொழில் வல குக!
உருட்டுக, சிறுதேரே!
உலப்பு அறு வளம் மலி செருத்தணி மலையவன்!
உருட்டுக, சிறுதேரே! 101

திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ் முற்றிற்று

உ

# திருத்தணிகைப் பெருமான் பிள்ளைத்தமிழ்

நா. ப. தணிகை அரசு

## விநாயகர் துதி

செந்தமிழ்நாட் டுத்தணிகைத் தேவன் திருவடிக்குப்
பைந்தமிழ்ப்பிள் ளைத்மிழைப் பாடுதற்குச்—சந்ததமும்
ஞானத் திருவுருவாய் ஞாலமெலாம் காத்தருளும்
ஆனைமுகத் தண்ணால் அருள்.

## 1. காப்புப்பருவம்

பண்ணிய மேந்தும் கரத்தினில் அப்பம்
பயறொடும் எள்ளுருண்டை
பரிவுட னடியர்கள் அளிப்பன ஏற்றுப்
பசிதீர்த் தருள்பவனே

விண்ணவர் வேதமென் றேத்திடு பாரதம்
வியாதனன் றுரைத்திட நின்
வியன்கரம் ஒருமருப் பேந்தி வரைந்தருள்
வித்தகப் பெருமானே

எண்ணியிவ் வணமுனை இவ்வுல கேத்துநர்
என்றும் வாழ்ந்திடவும்
இன்பமெய்ஞ் ஞானநல் வடிவுகொண் டண்டம்
எல்லாம் புரப்பவனே



தண்ணிழல் தமிழ்பயி லடியவர்க் காபத்
சகாயப் பெருமானே
தணிகைப் பதியினி லெமக்கருள் மணியைச்
சந்ததம் காப்பாயே.

## 2. செங்கீரைப் பருவம்

கருத்ததனி லுனை யெண்ணாக் காலத்தே மூலமலக்
காரிருளில் அத்துவிதமாய்க்
கண்ணிலாக் குழவிபோற் கிடந்திட்ட உயிருக்குக்
கடைத்தேறும் வாய்ப்பளிக்கப்

பொருத்தமுறு தனுகரண புவனநிறை போகமொடு
போக்குவர வுங் கொடுத்துப்
புவியிலுறு மின்பங்கள் நுகர்கின்ற போதத்துப்
புநிதனுனை யுணர வைத்து

வருத்தமிகு நிலைமாறி வளமைநிறை திருவடியில்
மனமுருகி இனிது வாழ்ந்துன்
வாடாத பெருவாழ்வில் வைத்தருளும் வள்ளால்நின்
மலரடியை என்றும் மறவாத்

திருத்தணிகை தொழுமடியர் திருவடையச் செய்தேவ
செங்கீரை யாடியருளே
செந்தமிழின் இன்பநுகர் செழும்புலவர் உளமுறைவ
செங்கீரை யாடியருளே.

## 3. தாலப் பருவம்

பணியெனக் கருளுக எனவேண் டிடுமவர்
பக்கத் திருப்பவனே
பண்ணிய புண்ணிய பாவ மவைக்குறு
பயனை யளிப்பவனே

நணியுனை வழிபடு மவரிடர் களைந்தடி
நண்ணா தவர்களையும்
நணியுன தருள்கொடு நன்கு திருத்தி
நன்னெறி சேர்ப்பவனே

மணியத னொடுவெம் பரலு நிறைந்திடு
மலையி லிருப்பவனே
மனத்தினில் தூயோர் வந்து வணங்கிடு
மாட்சி நிறைந்திலங்கும்

தணிகையம் பதியில் அடியனை ஆண்டவ
தாலோ தாலேலோ!
தண்டமிழ் பயில்வோர் தமைவாழ் விப்போய்
தாலோ தாலேலோ!

## 4. சப்பாணிப் பருவம்

பண்ணாரின் தமிழ்ப்பாடல் பாடவிலக் கணமறியேன்
பாடுமுறை தானு மறியேன்
பக்திநிறைந் துனதுதிரு மலரடியை நீங்காது
பரவிவழி புடவு மறியேன்

கண்ணாரக் காணகிலேன் கருத்தாலும் நினைக்ககிலேன்
கடையனுயு நெறியு மறியேன்
கருணையுரு வேயுன்றன் கழலடியின்
பெருமையினைக்
கற்றவர்கள் கூற அறிந்தேன்

மண்ணாகிப் போகாதிப் பிறவியளித் ததன்பயனா
மன்னாவுன் முகமலர்ந்து
மைந்தனெனை வாவென்று னருகிலழைத்
தினியமொழி
மகிழ்ச்சியுடன் கூறியருளித்

தண்ணார்தி ருத்தணிகை அரசேநின் னிருகைகொடு
சப்பாணி கொட்டியருளே!
தமிழே நிதம்பயிலும் எல்லோரும் இன்பமுறச்
சப்பாணி கொட்டியருளே!

## 5. முத்தப் பருவம்

கத்துந் தரங்கக் கருங்கடலில்
கருத்தோ டெடுக்கும் நன்முத்தும்
கலைகள் வல்லார் செயற்கையினால்
கனிவோ டாக்கும் வெண்முத்தும்



பத்திக் கடலிற் படுவோரைக்
பாரிற் கலைகள் பயில்வோரைப்
பரமா னந்தம் அளித்திடு முன்
பசிய முத்துக் கீடாமோ?

சித்த மகிழ்ந்தே சிறுகுழவி
சேர அமுதம் உண்டதன்பின்
சிறந்த அன்பால் அன்னைதரும்
செழுமுத் தமும்தான் நிகராமோ?

முத்தி யளிக்கும் தணிகைமலை
முருகா முத்தந் தருகவே!
முத்தமிழ் நாளும் பயிலுமவர்
முதல்வா முத்தந் தருகவே.

## 6. வருகைப் பருவம்

வானாய் வானி லுறுமதியாய்
வளரும் மதியின் தண் நிலவாய்
வயங்கு கருணை யுடன்கூடி
வழங்கு கதிரின் பகலவனுந்

தானாய் இயங்கும் வளியாகித்
தன்போல் எவையும் தூய்தாக்கும்
தணலாய் நீராய் மண்ணாகித்
தனுவே கரணம் போகமுடன்

யானாய் என்னை எஞ்ஞான்றும்
எந்த நிலையும் நீங்காமல்
என்பும் ஊனும் உருகியிட
என்றும் ஓவா இன்ப நல்கும்

தேனாய்த் தணிகை மலைவளரும்
தேவே வருக வருகவே!
தெய்வத் தமிழால் அழைப்பவர்முன்
தினமும் வருக வருகவே!

## 7. அம்புலிப் பருவம்

செந்தண்மை பூண்டொழுகும் செம்மலிவன் சீர்பாதம்
சேரவரும் எவ்வெ வரையும்

சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யாண்டிடுவன்
சேவடியின் பெருமை யோர்ந்து

நொந்தண்மை வந்துறினும் நோய்நீக்கிக் காத்திடுவன்
நூற்றுப்பத் தடுக்கு கோடி
நுகர்பொருளை யிவ்வுலகில் வைத்திடுவன் அவற்றின்பின்
நோகாமல் வீடும் அருள்வான்

வந்துண்மை யடியவரா யழுக்காற வாவெகுளி
வன்சொல்பயி லாமல் நின்றே
வரையுச்சி வாழுமவன் அறநெறி படிந்தொழுகின்
வளமையுடன் ஓங்க அருள்வான்

அந்தண்மை மிகுதணிகை மலைமேவு தேவனுடன்
அம்புலீ ஆட வாவே
அருந் தமிழ் பயில்பவரின் உளமேவு முருகனுடன்
அம்புலீ ஆட வாவே.

## 8. சிற்றில் பருவம்

மன்பே ருலகில் மக்களென
வந்தோ ரெவரும் வனப்புநிறை
மன்னா வுன்றன் பேரருளை
மனத்தே யுணர்ந்து மகிழ்ந்திடுவர்

துன்பே சிலரைத் தொடர்ந்திடினும்
தொல்லை வினையின் பயனெனவே
துய்யா வுன்றன் திருவடியைத்
துதித்தே துயரம் நீங்கிடுவர்

வன்பே யறியார் உள்ளமதில்
வதிந்தே யவரை வாழ்விக்கும்
வள்ளா லுன்றன் திருவருளை
மறவா தென்றும் வணங்கிடுவோர்

அன்பே தணிகைப் பதிமுருகா
அடியேம் சிற்றில் சிதையேலே
அழகா தமிழைப் பயில்கின்றோம்
அடியேம் சிற்றில் சிதையேலே.



## 9. சிறுபறைப் பருவம்

தனிவில் பிடித்திடு வேனெதிர் ஏதிலர்
தமையான் வரவொட்டேன்
தணிகை விரும்பித் தரணியில் பகையைத்
தன்னுளங் கொள்ளாரைப்

பனியில் நனைந்திடு மூப்பினர் கனலின்
பக்கத் துற்றனர் போல்
பண்டை வினைப்பய னும்விட் டோடிடப்
பண்ணுவன் வந்திடுவீர்

கனிவிலிவ் வண்ணம் உரைத்திடுங் கருணைக்
கடலே யுனையடைந்தேன்
கருத்தே என்றன் கண்ணே எங்குங்
காட்சி யளிப்பவனே

முனிவில் திருத்தணி கைப்பதி முருகா
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்வோர் நித்த முயர்ந்திட
முழக்குக சிறுபறையே.

## 10. சிறுதேர்ப் பருவம்

நல்வாழ்வு வாழ்ந்திடுவர் நந்தாவி ளக்கனைய
நம்பீ நின் தாளை மறவார்
நணுகிவரு வல்வினை தம் பாலணுகா தேகச்செய்
நன்னெறியை என்றும் அகலார்

கல்லாத பேரெனினும் கற்றபெரி யோருரையைக்
கருத்தோடு கேட்டு நடப்பர்
கடலலைக ளெனத்தொடருங் கடத்தலரி தாம்பெரிய
கடலெனுமிப் பிறவி நீந்தி

நல்லாயுன் நற்றாளை னுங்கரையி லேறிடுவர்
நாயனையேன் செய்வதறியேன்

நல்லவநின் திருவடியைச் சிக்கெனவே பற்றிடுவேன்
நாடவொரு வழியு மறியேன்

செல்வா திருத்தணிகை மைந்தாவென் வினைகளிறச்
சிறுதே ருருட்டி யருளே
செந்தமிழை ஓதிடுவர் சிந்தாகு லந்தீரச்
சிறுதே ருருட்டி யருளே.

**திருத்தணிகைப் பெருமான் பிள்ளைத்தமிழ் முற்றிற்று**



உ

# திருப்போரூர் முருகன் பிள்ளைத்தமிழ்

## திருப்போரூர் சிதம்பர அடிகள்

### வேம்படி விநாயகர் வணக்கம்

அண்டகோ டிகளுடன் தந்தவுட லியாவையும்
அரியமறை முதலகலையும்
அக்கரமும் மெய்ப்பதமும் ஐங்கலையும் மந்திரமு
மானபத கதியும்வாக்கும்

மண்டியுண் டாகவரு குண்டலியொ டைஞ்சத்தி
மாமுகமெ னப்படைத்த
வள்ளிநா யகன்மீது பிள்ளையந் தமிழ்சொலஎன்
மதியில்நின் றருள்புரியுமால்

பண்டைமா மலதிமிரம் விண்டுபோ கக்கிரண
பானுகோ டிகளென்னவே
பழஅடிய ரககமலம் அகலாது நின்றொளி
பரப்பியா னந்தமுதவி

விண்டுவே முதலான அண்டர்மா முனிவர்நரர்
விக்கினம கற்றியாளும்
மேன்மைதரு போரூரில் நிம்பநீ ழற்குலவு
வேழமுகன் இருசரணமே.

## 1. காப்புப் பருவம்

### திருமால்

பூமேவு பொய்கைப் பொறிச்சிறகர் வண்டினம்
பொங்கரின் விருந்தயர்தரும்
போரூரின் முருகனைச் சீர்மேவு குமரனைப்
புனிதனா னக்குரவனைக்

காமேவு கடவுட் பசுந்துணர் விரிந்துநறை
கடிமணத் தொடுபிலிற்றுங்
கண்ணகல் நிழலரசு சசிகணவ னுக்குதவு
கந்தவே ளைப்புரக்க

தூமேவு ஞானசத் திக்கடலின் மொண்டுசிற்
சொலிதசத் துவப்பொருப்பில்
தோமற இவர்ந்துலக மெங்கும் பரந்துயிர்த்
தொகைவகைப் பயிர்கள்தழையத்

தேமேவு மதுரம் பழுத்தொழுகு மென்மொழித்
திருமின் கலந்துமிளிரச்
செய்யபே ரருள்மாரி பொய்யாது பொழிகின்ற
செங்கட் கருங்கொண்டலே. 2

## சதாசிவம்

### வேறு

காரென வாருயிர் மீதரு ளேபொழி
கண்ணனை விண்ணவனைக்
கந்தனை யெந்தையை வந்தனை யன்பர்
கடும்பகை கொன்றவனைச்

சீர்சம ராபுரி யாளனை மாளுறு
தேவர்ம ணாளனையோர்
சின்மய ரூபனை நன்மையெ லாமுறு
சேயினை யருள்புரிக

ஓர்வரி தாமுயி ரியாவையும் நேர்வினை
ஒத்தும லப்பகைபோய்
ஒண்சுக மேவிட ஐந்தொழில் தந்திடும்
உத்தம சிற்பரமாய்ச்

சேருரு வாயரு வாயிரு வகையுஞ்
செறிபொரு ளாய்நிறைவாய்ச்
செம்முகம் ஐந்தொடு செம்மையில் நின்றருள்
செய்தச தாசிவமே. 3



## பராசத்தி

விடயவா வாரகஞ் சொருபவா வாரக
மெனப்பகர் விதங்களாகி
விரிமலக் கங்குலுயிர் விடயஞா னத்தினொடு
மிகுசொருப ஞானத்தையுந்

தடையதா கச்செயத் தனுவாதி நாலையுந்
தருமாயை யறிவினாலுந்
தண்ணருட் பேரறிவி னாலுமத் தடைவிடுந்
தகுபரையை யஞ்சலிப்பாம்

அடலினோ டெழுமவுண ருடல்வேறு கூறுபட
அலகைவே தாளபூதம்
ஆடப்பெ ருங்கூகை கூவப்ப ருந்துநிழல்
நீடச்சி வந்தவடிவேல்

நொடியிலே வியகுகனை நெடியமால் மருகனை
நிகரில்போ ரூர்முருகனை
நுணியகூ ரறிவுகொடு கருதுவோ ரமுதமென
நுவலுமோ ரருள்புரியவே. 4

## விநாயகர்

### வேறு

பகவதி கரவணை மிசைதுயில் பயிலும்
இகலறு குமரனை யினிதருள் புரிக
அகரமும் உகரமும் மகரமு மாகித்
திகழுறு பிரணவ மெழுசிறு களிறே. 5

## திருநீறு

### வேறு

சோதி மகரக் குழைசெறிசுந்
தரத்தோ ளீரா றுடையானைச்
சுருதி யிரைக்குந் தண்டையந்தாள்
துணையென் முடியிற் பொறித்தானை

மாது வளருஞ் சமரபுரி
வாழ்வை வானோர் சிகாமணியை
வடிவே லரசை மயிலரசை
வந்து புறங்காத் தளித்திடுமால்

ஆதி பகவன் ஞானவடி
வழலிற் பூத்து நித்தியமாய்
அணிந்தோர் தமக்கு வசிகரமாய்
அருந்தி னோர்கட் காரமுதாய்

நீதி யறியும் பசுமலத்தை
நீக்கு மொருநற் குறிகாட்டி
நிகழ்பே ரின்பக் கடலூட்டி
நின்ற புகழ்வெண் திருநீறே. 6

## சிவகண்மணி

அரிய மனமும் அறிவரிதாய்
அருவாய் நிறைவா யிருந்துமுனர்
அமரர் திரிபு ரஞ்செய்குறை
அறையக் கேட்டு முக்கண்வழிக்

கரிய களச்செம் புயல்கருணை
பொழியப் பெருகுங் கடற்பிறந்து
கருதும் அடியார் பவக்கடலைக்
கடத்தும் மணியைத் துதித்திடுவாம்

பெரிய தவத்துக் குறுமுனியெம்
பெருமான் செவிவாய் மடுத்தருந்தப்
பிறங்கு ஞான மொழிநறவு
பெய்யுங் குமுத வாயானைத்

தெரியல் நறுமா முகைகுறமான்
திளைக்கும் முலைக்கோ டுழவலருந்
திருமார் பகனைச் சமரபுரிச்
சேயைப் புறங்காத் தளித்திடவே. 7



## திருவைந்தெழுத்து

### வேறு

கருதரிய பலவுயிர்கள் பந்தனைக் கார்க்கடற்
கரையிவர வருகலனை யன்பருட் காட்சியை
அருமறையும் அறிவரிய அஞ்சுகப் பேற்றினை
அரியசிவ னுரியபெயர் ஐந்தினைப் போற்றுதுங்

குரவுகமழ் குறவனிதை கொண்கனைக் கார்த்திகை
குடமுலையின் அமுதகடல் உண்டகத் தேக்கனைத்
தருணகும ரனையினிய தண்டலைச் சீர்ப்பொலி
சமரபுரி தனில்நிலவு கந்தனைக் காக்கவே. 8

## திருமகள்

### வேறு

பொற்குவடு பத்துநூ றிலகுமுடி தொறும்இரவி
பூணெனக் கொண்டுமதியம்
பொழிநிலவு வெள்ளத்தின் மிசைமிதந் தழகுசெறி
புண்டரிகம் மண்டுபுயலை

அற்புதத் தொடுகொண்டு மிளிரஅப் புயல்நடு
அரும்புநால் வகைமலரொடும்
அஞ்சோதி மினலொன் றிருந்தென இருந்தொளிர்
அணங்கினை நினைந்துதொழுவாம்

எற்செறி திருப்பரங் குன்றாவி னன்குடி
இரும்பொழில் திருவேரகம்
ஈறில்சீ ரலைவாய் விளங்குபழ முதிர்சோலை
என்னுமறை புகழ்பதிதொறுங்

கற்குவடு தொறுமினிய நற்சமர புரியும்உறை
கடவுளைக் கடவுளரெலாங்
கைம்மலர் குவிக்கஇரு கால்மலர் படைத்தவொரு
கந்தனை யளிக்கவென்றே. 9

**கலைமகள்**

நெய்தலங் காடுமிரு காவிபொரு வள்ளையும்
நிகழ்குமிழும் முகைமுல்லையும்
நிறைநறைக் குமுதமுந் தொடியுடைத்
தோன்றியொடு
நேர்கன்னி காரமுகையும்

எய்தரிய நூபுரக் கமலமுஞ் செறிகடவுள்
எகினம்வெள் ளைக்கமலமீ
தேர்பெற்ற மறைமுதலை கலைசொற் றிருந்தென
இருந்தவளை யஞ்சலிப்பாங்

கைதையங் கானமும் புன்னையங் கானமுங்
கானல்நெய் தற்கானமுங்
கடிமணத் தொடுநறவும் மகரமுந் தந்திலகு
கல்யாண மாமறுகென

மைதவழ் பொழிற்புளினம் மலிகயற் புலவையும்
வளைஅலவ னுறுபசியையும்
வாரா தகற்றியொளிர் நெய்தலஞ் சமரபுரி
வருகுகனை யருள்புரியவே. 10

**பலதேவர்**

வேறு

எண்திசை யோர்வசு எண்மர்கள் வயிரவர்
எண்மர் மருத்துவரும்
ஈரிரு மூவரும் ஓரொரு பதின்மரும்
ஈரறு சூரியரும்

அண்டர் வியாழன் அடும்புய வீரர்
அலர்ந்த சரோருகமேல்
அந்தண னோரெழு மங்கையர் சோமனும்
வந்தரு ளேபுரிவார்

தண்டையு நீடு சதங்கையும் நீளொளி
தங்கிய கிண்கிணியுந்
தாளிணை மாமலர் மீதினி லோசை
தழைந்திட வந்தமையாம்



ஒண்தொடி கொஞ்ச இருந்து குறங்கில்
உவந்தருள் கொங்கையமு
துண்டருள் கந்தனை யஞ்சம ராபுரி
ஒண்குழ ரேசனையே. 11

## 2. செங்கீரைப் பருவம்

மும்மையுல கெங்கும் பரந்தொளி பரப்பிடும்
முதற்பரை யெடுத்தணைத்து
மூதருட் புனிதநீர் நிறையஆட் டிப்பெருமை
மொய்த்தநித் தியஆடையால்

மெய்ம்முழுதும் ஒத்தியிரு வேறற்ற அத்துவித
வெண்ணீ றணிந்துமிளிரும்
வீறுபூ ரணநிலப் பொட்டுமிட் டுப்பெரிய
மெய்ஞ்ஞான தீபதட்டால்

அம்மருவும் ஆலத்தி சுற்றிமற் றிச்சையுட
னானஞா னங்கிரியையென்
றருள்செவிலி யாயரங் கருகிலுற ஆறா
றகன்றசிவ வாரியிலெழுஞ்

செம்மையா ரமுதம்பு கட்டவள ருங்குழவி
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு குமரசர வணமுருக
செங்கீரை யாடியருளே. 12

அஞ்சக் கரப்பரத் தொட்டிலிற் சதுர்வேத
மானவட மொருநாலையும்
ஆதியுடன் இச்சைஞா னங்கிரியை நாமமுற்
றருள்வளர்ந் தொளிர்சத்திகள்

தஞ்சக் கரங்கொடு பிடித்தங் கசைத்திடத்
தகுபரையும் ஆதிசிவனுந்
தாமுள மகிழ்ந்துறச் சோமனென நிலவுபொழி
தவளயா னைக்கடவுளும்

விஞ்சக் கரம்புனையு முதல்வர்பதி னொருவரும்
விபுதர்களும் அரிபிரமரும்
வேணிமுனி வரரும்அருள் ஞானமுனி வரராதி
வியனுலக ரும்பரவவே

செஞ்சக் கரப்பரிதி யெனநிலவு போரூர
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு குமரசர வணமுருக
செங்கீரை யாடியருளே. 13

குஞ்சிமுடி யுற்றசெஞ் சுடிகையா டச்செவிகொள்
கோலக்கு தம்பையாடக்
குமுதமென அமுதொழுகும் இதழ்களா டக்கரங்
கொண்டபொற் றொடிகளாடக்

கஞ்சமல ரைப்பொருவு நயனமா டக்கடி
தடத்தரை வடங்களாடக்
கருதரிய முத்தியின் புதவுசீ றடிமருவு
கனகநற் றண்டையாட

அஞ்சுவடி வத்தசுரர் திண்டாட அரிபிரம
ராதிசுரர் கொண்டாடநீள்
அகிலசர அசரங்கள் நின்றாட எண்டிசையொ
டண்டபகி ரண்டமாடச்

செஞ்சரவ ணப்பொய்கை மஞ்சமிசை நிலவும்இறை
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு குமரசர வணமுருக
செங்கீரை யாடியருளே. 14

ஐந்தொழிலு மெனதிவைக ளாகுஞ் சிருட்டிமுத
லானமுத் தொழில்சடத்தும்
அறிவிடத் தோரிரண் டும்வினைக் கீடாய்
அவற்றையுயி ரறியாமையால்

முந்திவரு தன்னையும் பிறரையுங் கருதிநனி
முதிர்விழைவு வெகுளிமருவி
முன்னுசுக துன்பங்கள் மன்னியிரு வினைமேவி
மூடப்பி றப்பிலாழும்

பந்தமுறு முயிர்சுதந் தரமிலி சடம்பாச
மானகரு விகள்முழுதுமே
பகருமற் றவைநடத் திடுமொருவ னானிவை
பகுத்துன் சுதந்தரமறச்



சிந்தனைசெய் பந்தமறு மென்றெனக் கருள்குரவ
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு குமரசர வணமுருக
செங்கீரை யாடி யருளே. 15

## வேறு

காம விடத்தால் மாமயல் கொண்டே நொந்தேனைக்
காருணி யத்தால் வாவென வந்தாள் தந்தோனே
தீமை யிழைத்தேழ் வாரிதி சென்றே நின்றேனைச்
சீரருள் பெற்றா ரார்கரை தந்தா ளெங்கோனே

மாமல முற்றே தோமுறு நெஞ்சேன் உய்ந்தார
வாய்மொழி நற்றேன் நீமிசை யிந்தா என்றீயுஞ்
சேம நிதிப்போ ரூரிறை செங்கோ செங்கீரை
தேவர் தமக்கோர் மாமணி செங்கோ
செங்கீரை. 16

## வேறு

களவறு ஞானிக ளுளமலர் மீதி
லெழுந்தா ருந்தேனே
கடையனை மேவிய மலமற வோர்குரு
என்றே வந்தோனே

அளவறு சூரிய ரெனமயி லேறி
யுவந்தா ருங்கோவே
அகமுக மாயொரு சுழிமுனை சேர்பவ
ரங்கே யுந்தேவே

இளநில வாள்நகை யுறுகுற மாதை
யியைந்தா ளுந்தோளா
எழிலடி யார்முத லனைவரு மேநசை
கொண்டா ருந்தாளா

தெளிவுற வேயென தகநிறை பேரொளி
செங்கோ செங்கீரை
திகழ்சம ராபுரி முருக சடானன
செங்கோ செங்கீரை. 17

## வேறு

மகபதி சக்கிரி மலரயன் நத்திய
வண்சே ருங்காவே
மலமறும் முத்தர்க ளெனும்அளி சுற்றிய
தண்சூ ழும்பூவே

இகலறு மெய்த்தவ முழுதையும் உற்றவர்
எண்கூ ரும்பேறே
எழிலருள் பெற்றுயிர் மயில்கள் களிக்க
எழுந்தூ ருங்காரே

ககனசு ரர்க்கொரு துணையென நெட்டயில்
கொண்டே நின்றோனே
கடவுள் மடப்பிடி தனஇணை தைத்தொளிர்
திண்தோள் மொய்ம்போனே

திகழ்மதி யொத்தொளிர் சமரபு ரிக்கிறை
செங்கோ செங்கீரை
செறிதய வுற்றவ ரிதயபு ரிக்குக
செங்கோ செங்கீரை. 18

## வேறு

குவளைப் பிழிசெங் குமுதப் பிழிகோ
கனகப் பிழிகூடிக்
கோதறு சேதக மாகிக் கூனற்
கொழுவுழு சீதைதொறுந்

தவளத் தரளத் தொடுபிழி ஊறல்த
தும்பக் கடைசியர்தந்
தண்ணகை யொடுமித ழூறலொ டுஞ்சம
னாமென வுட்சினவிப்

பவளக் கடிகைப் பேரணி சரிதிகழ்
பங்கய மென்கையாற்
பணிலத் தரளத் திரளைத் திடரிற்
பழனக் கரைதரவே



திவளுற் றிடுதுண் டீரநன் னாடா
செங்கோ செங்கீரை
சீரூர் போரூர் வீரம யூரா
செங்கோ செங்கீரை. 19

புள்ளுங் கிளியும் மயிலும் குயிலும்
பொன்னஞ் சிறையனமும்
பொருகோ டரமுங் கரியுந் திரியும்
பொங்கர்ப் புதுமலர்வாய்க்

கள்ளும் விள்ளும் இறாலிழி பிழியுங்
கனிவகை யின்சாறுங்
காலாய் மடுவாய் ஆறாய் ஓடிக்
கடல்புக எதிரேறித்

துள்ளும் மகரம் புயலின தகடு
துணித்துச் சலமேவிச்
சுடர்வான் மகரஞ் சாடிக் கங்கை
துளைந்து திரும்பிவருந்

தெள்ளும் வளமுள தொண்டைநன் னாடா
செங்கோ செங்கீரை
சீரூர் போரூர் வீரம யூரா
செங்கோ செங்கீரை. 20

ஓதிம சாலம் மேதியி னங்கள்
உழக்கப் பேரேரி
ஒள்ளிய கமலப் பள்ளியை விண்டங்
குயர்தண் டலையேறத்

தாதவிழ் தண்டலை ஞிமிறுகள் விரைசெறி
தடமலர் மீதேறத்
தடநீ ராடிய மடவார் வெருவித்
தண்ணதி நீரேறக்

கோதறு நதியுறை வாளைகள் தாவிக்
குளிர்வயல் மடையேறக்
குலவிய மடைதவழ் குடவளை பதறிக்
கொழுவிய கழுகேறத்

தீதற வொளிர்தரு தொண்டைநன் னாடா
செங்கோ செங்கீரை
சீரூர் போரூர் வீரம யூரா
செங்கோ செங்கீரை. 21

## 3. தாலப் பருவம்

கறையின் றொளிரு மதிமுகத்துக்
கரும்பன் னாரும் ஆடவருங்
கலவித் தேறல் அயின்றயின்று
களித்துத் தருக்கி விளையாடும்

நிறையுஞ் சோமச் சிலைத்தகடு
நிரப்பிக் குலிசத் தூணிறுத்து
நிலைகொண் டரிய நவமணிகள்
நிகழும் மாளைத் தசும்புநிரைப்

பொறைகொண் டிலங்கும் பலமாடப்
புனிதக் கொடிகள் கற்பகப்பூம்
பொங்கர்க் குறுந்தாள் நறுமுகையிற்
புடைக்குந் தோறும் மடலவிழ்ந்து

தறையில் நறையில் பெருக்கூற்றுஞ்
சமர புரியாய் தாலேலோ
தமரக் கடலைக் கடைந்தமுதந்
தருவோன் மருகா தாலேலோ. 22

மகரப் பரவை யளறுபட
மாயைத் திறமார் கிரவுஞ்ச
வயமால் வரைசெந் தூளியெழ
மதமா முகத்துச் சினத்தவுணன்

அகலக் குலிச வரைதகர
அரிமா முகன்பே ராயிரவாய்
அருஞ்சோ ரிகள்நின் றலையெறிய
அண்ட கூடந் தொடுஞ்சூதம்

இகலற் றலறி விழஅசுரர்
எவரும் பதறிக் குடியோட
இலங்கும் அமரர் கலங்காமல்
எழில்வா னுலகங் குடியேறத்



தகமைச் சுடர்நெட் டிலைவடிவேல்
தடக்கை யெடுத்தோய் தாலேலோ
தமரக் கடலைக் கடைந்தமுதந்
தருவோன் மருகா தாலேலோ. 23

மூல நிலத்தி லதோமுகமாய்
முகிழ்ந்து விழிஇன் பொடுதுயிலும்
மூரிப் பாம்பைக் கால்அனலை
மூட்டி யெழுப்பி நிலம் ஆறுஞ்

சீல மொடும்போய்த் தரிசித்துச்
செழுமா மதியி னமுதகடல்
தேக்கி யகத்தங் கசைவறுமோர்
தெய்வத் தவத்தோர் உளவிழியிற்

காலுந் தீப மினல்பந்தங்
கடிகூர் விறிசு கதிர்மதிபோற்
காட்டு மொளியா யிவையாவுங்
கடந்தாங் கழிவில் பேரொளியாய்ச்

சால விளங்கும் விந்துவெனுந்
தடமா மயிலோய் தாலேலோ
தமரக் கடலைக் கண்டைந்தமுதந்
தருவோன் மருகா தாலேலோ. 24

வேறு

காரார் திசைமலி போரார் களிறு
கலங்கிப் பிளிறிடவே
கனக நிறத்துத் திருகு மருப்பிற்
கனிசின மொடுமோதிப்

பேரா யிரமுடி யுரகன் நெளிக்கப்
பின்போய் முன்னோடிப்
பேசரு வடவரை குலவரை திசைவரை
பெயரும் படிதாவிப்

பார்சூ ழேழ்கடல் குமுறத் துள்ளிப்
பனிவா னகமோதிப்
பகரரு கோளகை சாடிப் பீடுறு
படிவரு தகருடையோய்

தாரார் பொழில்சூழ் போரூ ரிறையே
தாலோ தாலேலோ
சண்முக முக்கட் பண்ணவர் குருபர
தாலோ தாலேலோ. 25

அமரர் தமக்கன் றொருநாள் இரணிய
அணிவட வரைமீதே
அறைதரு மும்மா யையினு டுருவி
அகண்டா காரமதாய்த்

திமிர மகற்றிய முச்சுட ருக்கொளி
செய்கா ரணவொளியாய்த்
திகழ்தரு புவன சராசர முழுதுஞ்
செறிபூ ரணவெளியாய்க்

கமையுறு மனவா சகமொடு காயங்
கண்டள விடவருநின்
காட்சியை மாட்சிமை பெறமுன் காட்டிய
கண்ணே யாவர்க்குந்

தமரென நிலவிய சமர புராதிப
தாலோ தாலேலோ
சண்முக முக்கட் பண்ணவர் குருபர
தாலோ தாலேலோ. 26

கோளகை தடவிக் குடைபல நீடக்
கொடியெண் திசைமூடக்
கோதறு பேரணி சூரியர் மறையக்
கொழுவிய வெயில்வீச

நீளிய சாமரை வீசப் பேரிகள்
நீள்கட லேமெனவே
நின்று முழங்கத் தெய்வத நகரில்
நிரம்பும் அரம்பையர்தாம்

வேளை மருட்டு விழித்தொழில் கைத்தொழில்
வேறா காநடன
மிட்டு வரப்புய லொத்தவன் முதலவர்
மெய்ச்சிவ ரச்சுரர்கைத்



தாளம தொத்தவெள் ளானையி லுற்றோய்
தாலோ தாலேலோ
சண்முக முக்கட் பண்ணவர் குருபர
தாலோ தாலேலோ. 27

தென்னங் காவைச் சூழப் பூகத்
திரளவை புடைசூழத்
தேமா வினமற் றவைபுடை சூழச்
செறிதரு பலவின் இனம்

மின்னு மவைபுடை சூழப் பெருவா
ழைக்கா டவைசூழ
மிளிர்கன் னற்கா டவைசூ ழப்புனல்
மிகுநெற் பணைமருதம்

மன்னுஞ் சூழற் பொன்னம் பூமியில்
வானவர் வந்திழிய
மலிசோ பானம் போல விளங்கிய
வளனொடும் இளமாழைத்

தன்னந் திகழ்சா ரற்போ ரூர
தாலோ தாலேலோ
சண்முக முக்கட் பண்ணவர் குருபர
தாலோ தாலேலோ. 28

செங்கட் சிறுமின் னொளிர்வன மேதிச்
செழுமே கங்குழுமித்
திகழ்தரு வரைமிசை கனைகுர லொடுதீம்
பால்சொரி வெள்ளருவி

வெங்கட் பணிமணி யின்குவை கழைமணி
வெண்குவை பொங்கொளிசேர்
வியன்நீ லக்குவை யொடுமுச் சங்கநல்
வேணியெ னும்படியே

துங்கப் பேரலை கொண்டு வரன்றித்
துண்ணென் றிழியொலியாற்
றுடியடி வரைமுழை தோறுங் கண்படு
சோலைச் சாரலெலாந்

தங்கப் பொடியே மிளிர்போ ரூரா
தாலோ தாலேலோ
சண்முக முக்கட் பண்ணவர் குருபர
தாலோ தாலேலோ. 29

## வேறு

கஞ்சனை யன்று முனிந்து சிவந்தருள்
கையாய் தாலேலோ
காமனை வென்றவர் தோளிலு லாவிய
காலாய் தாலேலோ

மஞ்சன் மகன்கன வின்சொல் வழங்கிய
வாயாய் தாலேலோ
மஞ்சள் வடஞ்செறி குஞ்சரி கொங்கைகொள்
மார்பா தாலேலோ

விஞ்சுறு மன்பினர் பந்தனை கொன்றொளிர்
விழியாய் தாலேலோ
வேடுவர் மங்கையு ளங்குடி தங்கிய
மெய்யாய் தாலேலோ

தஞ்செண வந்தவ ருஞ்சிடு சமர
புராதிப தாலேலோ
சரவண பவனே குரவணி தருசண்
முகனே தாலேலோ. 30

குண்டைச் சமணக் கரிகளை யடுகோ
ளரியே தாலேலோ
கும்பத் திடுமென் பைத்திரு விற்றரு
குழகா தாலேலோ

பண்டைத் தமிழ்நக் கீரன் சிறைவிடு
பண்பா தாலேலோ
பச்சைக் கொடிகச் சுப்பொரு கலசப்
பாலா தாலேலோ

மண்டைத் தலையிற் பலிநசை கொண்டவன்
மைந்தா தாலேலோ
வாரண மைந்து கரங்கொடு தழுவிய
வாகா தாலேலோ



தண்டைத் தாளுந் தோள்களும் அழகிய
சதுரா தாலேலோ
சரவண பவனே குரவணி தருசண்
முகனே தாலேலோ. 31

## 4. சப்பாணிப் பருவம்

பொருநைநதி யிற்படிந் திளமரக் காவிற்
புகுந்துசந் தப்பொங்கரிற்
புக்குமண நாறுதென்றற்குழவி விளையாடு
பொதியப் பொலங்குவட்டில்

திரையெறியு மணியாழி யங்கையி லடக்கியஞ்
செந்தமிழ்க் கடல்விரித்துத்
திறமையுடன் உறையுமொரு குறுமுனி யகத்தினுள்
திமிரமற மறைமுடிவெனும்

அருளொளி பரப்புஞா னக்கொழுஞ் சுடர்வைத்த
ஆறானனக் கொண்டலே
அன்பர்வாய் வண்குமுதம் விண்டுதண் தமிழ்நறவ
மாரவெழு மொருமதியமே

தருணவுமை முககமலம் மலரவரு பரிதியே
சப்பாணி கொட்டியருளே
தடமலையை நிகர்கரிகள் திரிசமர புரிமுருக
சப்பாணி கொட்டியருளே. 32

அலைகட லிடைப்பெரிய மகரமீன் நீர்கிழிய
அம்பிற் கடிந்தேகுமா
றரவுயர்த் திடுகொடிக் குருகுலக் கோமகன்
அடற்படைக் கடலுடையவே

சிலைவலிய வாகுவல யப்புயப் பற்குனன்
தேர்கடவி வெற்றிவளைவாய்ச்
செம்மலரில் வைத்துமறு மன்னர்செவி செவிடுறச்
செல்லிடித் தொனிமுழக்குந்

தொலைவறு பசுங்கதி ரெறிக்கும்மர கதநிறச்
சுந்தரப் புயன்மருகனே
சுருதிமுடி வாசனத் துறைபரை முலைக்குடஞ்
சொரியமுத வாரிநாறுந்

தலைமைபெறு செங்குமுத வாயனே தூயனே
சப்பாணி கொட்டியருளே
தடமலையை நிகர்கரிகள் திரிசமர புரிமுருக
சப்பாணி கொட்டியருளே. 33

ஈராறு பரிதியீ ராறுமே ருதயத்
திருங்குழை சுமந்தபுயமும்
ஈரெட்டு வெண்கலைகள் மேவிக் களங்கமுய
லின்றிச்செ ழுஞ்சுடர்விடும்

ஓராறு மதியமீ ராறுதெய் வக்கமல
ஒண்மலர் மலர்ந்தபடியே
ஒற்றுமை பெறக்கொண்டு நிற்றல்போ லத்திகழும்
ஒளிவிழி சிறந்தமுகமுஞ்

சீரார் படைக்கலக் கமலமும் மார்பமுஞ்
செய்யதண் டைத்தாளுமென்
திமிரமற எனதகங் குடிகொண்டு மீளாது
திகழ்வீடு தருகுரிசிலே

தாரார் சடைப்புனிதர் பாலாகு கக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே
தடமலையை நிகர்கரிகள் திரிசமர புரிமுருக
சப்பாணி கொட்டியருளே. 34

நனவில்வரு கனவிற் சுழுத்தியிற் பொறிகரண
நற்புருட னிற்பகுதியும்
நவில்கால பரமதில சுத்தமா யையும்விண்ணின்
நண்ணுபூ ரணமாயதோர்

உனலருவி யோமத் திருஞ்சுத்த வித்தைமுதல்
ஒருமூ வகைக்கருவியும்
ஒருபரம துரியத்து விந்துவும் மிளிர்விசுவம்
உண்டதிசை யுயர்நாதமும்

வினவலுறும் உபசாந்தம் அதனில்மா மாயையும்
மிகுசொருபம் அதனிலிருளும்
விள்ளுமென வுரைசெய்தென் உள்ளமலம்
அகலஅருள்
விழிவழிப் பொழியுமுகிலே



தனபதியை எலுவனென வுளமகிழும் அரன்மதலை
சப்பாணி கொட்டியருளே
தடமலையை நிகர்கரிகள் திரிசமர புரிமுருக
சப்பாணி கொட்டியருளே. 35

குலிசக் குழூச்சுலவு பூனதக் கிம்புரிக்
கோடுநா லுடையவெள்ளைக்
குஞ்சரக் கும்பமிசை கொட்டல்போ லச்சிவன்
குவவுப் புயங்கொட்டல்போல்

மலைபெற்ற பைம்பிடிப் பாலுண்டு முத்தமிழ்
மதம்பொழியு மந்தநாளின்
மன்னுதத் துவமசியின் மும்மைப் பதங்களை
வகுத்தறி வுறுத்துமுறைபோற்

கலகப் பிணக்குடைச் சமயப் பெரும்பறவை
கடியுமொரு கருவியதுபோற்
கருதரிய பதிமுதல் திரிபொருளும் நிசமெனக்
கைக்குறிப் பறிவித்தல்போல்

தலைமைத் தமிழ்ச்சங்கம் அளவிட்ட விரககுக
சப்பாணி கொட்டியருளே
தடமலையை நிகர்கரிகள் திரிசமர புரிமுருக
சப்பாணி கொட்டியருளே. 36

கண்ணன் திருத்தங்கை முலையமுத கடலுண்டு
கனஞான வரையிவர்ந்து
கருதரிய சுரர்முதற் பயிர்கள்தழை யப்பெருங்
காரவுண மாசுணமெலாந்

துண்ணென் றுளஞ்சுறுக் கிட்டுமுரி யச்செழுஞ்
சுடர்விடுந் தாரைநெடுவேற்
சோதிமின் மின்னியெழு தீபச் சிகைப்பொருவு
சுடிகைக் கொடிப்பேரிடி

எண்ணென் திசைக்களிறு பிளிறிட இடித்துமுறை
இன்னருட் பொழியுமுகிலே
இசைமுழவு பேரிகை வலம்புரி முழக்கமுடன்
எழில்மங்க லச்சும்மையுந்

தண்ணந் துறைப்பரவை யோடிகலு போரூர
சப்பாணி கொட்டியருளே
தகைமைபெறு குறவனிதை விழியிணைகள்
குடிகொள்புய
சப்பாணி கொட்டியருளே. 37

மரகதப் பந்திநிறை பைங்கிரண மண்டலம்
வழங்குகுழை முகமதிகளும்
மாணிக்க மணிராசி யிளவெயிற் றிசைவீசு
மகுடநீ டியமுடிகளுங்

சூரகதிர்ப் பகலெனச் சுடர்விரித் தொளிர்வயிர
கடகநிரை செறிதோள்களுங்
கறையகலு மதிமண் டலங்களென நித்திலங்
கதிர்விடு மதாணிமார்புந்

திரகதச் செக்கரின் நிறத்துகில் மருங்குலுந்
திப்பியத் தலநவமணித்
திரண்மண்டு தண்டையங் கமலமுந் திகழவிச்
சித்திரப் பைஞ்சிறைமயிற்

குரகதத் தினைநடவி யடியவர்க் கருள்முருக
கொட்டியருள் சப்பாணியே
கூரு ரயிற்கிறைவ போரூர் நகர்க்கதிப
கொட்டியருள் சப்பாணியே. 38

## வேறு

உடலிற் குடர்நீ ளக்கொடு சென்றுவ
ணத்திரள் வட்டமிட
ஒள்ளிய செல்வப் பிள்ளைகள் பற்பல
உயர்பட் டம்விடல்போற்

கடலிற் படுகுரு திப்பெரு வெள்ளங்
கட்குழி சிறுபலபேய்
கடிஅதள் மூடிய பேரிகை முழவு
கரங்கொடு கரைகாண

மிடலுற் றிடுபிண மாமலை தோறும்
வியன்பேய் களியாட்டம்



இட்டா டத்தலை வட்டா டக்கடு
வெஞ்சூர்க் குலமுழுதுங்

கொடுமைத் திறமும் அறவேல் விட்டவ
கொட்டுக சப்பாணி
கொற்றவ நற்சம ரப்பதி யுத்தம
கொட்டுக சப்பாணி. 39

## வேறு

ஆடகத் திரள்மதிலும் மேல்நிலைச் சிகரிகளும்
ஆணிமுத் தொளிர்மேடையும்
ஆழிதத் தலைபொருவு பீடுடைக் கொடிகள்பல
ஆடுபொற் குடமாடமும்

நீடுதெற் றிகளுமணி தூளிகைச் செழுமனையும்
நேர்செலுத் தியதேர்களும்
நீர்நிறைத் திடுகுடமும் வாழைநற் கமுகினமும்
நீள்நிலைப் பலதேர்களும்

சேடுறத் திகழ்மகர தோரணப் பலமறுகு
தோறுமுத் தமிழோர்களும்
சீர்மறைத் தலைவர்பரி பூரணத் தவரளகை
யாளனொத் தவர்யாவருங்

கூடிமொய்த் தொளிர்சமர மாநகர்க் கொருமுதல்வ
கொட்டியருள் சப்பாணியே
கூடலிற் செழியன்அழல் கூன்அறப் புரியும்இறை
கொட்டியருள் சப்பாணியே. 40

## வேறு

தீதறு கற்பக நற்றரு வுற்ற
செயக்குலி சப்பாணி
சேட னுடற்றுயில் பச்சை நிறத்த
செருச்செய் வளைப்பாணி

போதிடை யுற்றுல கத்தை யளித்த
புதுக்கர கப்பாணி
பூசுரர் நற்றவர் கற்றவ ரேத்து
புவித்தலம் உற்றார்கள்

மூதணி கைக்கம லத்தொ டுவப்பு
முகக்கம லப்போது
மூட விரிக்க வுதித்த மதிக்கதிர்
ஒத்தெழு மெய்த்தேவே

கோதறு நற்சம ரப்பதி யுத்தம
கொட்டுக சப்பாணி
கூர்கொள யிற்படை யுற்றக ரத்திறை
கொட்டுக சப்பாணி. 41

## 5. முத்தப் பருவம்

கயல்கொக் குடும்பின் சிரசுகளுங்
கரிக்கோ டேன முடக்கோடுங்
கழையுங் கரும்புங் கமுகினமுங்
கதலி சாலி கடிக்கமலம்

புயனத் தாதி தருமுத்தம்
புனலிற் கனலிற் புடவியினிற்
பொன்றும் பொதியிற் கேழொளிபோம்
பொருந்தும் விலையுண் டவைவேண்டேம்

இயல்புற் றொன்றான் அழிவிலதாய்
என்றும் புதுமை தருமொளியாய்
எவர்க்கும் மதிக்க அரிதாகி
இருந்து மிகுந்த மதுரமெலாம்

முயல்வுற் றளிக்கும் நின்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முகுந்தன் மருகா சமரபுரி
முருகா முத்தந் தருகவே. 42

சந்தங் கமழ்மந் தாறிலத்தேர்
தருக்கோ டிவர்ந்த பொறிஅளிகால்
தளைக்கு முருக்கு நாண்கழைக்கோ
தண்டங் குழைத்து வளைத்தேற்றி

இந்தங் கவிகை யமுதநிழல்
ஈயக் குயில்கள் விருதூத
இசைவா ரிதிப்பே ரிகைமுழங்க
இருள்மால் களிறுஞ் சுகப்பரியுங்



கந்தங் கமழுங் குழற்படையுங்
கடவுள் வசந்த னொடுசூழக்
களித்து வருவோ னொளித் தேகக்
காட்சி தருகட் டழகுடையோய்

முந்துந் தவத்தோர் பணிசரண
முதல்வா முத்தந் தருகவே
முகுந்தன் மருகா சமரபுரி
முருகா முத்தந் தருகவே. 43

பெருகுங் கருணை சுரந்தொழுகும்
பிராட்டி பசும்பொற் குடத்தமுதும்
பிறங்கும் அறுவர் ஈராறு
பெரிய குரும்பை யொழுக்கமுதுங்

கருகுஞ் சகரர்க் கருள்புரிந்து
கடலின் அகடு கிழித்தொழுகுங்
கங்கைப் பெருந்தாய் ஆயிரமாங்
கனிவாய் முத்த மிடுமமுதுங்

குருகின் சிறையும் பிறைக்கொழுந்துங்
கூடத் திகழ்செஞ் சடைப்பெருமான்
குமுதத் திருவாய் முத்தமிடக்
கொழிக்கும் நறவும் மோனசுக

முருகுந் ததும்புங் கனிவாயால்
முத்தந் தருக முத்தமே
முகுந்தன் மருகா சமரபுரி
முருகா முத்தந் தருகவே. 44

பனியிற் குறிய துளிதூற்றும்
பரவைத் தரங்க மெடுத்தெறிந்த
பணிலத் திரளும் இரசிதப்பூம்
பணிச்செப் பேய்ந்த முரண்இனமும்

நனிமுற் றியசூல் உளைந்துசொரி
நளிவெண் தரளத் திடர்தோறும்
நவைதீர் பவள வண்டல்வரை
நடுவும் படவர் மடமகளிர்

இனிதுற் றிவர்ந்து பனைப்பாளை
இருந்த கலச மதுவருந்தி
இணர்க்கே தகையும் புனைப்போதும்
எடுத்து முடித்துக் களித்தாடும்

முனிவர் குழாங்கள் புகழ்போரூர்
முதல்வா முத்தந் தருகவே
முத்தார் கொத்தே அனாதிவரு
முத்தா முத்தந் தருகவே. 45

வேறு

பூனத மாழைக் கிண்கிணி பலவும்
பொலிவொடு கண்கணெனப்
புனிதத் தண்டையி னொலிகல கலெனப்
பொற்றொடி நிரையதிர

மேல்நகும் அரைவடம் ஓசை தழைந்திட
வியன்நவ மணிமாலை
விரவி யலம்பக் குண்டல மொளிவிட
மிளிர மணிச்சுடிகை

யான முடப்பட மாயிர முந்தள்
ளாடத் தளர்நடையிட்
டம்மை செவிக்கின் சுவைபெற மழலை
அரும்பிழி சொரிவாயால்

மோன சுகந்தரு ஞானப் பிள்ளாய்
முத்தந் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக
முத்தந் தந்தருளே. 46

இருண்மைப் படலங் கெடநூங் குஞ்சுடர்
எழின்மா ணிக்கவரை
ஈரைந் துடனக் கிரிவந் தீரா
றிணைவுறு பரிசதெனக்

கருடத் துவசனும் அறிவரி யானணி
கடகத் தோள்தழுவிக்
கறையறு முழுமதி யொருபத் தொன்று
கலந்து மகிழ்ந்துறல்போல்



அருள்மெய்த் தொழுகு முகத்தொடு முகம்வைத்
தழகிய மழலைசொலி
ஐய னுளங்களி பொங்குற முத்தம்
அடிக்கடி தருவாயால்

முருகுற் றெழுநீ பத்தொடை யழகா
முத்தந் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக
முத்தந் தந்தருளே. 47

பூவே பூவிற் பரிமள மேயப்
பூநிறை சுவைநறவே
பொங்குங் கடலே கடலி லுதித்தெழு
புனிதத் தெள்ளமுதே

காவே காவிற் கொஞ்சும் பஞ்ச
வனக்கட வுட்கிளியே
கண்ணே கண்ணுறு பாவாய் பூவாய்
கனியே கனிரசமே

தேவே தேவர் சிரோன்மணி யேயென்
சீருயி ரேயுயிரிற்
செம்பொரு ளேயரு ளேமுழு மணியே
மணியிற் றேசிகமே

மூவா மறையே மறையின் பொருளே
முத்தந் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக
முத்தந் தந்தருளே. 48

ஆடக நன்கத் தரியால் வேளுக்
கம்பு திருத்துவபோல்
அலவன் குறுமுள் தாள்கொடு குவளையொ
டம்புய இதழ்கிள்ளும்

ஓடையில் நீடுங் கவையடி மேதிகள்
உறுகுட மடியில்வரால்
உகள வடிக்கடி முட்டக் கன்றென
உள்ளிச் சொரிவெள்ளம்

பீடுறு மாலைச் சாடிகொ ளாதெழு
பிரச வெளத்துடனே
பெருகிக் கதலியின் மஞ்சளொ டிஞ்சி
பெருங்கழை செஞ்சாலி

மூடி நிறைக்குந் தொண்டைநன் னாடா
முத்தந் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக
முத்தந் தந்தருளே. 49

மாலைப் பொழுதிற் பெடையொடு சிறையளி
வனசக் கோயில்புக
வளர்மதி யமுத கரங்கொண் டிதழ்வா
சக்கத வதுமூடக்

காலைப் பரிதி கரத்தா லந்தக்
கதவு திறந்துவிடுங்
கடிமல ரேரிப் பெருமத கெழுநீர்
கதிர்வயல் புகஎதிர்போஞ்

சேலைச் சினைபடு களிறு துரத்தச்
செறிநில விறிசெனவே
சிதறிக் கன்னற் காடு முறிப்பத்
தேன்முத் தொடுசொரியும்

மூலிச் சுவைநிகர் பாலிநன் னாடா
முத்தந் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக
முத்தந் தந்தருளே. 50

வேறு

சிமயம் மொய்த்தொன் றிமய வெற்பன்
தவப லப்பைம் பிடியனாள்
செறிக ளிப்பண் புறவு ரைக்குஞ்
சிலசொல் கற்குஞ் சிறுகிளாய்

அமர ருக்கும் முனிவ ருக்கும்
அடிய வர்க்கும் அமுதமே
அவுண ருக்குஞ் சமண ருக்குங்
கொடிய வர்க்கும் அனலமே



குமுத நற்பங் கயம்மு ருக்குங்
குலிகம் மிக்குஞ் சுவைநறாக்
குலவு கற்கண் டிவையி ருக்கும்
இதழ ளைப்பைங் குழவியே

சமர நற்செம் பதிய ருக்கன்
தருக முத்தந் தருகவே
தணிகை வெற்பன் சரவ ணத்தன்
தருக முத்தந் தருகவே. 51

## 6. வருகைப் பருவம்

விரைநறுங் குழலினார் கொங்கைப் பெருங்குவடு
மிகுதடக் கடலுழக்க
வெள்ளைவா ளைக்களிறு கொள்ளுசூழ் முகிழ்ப்பிளிறி
விள்ளக் கிழித்தஃதுறு

நிரைதருங் கந்திக் குடக்கழுத் தறமோதி
நெட்டிலைக் கதலி சாடி
நீடுகன் னற்கா டொடித்துப் பொறிச்சிறைய
நீலவண் டூது கஞ்சத்

திரளொடும் பணைமண்டு நெற்றா ளுடைத்திடச்
செறிதரள முகிலாதியிற்
சிந்தப் பெருஞ்சோதி யுடுமண் டலத்தினில்
திகழ்கின்ற மருதவேலி

மருவியம் புகழ்கொண்ட சமரபுரி தனில்நிலவு
மஞ்ஞைவா கனன்வருகவே
மலிபுவன முழுவதுங் கிடுகிடென நொடியில் வலம்
வருகந்த வேள்வருகவே. 52

பொன்னஞ் சிறைப்பேடை அன்னங் களிப்போடு
புனலாட நிகழ்கண்டுதன்
புகலாவி யின்சேவ லுடனூடி மாலையம்
பொழுதிற் கரந்துறைதரத்

துன்னுறு மடற்கேத கைத்துணரை வெள்ளிதழ்த்
தூயகஞ் சக்குழுவினைச்
சுரிமுகச் சங்கினைத் திரையெறியு நித்திலத்
தொகுதியைச் சூலிப்பியைப்

பன்னுநா ரைத்திரளை நாடிப் பசும்புனைப்
பஞ்சரத் திடைகண்டுதன்
பவளவா யதின்வாய் மடுத்தரு கணைத்துப்
பரிந்ததனின் முனிவகற்றி

மன்னுந் தருக்கொடு திளைக்குநெய் தற்சமர
மாநகர்க் கிறைவருகவே
மலிபுவன முழுவதுங் கிடுகிடென நொடியில்வலம்
வருகந்த வேள்வருகவே. 53

குழையளவு தாவடி செலுங்கயற் கட்கவுரி
கொஞ்சிவிளை யாடுகிளியைக்
குழகர்வே ணிப்பிறைத் தோணிமிசை வைத்தலை
கொழித்தகங் கையில்விடுத்தும்

உழைவெருவி யுகளவெம் புலியதளை ஆனனத்
துறவைத்து நகைகொட்டியும்
ஒளிர்மணிச் சுடிகைமுட வுப்படத் தரவத்தை
உலர்தலை முழைக்கண் உய்த்தும்

இழைபொருவும் ஆமையோ டதில்அறலை மொண்டெரி
அவித்தரி மருப்புவில்லுக்
கெண்தோள் தயங்கும்புரி நூல்நாண் வளைத்திட்
டெழிற்கரத் திடைபிடித்து

மழைபொருவு களன்மடியில் விளையாடு குகசமர
மாநகர்க் கிறைவருகவே
மலிபுவன முழுவதுங் கிடுகிடென நொடியில்வலம்
வருகந்த வேள்வருகவே. 54

மேருப் பொருப்பையொரு தண்டெனக் கொண்டும்எழு
வேலையை யுறிஞ்சிவிட்டும்
விரிசக்ர வாளகிரி யொருவாகு புரியாக
வெவ்வலித் தோளிலிட்டும்



பேருற்ற கயம்எட்டும் எட்டுநா கங்கொடு
பிணித்துச் செவிக்கணிந்தும்
பெரியபுவ னப்பொறைக் கமடம தெடுத்துப்
பிறங்குசில் லென்விடுத்துஞ்

சீருற்று விளையாடு பூதக் கணத்தொடுஞ்
சென்றுசூர் வேட்டையாடுஞ்
சேவகப் பெருமாளென் ஆவியுட் பெருமாள்
செயத்தேவர் முனிவர்பெருமாள்

மாரிப் புயற்கருணை பொழிகின்ற போரூர
மாயூர குகவருகவே
மலிபுவன முழுவதுங் கிடுகிடென நொடியில்வலம்
வருகந்த வேள்வருகவே. 55

அளகுபல முட்டைதன் சிறைகொண் டணைக்குமா
றண்டரா சிகளனைத்தும்
அகலப் பெருஞ்சிறையில் விகலப் பொருட்போல்
அடக்கிவைத் தும்விடுத்துங்

களவகல வருசுத்த மாயைவெளி முழுதுங்
கடந்தொரு கணத்தில்வந்துங்
கலிசுவே தத்திலெழு சலராசி தந்தூழி
காலஅழல் வெகுளிதந்தும்

புளகமெழு மெய்ச்சிறை யடித்துப்பிர சண்டப்
பொருங்கா லளித்துநச்சுப்
புழையெயிற் றுரகன்மணி யிரவிதந் துஞ்சிறைப்
பொருவில்நிழல் மதியளித்தும்

வளமையுடன் நடனமிடு மாயூர போரூர
மாவீர குகவருகவே
மலிபுவன முழுவதுங் கிடுகிடென நொடியில்வலம்
வருகந்த வேள்வருகவே. 56

பூதம் புலன்பொறிகள் கரணங் குணம்பகுதி
புகலரு கலாதிசுத்தம்
பொருவிலிரு மாயையுங் காணவரும் ஆணவப்
பொங்கிருளு மூடுருவியே

பேதங் களைந்துயிர்ப் போதங் கலைந்துகலை
பேசொணா நேர்மை வெளியாய்ப்
பேரா யிரங்கோடி சூரியரும் மட்கப்
பிறங்கியெழு ஞானவொளியாய்

ஏதங் கடந்துட் புறம்பாகி யாவைக்கும்
இன்பபரி பூரணமதாய்
இலகருட் சத்தியே சத்தியா கக்கையில்
எடுத்தஞா னச்சேவகா

மாதங் கனங்கள்மும் மாரிபொழி போரூர
மாயூர குகவருகவே
மலிபுவன முழுவதுங் கிடுகிடென நொடியில்வலம்
வருகந்த வேள்வருகவே. 57

வேறு

கருத்தே புகுந்து கதிகாட்டுங்
கண்ணே வருக மெய்ஞ்ஞானக்
கரும்பே வருக கருணைபொழி
காரே வருக ஆனந்தப்

பெருக்கே வருக யாங்கள்பெறும்
பேறே வருக மறைசொல்கிளிப்
பிள்ளாய் வருக பிறங்குதெய்வப்
பெருமாள் வருக குறமடந்தை

தருக்கே வருக மிடியகற்றுந்
தருவே வருக மன்பதைக்கோர்
தஞ்சே வருக எமையளிக்குந்
தாயே வருக பவப்பிணிக்கு

மருந்தே வருக சமரபுரி
வாழ்வே வருக வருகவே
மறையின் சிரமெய்ப் பொருளான
வள்ளல் வருக வருகவே. 58

வட்டாட் டாகு மெங்கள்பவ
மாற்ற வருக பொறிவேழம்
வணக்க வருக மனமாவை
மாய்க்க வருக மலர்ச்சிறையை



விட்டாட் கொண்டு மெய்ஞ்ஞானம்
விளக்க வருக வியனருளே
மேலீ டாக்கி யெங்குநிறை
மிளிர்பே ரின்பந் தரவருக

தட்டா திருந்த சிவமென்றுந்
தானென் றிளைக்கும் மயலகற்றித்
தானே யதுவா யதுதானாய்த்
தயங்கு மோனந் தரவருக

மட்டார் சோலைச் சமரபுரி
வாழ்வே வருக வருகவே
மறையின் சிரமெய்ப் பொருளான
வள்ளல் வருக வருகவே. 59

வேறு

உயிருள் மருவு திமிரம் இரிய
ஒளிரும் அளவில் பரிதியே
உததி பொருவு கருணை யமுதென்
உளனு ளுதவும் மதியமே

இயலின் மதுர முழுதும் அறியும்
இசைகொள் பெரிய புலவனே
இரவு பகலும் நினையும் அடியர்
இதய நகரின் அரசனே

கயிலை யிறைவர் மகிழ வொருசொல்
கழறு பரம குரவனே
ககன சுரர்கள் முடிகள் தடவு
கமல சரண கடவுளே

மயிலின் முதுகில் உதய குமரன்
வருக வருக வருகவே
மகிமை தழுவு சமர புரியன்
வருக வருக வருகவே. 60

அறைய அரிய கருவி யடவி
யருக வொழுகு நதியமே
அறிவில் சமய அரிகள் வெருவி
அலற முடுகு சரபமே

நிறைகொள் பரம சுகமெய் யடியர்
நினைவி லுதவு பிரமமே
நிகழும் அயனும் அறிய அரிய
நிமல வொளியுள் மதுரமே

கறைகள் இரிய எனது மனது
களுலி நிலவு புணரியே
கலக வினைவ லனலை யடுநற்
கருணை பொழியும் எழிலியே

மறைகள் குலவு கமல சரணன்
வருக வருக வருகவே
மகிமை தழுவு சமர புரியன்
வருக வருக வருகவே. 61

## 7. அம்புலிப் பருவம்

மானைஆ கந்தழுவு வாய்இவனும் உழைதந்த
மானைஆ கந்தழுவுவான்
வனைசடைக் கங்கையலை தவழ்குழவி நீயதின்
மடித்தலக் குழவிஇவனுந்

தேனனைய மொழியறுவர் மகிழவரு வாய்இவன்
திகழுமவர் மகிழவருவான்
சிவனடியும் முடியும்நீ யறிதிமற் றவைஇவன்
சிறுவிரற் சுட்டியறிவான்

சோனைமழை யெனஅமுது பொழிகிரணன் நீஇவன்
சுககருணை யமுதுபொழிவான்
துன்னிருள் கிழித்தெழுஞ் சோதிநீ யிவனடியர்
துகளிருள் கிழித்தசோதி

யானஇம் முறைமைகொடு நீநிகர்தி யான்மகிழ்ந்
தம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 62

சுரர்சிலர்க் கமுதுதவி நீதேய்வை கதியமுது
தொல்லுயிர்க் குதவிநிறைவான்
தோமுறு களங்கன்நீ யிவனடியர் கனவினுங்
சொல்லுறு களங்கம்அறியார்



உரஅரவி னுக்குநீ வெருவுவாய் அஃதுமிவன்
ஊர்பரிக் கொருகவளமாம்
உலகைவலம் வரவுனக் கொருதினஞ்
செல்லும்இவன்
ஒருநொடியி லோடிவருவான்

இரவினுக் குரியவொளி நீயிவன் அகம்புறத்
தெக்காலும் மிக்கவொளியான்
எய்துதண் ணளிசிலர்க் குடையைநீ யனைவர்க்கும்
இவனெண்ணு தண்ணளியினான்

அரன்முத லெவர்க்குமொரு குரவனிவ னாதலால்
அம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 63

மயிலும்அயி லுங்கொண்டு வன்பகை தணிக்கலாம்
மலரடித் தோணிகொண்டுன்
மாறாத பவசலதி யேழுங் கடக்கலாம்
வானுலகு தொழவாழலாம்

வெயிலொளியும் நிகரல வெனப்புகல மெய்ஞ்ஞான
மிக்கவொளி பெற்றுய்யலாம்
வீடகத் துலையா திருந்தமு தருந்தலாம்
மிகுதுகட் சிறைகடியலாங்

குயிலனைய மொழியார் முகத்தினுக் கொப்பெனக்
கூறாத பெருமையுறலாங்
கொடியகய நோயகன் றெப்பொழுதும் ஒல்காத
குலிசமென வடிவுபெறலாம்

அயிலைமுள ரிக்கரங் கொண்டசே வகனுடன்
அம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 64

கஞ்சா தனத்தனைச் சிறையிடுவன் முத்தமிழ்க்
கவிஞனைச் சிறைவிடுப்பன்
கடியகுன் றடுவன்இருள் கடியுங் குணக்குன்று
கனகும்ப னுக்கருளுவன்

எஞ்சாத கடலழித் தரிவைமுரு காஎன்
றிசைக்கஅருள் வாரிதருவன்
இகலவுணர் களைகட் டடைந்தகட வுளரெனும்
இரும்பயிர் தழைப்பவைப்பன்

நஞ்சாய சமணர்கழு வேறவிட் டடியர்நா
டோறுமீ டேறவருவன்
நவைதழுவு புத்தன்முடி யிடறியழ லடும்என்பை
நளினமங் கைக்கிணைசெய்வன்

அஞ்சா திருந்திடே லிவன்வெகுளி கொளுமுனம்
அம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 65

முக்கணா யகனரிய திருநுதற் குறுவியர்வின்
மூரிவட வையினுதித்தோன்
மூதண்ட கோளகை கிழித்தெழுந் தாயிர
முகந்தோறும் வெகுளிபொழியத்

தக்கன்மக சாலையுட் புக்கியங் குறைகின்ற
சதகோடி தேவரையெலாஞ்
சாடிக் கொழுங்குருதி யாடிப் பெருந்தூளி
யாடித் தருக்கியாடி

மிக்கவுன துடலமொரு கறியாக மாநிலம்
மிகுத்தபே ரம்மியாக
மேன்மைதரு பாதவெங் குழலிகொ டரைத்தனன்
வியர்வினா லவனையுதவும்

அக்கடவுள் கட்கனல மிக்குழவி நீவிரைந்
தம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 66

விரவுபல அண்டங்க ளிவன்உட்டை யெனவைத்து
விளையாடு பைங்கழற்காய்
விரிகருவி யாறாறு மிவனேவல் தலைகொண்ட
வீறாழி யக்காரராம்



பொருவரிய இருமாயை யிவனுளம் நினைத்தபடி
புரிகின்ற தாதியர்களாம்
பூரணத் திரஞான வாரியெழு சுவையமுது
போசன மிவன்தனக்கே

கருதரிய மறைநாலு மிவனர சிருக்குமொரு
கதிர்மணிச் சிங்கஅணையாங்
ககனசுரர் அனைவரும் இவனைப் பணிந்துகை
கட்டும் பெருஞ்சேனையாம்

அரிபிரம ரிவனுக் கமைச்சராம் ஆதலால்
அம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 67

மேகசா லங்களென நீலக் கலாபம்
விரித்துவிச் சித்திரகிரிபோல்
விண்டுவினை மேவியோர் சண்டநா கத்தனை
விடுத்தவனை வேலைமூழ்கப்

பாகுவா ரிதியளறு படமொண்டு சிவலோக
பரியந்த மேவிநின்று
பரமனுல கும்பரந் தாமனுல கும்பரி
மளிக்கின்ற கமலனுலகும்

போகமலி கற்பகா டவிநீழல் வாழ்வேபொ
லிந்தபுரு கூதனுலகும்
புகருலகு மதியுலகு கதிருலகு பூவுலகு
பொங்கப் பொழிந்துமீளும்

ஆகிறைவர் பின்வருந் தோகைஇறை தன்னுடன்
அம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 68

புலன்மறுகு பொறியையுறு கமடமென வுட்கொண்டு
பொருமுக் குணங்கள்வென்று
பூரகம் இரேசகந் தாரக மெனுந்தொழில்
புகன்றகா லிற்பயின்று

கலகமறு நடுநாடி சென்றுமுச் சுடர்களின்
கதிர்மண் டலங்கடந்து
கணபணா டவியுரகன் முடியிற் றுளக்கம்அறு
கம்பத்தின் அசைவற்றுளோர்

மலஇரவு விடியமிகு துறவுணர்வு நசையறுதல்
மலிகுணக் குன்றின்முடிமேல்
மன்னுஞா னக்கதி ரெழுந்தொளி பரப்பமா
றாதுதச நாதமுழுதும்

அலகில்பவ துயிலறக் கூவுசே வலனுடன்
அம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 69

வேறு

கானவர் குலமட மானை மணந்த
கடம்பன் கரைபொருநீர்க்
கஞ்சச் சரவண அணைமிசை தனில்நனி
கண்துயில் சிறுகுழவி

ஆனவுன் மனைவி வளர்த்திடு மகனிவன்
அம்மான் உரலோடே
அன்றளை திருடிக் கட்டுணி இடையன்
அனையுஞ் சிறுவாலை

ஊனமில் அத்தன் பித்தன் இவற்கென்
றுன்னி யிருந்துவிடேல்
உலக சராசர மிவன்முத் தொழில்விட
வுண்டோ கண்டிகொலோ

வானவர் சேனா பதியுடன் ஆடிட
வாஅம் புலிவாவே
மலிசம ராபுரி முருகன தருகே
வாஅம் புலிவாவே. 70

குறுமுள் தாள்நெட் டிதழ்வெண் கமலக்
கோயி லிருந்தவள்தன்
கொழுநன் தொழில்தந் திடவோ பச்சைக்
கொண்டற் கிணைசெயவோ



தறுகண் சிறுகண் தழைசெவி வெள்ளைத்
தந்திக் கரசுறையுந்
தருநிழல் தரவோ துருவ னிருக்குந்
தங்கக் கிரிதரவோ

பிறவிப் பகையைத் தெறவோ தண்கலை
பிரியா தருள்தரவோ
பேசரும் மறுவில ரியாவரு நிற்கப்
பேரரு ளேதறியேம்

மறுவுற் றுளநினை வாவா என்றனன்
வாஅம் புலிவாவே
மலிசம ராபுரி முருகன தருகே
வாஅம் புலிவாவே. 71

## 8. சிறுபறைப் பருவம்

கனககுவ டெனநிலவு வீரவா குத்தலைவர்
ககனமுக டளவும்இரதக்
கணமணி முழக்குங் கவுட்குழி திறந்துபாய்
கலுழிமத கரிமுழக்கும்

மனகதியி னைப்பொருவு குரகத முழக்கொடு
வயப்பூத கணமுழக்கும்
வால்வளை முழக்கும்அதி பேரிகை முழக்கும்அகல்
வானவர்கள் முடிமுழக்கும்

பனகஅணை துயிலுமவன் முதலினோ ருபயதிசை
பல்லாண்டு சொலுமுழக்கும்
படிறவுண மாசுணக் குருமெனச் செவிபுகப்
பண்டுசூர் வென்றசதுரா

தினகரனை நிகர்சமர புரியிலுறை குமரவேள்
சிறுபறை முழக்கியருளே
செறிகலப மயில்முதுகி னுதயசின் மயதூய
சிறுபறை முழக்கியருளே. 72

குடமுழா வாணன்ஈ ராயிர கரங்கொண்டு
குமுகுமென வேமுழக்கக் முழவொலி முழக்கவிரி
கொண்டலின் நிறக்கடவுள்
கோகனக மாளிகையினான்

தடமருவு கைத்தாள நற்றொனி முழக்கஅந்
தமருகத் தொனிமுழக்கத்
தாரளி முழக்கமறை நூபுர முழக்கவிரு(து)
ஆள்கள்தா ளம்முழக்க

அடல்நதி யிரைக்கமணி யரவுக ளிரைக்கஉழை
அலறமுய லகன்நெளிவுற
ஆடக மணிச்சபையின் நாடகம் இழைத்துமைக்
கன்புசெயு மின்பவடிவோன்

திடமருவு குமரனே சமரபுரி முருகனே
சிறுபறை முழக்கியருளே
செறிகலப மயில்முதுகி னுதயசின் மயதூய
சிறுபறை முழக்கியருளே. 73

ஆறுசம யக்கடவுள் வேறுவே றின்றியான்
ஒருவனே யங்கங்கிருந்
தன்பர்க்கு முத்திதரு வித்தென்றி யாவர்க்கும்
அறிவித்த வதனமணியே

வீரசூரர் துஞ்சவெஞ் சிறைவிண்டு வானவர்கள்
விண்ணகத் தமுதருந்த
வெற்றிமுர சன்றுனது சேனைவா ரிதியிடை
வியப்புற முழங்குமுறைபோல்

மாறுபடு காமாதி வெம்படைகள் துஞ்சிட
மலச்சிறை கழன்றுஞான
மாவிண் ணகத்திருந் தானந்த அமுதெனது
வாய்மடுத் துண்ண அறிவில்

தேறுமறை நாதமென நினதுமுள ரிக்கரச்
சிறுபறை முழக்கியருளே
செறிகலப மயில்முதுகி னுதயசின் மயதூய
சிறுபறை முழக்கியருளே. 74

கட்டைமுள் தழுவுதாள் நெட்டித முடுத்தசெங்
கமலநான் முகஎகினமுங்
கவுத்துவ மணிப்பணியொ டம்போரு காடவி
கலித்தபச் சைப்பன்றியும்



மட்டுலவு சீர்பாதம் இன்றளவு கண்டிலா
வானவனு மோரொருவரை
வழிவருஞ் சரியாதி வருவித்து வீடுதரும்
வனைதமிழ்க் காழிமேவி

எட்டுணையும் அறிவரும் அனந்தசீ வரைவதுவை
என்றுபெய ரிட்டழைத்தங்
கிரும்புண்ட நீரில் திரும்பாத வீடுதரும்
இனியகவு ணியர்விளக்கே

திட்டமொடு வரமுதவு சமரபுரி முருகவேள்
சிறுபறை முழக்கியருளே
செறிகலப மயில்முதுகி னுதயசின் மயதூய
சிறுபறை முழக்கியருளே. 75

வெளியில்வளி யசைவற்று நின்றவா றமலஉளம்
மிளிர்பரத் திலயமாகி
மெய்த்தவ மிழைப்பவர்க்ககல்வான நதிநீர்
வியன்தொளைக் கரநிமிர்த்தங்

களியொடுங் கரிமொண்டு குண்டிகை நிறைப்பஅல
வற்பகைக் கவிகள்தாவி
அங்கற் பகக்கனி கொணர்ந்துவந் திக்கஅனு
தினமுமவ ரறையும்மறைநூல்

கிளிகள்பயி லக்ககன கந்தருவர் வந்தமுத
கீதநா தம்முழக்குங்
கிளர்சந்த னப்பொங்கர் மலிசாரல் கயிலையங்
கிரிவார வளநிகர்க்குந்

தெளிவுதரு சமரபுரி தனில்நிலவு குமரவேள்
சிறுபறை முழக்கியருளே
செறிகலப மயில்முதுகி னுதயசின் மயதூய
சிறுபறை முழக்கியருளே. 76

வேறு

புகர்படு தொண்டை நிமிர்த்துச் சிகிவாய்
பொருவக் கரிமதியிற்
பொங்குமு தள்ளிப் பிடிகளி பெருகப்
போய்வாய் வழியூற்றி

மகவுடு தடவும் பொழில்படு முகில்வாய்
மணிநீர் திணிதரளம்
வாரி யிறைத்துக் கற்பக நற்குழை
மலர்நறை சொரிதரவே

தகர முறித்துக் கயமுனி பகுவாய்
தந்தப் பிடிநுதலைத்
தைவந் தருகி லணைத்து மணத்திடு
சண்பக மல்ர்துயிலுந்

குகைபடு சாரற் போரூ ரிறையே
கொட்டுக சிறுபறையே
கொத்துற முத்தமிழ் மெத்தவ ளர்த்தவ
கொட்டுக சிறபறையே. 77

அளைகடை முடைகது வியதளிர் வடிவத்
தாய்ச்சியர் மத்தொலியும்
அங்குட மடிமுலை விம்மிக் கன்றுளி
ஆன்நிரை கத்தொலியுங்

கிளைபடு தொளைவழி விரல்விடு தொறுவர்கள்
கீதக் குழலொலியுங்
கேழ்செறி கானக் கோழிகள் முறைமுறை
கிட்டிக் கூவொலியும்

விளைதரு தளவத் தளிபல விளரி
விளக்கிய சீரொலியும்
விடியற் காலைக் கடலைப் பொருவ
மிகுத்தெழு மாமுல்லைக்

குளமலி கண்ணன் தருபோ ரூரிறை
கொட்டுக சிறுபறையே
கொத்துறு முத்தமிழ் மெத்தவ ளர்த்தவ
கொட்டுக சிறுபறையே. 78

கிளிமொழி புகல்வார் கீதம்பயில்வார்
கின்னரி வாசிப்பார்
கேழ்கலன் அணிவார் மாலைகள் புனைவார்
கிளர்மயில் நடமிடுவார்



அளிசுழல் பூம்பந் தெறிவார் குங்குமம்
அள்ளியி றைத்திடுவார்
ஆடவர் புயவணை மீதிற் றுயில்வார்
அழகுப ணிக்கருள்வார்

களிறிடை வருவார் சிவிகையில் வருவார்
கவனப் பரிவருவார்
காமன்இல் வருவார் மாமன்இல் வருவார்
கஞ்சன்இல் வந்தருள்வார்

குளிர்தமிழ் புனைவார் நிகழ்போ ரூரிறை
கொட்டுக சிறுபறையே
கொத்துறு முத்தமிழ் மெத்தவ ளர்த்தவ
கொட்டுக சிறுபறையே. 79

உதடு கடந்த நெடும்பலும் உள்குழி
கணும்எக் கியவயிறும்
ஊரர வங்கள் நெளிந்திடு செவிகளும்
உளநெட் டைப்பலபேய்

கதழெரி வெம்பசி யற்றனம் என்று
களிப்பொடு கைகொட்டக்
ககனர்க் கரசிகல் அற்றனம் என்றணி
கடகத் தோள்கொட்ட

மதமலி யவுணரு ளம்பறை கொட்டிட
வானவர் நகரியெலாம்
மன்னிய வீரப் பேரிகை கொட்ட
மணிக்குடர் உதிரநிணங்

குதிகொளும் வெற்றிச் சத்தி தரித்தோய்
கொட்டுக சிறுபறையே
கொத்துறு முத்தமிழ் மெத்தவ ளர்த்தவ
கொட்டுக சிறுபறையே. 80

வேறு

மரகத மணிக்குவடு தழைசிறை விரித்துரகன்
மணிமுடி நெளிக்கஇருமூ
வளமுள முடிப்பவள வரையினை யெடுத்துநட
மிடலென மயிற்பரியின்மேல்

அருள்விழி கொழிக்கமுக மதிநில வெறிக்கநினை
அடியவர் களிக்கவருவோய்
அமணர்கள் பிதற்றுகலை யலைகடல் முழக்கம்அற
அருமறை முழக்கமுறையே

இருமதுரை யிற்பெரிய நதிவிடு திருப்பதிகம்
எதிர்செல வெடுத்தபெருமான்
இருளென மலைக்கும்மல மறவுன தடிக்கமலம்
எனதுபுன் முடிக்கண் அருள்வோய்

செருவலி முழக்குநிசி சரர்கெட் வுருத்தஇறை
சிறுபறை முழக்கியருளே
செழுமணி மதிற்சமர புரியிலுறை சிற்பரம
சிறுபறை முழக்கியருளே. 81

## 9. சிற்றிற் பருவம்

தேமாங் கனியின் அடுப்பமைத்துத்
திகழூன் கழிந்த வலம்புரியிற்
செந்தே னுலைப்பெய் தரவீன்ற
செழுமா மணிவெங் கனல்மூட்டிப்

பூமா தளையின் விதையரிசி
புகட்டிச் சமைத்துக் கதலிமடற்
பொங்கப் பிழியும் அதன்கனியும்
பொருந்த அளவிக் கறியட்டுக்

காமா தவிப்பூம் பந்தரிடைக்
கயற்கண் ஆயம் இழைத்த வண்டல்
கருதும் புவன கோடியெலாங்
கரந்தும் படைத்துங் காக்குமொரு

சீமான் உனக்கோ ரிலக்கோசொல்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 82

அங்கைத் தலத்திற் குண்டகழ்நீர்
அடக்கு முனிவர் ஏறனையான்
அகத்தின் ஞான விளக்கேற்றும்
அடிகேள் பவள விளக்கவியேல்



செங்கண் திரள்மெய் யுடையோற்குச்
செழுங்கற் பகத்தின் நிழல்தருவோய்
செந்தேன் துளிக்குங் குருந்தநிழல்
தீக்கேல் மேன்மேற் புடைத்தெழுந்த

கொங்கைச் சுமையோ டருங்களபங்
கூடச் சுமந்து வாடுமிடைக்
கொம்பர் அரம்பை மடமகளிர்
குலவச் சிதையா வீடளித்தோய்

திங்கட் கிரண நித்திலப்பூஞ்
சிற்றில் சிதையேல் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 83

விதையா யிருக்கும் ஐந்தெழுத்தும்
வேதாகமமும் முத்தமிழும்
விளங்குஞ் சரியா திகள்நான்கும்
வீறாகியமெய்ச் சிவபதமுஞ்

சுதையா தரிக்குந் திருநீறுஞ்
சோதி நயனத் திருமணியுந்
துகள்தீர் பத்தி விதிநெறியின்
தொடர்புஞ் செடிதீர் மெய்யடியார்

இதையா லயத்தைப் பிரியாதங்
கிருள்தீர்ஞான மணிவிளக்கும்
இலங்கு மவுனந் துளும்பாத
இன்பவளனுஞ் சந்ததம்முன்

சிதையா தளிக்கு மோரிறையே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 84

மறையின் சிரமெய் வாச்சியமும்
மருவுங் கருவி யாறாறின்
வயங்கு முடியிற் பேரருளும்
வானோர் முடியின் நறுந்தொடையுங்

கறைகொள் மிடற்றோன் திருப்புயத்துக்
கடியா ரிதழிச் செந்தாருங்
கவுரி கருணை நறவுபொழி
கண்ணெனன் கமலத் தண்மலரும்

அறையுந் தணிகை மலைச்சுனைக்குள்
அலரும் மலரும் மணக்குமுன
தருஞ்சீ ரடிசிற் றிலிற்புழுதி
அளவி மணப்பத் தகுமோதான்

சிறைவண் டோகைக் கிறையோனே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 85

அடியார் நிமலத் திருவகத்துள்
அன்பு பொறுமை யவாவறுத்துல்
அடுப்பாங் கமைத்து மலக்காட்டத்
ததிக ஞானக் கனல்மூட்டி

மடியா திருந்த வுயிர்க்கலசம்
வழிய அருட்பே ருலைவார்த்து
மாறாப் பெருமைச் சிவானந்த
மதுரச் சோறு தினம்பொங்கி

விடியாச் சீவ போதஇருள்
வீய மவுனச் சுடர்விளக்கு
விளக்கி யிருந்த படியிருந்து
மேலாஞ் சிற்றில் விளையாடுஞ்

செடிதீ ரகத்தோர் புகழ்வாலை
சிறுவா சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 86

ஆறு வதன தாமரைகள்
அலரு மதுரச் சுவைமடுவே
அடியார் இதய தாமரையுள்
அரும்பி மாறாப் பரிமளமே



வீறும் அமரர் கணஞ்சூழ்ந்து
வியப்ப முளைத்த முழுமதியே
வெவ்வா ளவுணக் கருங்கடலை
விழுங்கி யெழுந்த வடவனலே

மாறு படுபுன் சமயவன
மலைத்து முறித்த மதகளிறே
மாயாப் பிறவிக் கனலவிய
வளருங் கருணை பொழிகாரே

தேறு முயிருட் பூரணமே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 87

கரியின் கோடும் அகில்திரளுங்
கடிச்சந் தனமுங் கழைமணியுங்
கடுவூற் றிருந்த தொளையெயிற்றுக்
கடுங்கண் அரவின் முழுமணியும்

விரியுந் தரங்கக் கரங்கள்கொடு
விரவிக் கொழித்து நிலங்கிழித்து
வேலை புகுதப் பாதலத்தில்
மிளிரும் இராச வுரகபடம்

பரியும் மணிகள் நீர்கதுவல்
பரிதி யுருவம் பலஎடுத்துப்
பரமா னந்தக் கடல்படிவான்
பரிந்து மூழ்கித் தவஞ்செயல்போல்

தெரியும் பாலித் திருநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே 88

தருவிற் படரும் வல்லியெனத்
தகுமா டவரை மடவார்கள்
தழுவப் புயத்தின் முலைக்கோடு
தைப்பத் தெரியல் முகையுடைந்து

முருகுற் றெழுந்து துகில்நனைக்கும்
மூரிச் சுதைமா ளிகையிழைத்த
முதிரும் பதும ராகவொளி
முழுமீன் திகழும் அகல்வானப்

பருநித் திலவெண் பந்தருக்குப்
பவள நெடுங்கால் பலநாட்டும்
பண்பா மதியம் பந்தர்நடுப்
பால்வெண் தரளப் புஞ்சமெனத்

தெரியும் பாலித் திருநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 89

கமலக் களைசெந் நெலிற்களையுங்
கடைச்சி மகளிர் வளையொலியாற்
கயல்போய்க் கரும்பை வளைத்தொடிப்பக்
கலித்த கொழுஞ்சா றொழுகுவழித்

தமரக் களிவண் டொழுங்கேறல்
சம்ப ராரி நாணேற்றுந்
தனுவைப் பொருவ மலரோடை
தருக்கு மவன்தூ ணியைநிகர்ப்ப

நிமலக் கமுகின் குடப்பணில
நிலவுக் கவிகை தனையேய்ப்ப
நெடுமா ளிகையின் மகளிர்அவன்
நேரும் ஞாயிற் படையேய்க்குந்

திமிலப் பாலித் திருநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 90

அருணன் தபனஞ் செவ்விளநீர்
அகற்றப் பசும்பொற் புரவியிளைப்
பரும்பும் பொதும்பில் துயில்முகில்நீர்
ஆற்றக் கமுகு குடைநிழற்றக்



கருவின் இருந்து நிமிர்ந்துதலை
கவிழ்க்குஞ் சாலிக் கதிர்கற்றைக்
கவரி மருங்கின் காலசைப்பக்
கடிச்சண் பகங்கள் மணம்வீசத்

தருண வாழை யாலவட்டஞ்
சந்தப் பொதியக் காலெறியத்
தரணி யிதயக் களிசிறப்பத்
தயங்கு மணித்தேர் மெலச்செலுத்துந்

திருவெண் பாலிச் செழுநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 91

## 10. சிறுதேர்ப் பருவம்

மதுகரம் புக்கிடற விரைநறுங் குறியமுகை
வாய்விண்டு மடல்மடக்கி
மதுமாரி பொழிகின்ற தொங்கல்ஆ கண்டலன்
வயத்தொடுந் தேருருட்ட

விதுகரமும் மட்கவோ ராயிர கரங்கொண்டு
வேலையிருள் அள்ளியுண்டு
வெற்பின்முடி யெழுகடவுள் சூர்மகற் கஞ்சாது
வியன்மணித் தேருருட்டக்

கதழெரிச் செங்குஞ்சி வெண்பற் பசுங்கட்
கரும்பேய்கள் அவுணருடலக்
கார்வரை யுருட்டமால் அட்டதிசை தனதாணை
கைக்கொள்சக் கரமுருட்டச்

சிதைதரு பெருந்தே ருருட்டுபோ ரூரிறைவ
சிறுதே ருருட்டியருளே
சிமயமொய்த் திடுமிமய மயில்வயிற் றுதயமணி
சிறுதே ருருட்டியருளே. 92

மறுகுவெளி யெறியுங் கடுஞ்சிறைப் புலிநக
வளைத்துண்ட வெண்டலைச்செம்
மாமுது குடைக்கருடன் மீதிவர்ந் தொளிபெருகு
மரகத நிறக்கடவுளும்

முறுகெரி கடுக்குஞ்சி கைப்பவள வாய்வெண்மை
மொய்த்தசிறை வின்ளாஅடி
மூதோதி மத்திவர்ந் தாரண முழக்குநா
முண்டக மனைக்கடவுளுங்

குறுகியிறு புறனும்வர நடுஇடைப் பைஞ்சிறைக்
குரகதங் கடவியடியார்
குறைகளைந் தாறுமதி வதனவழி கருணைபொழி
கொண்டலே யண்டர்அரசே

சிறுகிடைப் பெருமுலைத் தேவகுஞ் சரிகணவ
சிறுதே ருருட்டியருளே
சிமயமொய்த் திடுமிமய மயில்வயிற் றுதயமணி
சிறுதே ருருட்டியருளே. 93

பாததிகி ரியுமெலும் புப்பெரும் பலகையும்
பகர்நாடி யுருவாணியும்
பரியமரு மத்தட்டும் அரியசீர்க் கூவிரம்
படிறுசெறி பொறியாடியுங்

காதல்தரு குஞ்சிக்கொ டிஞ்சியும் பலமொழி
கலித்தபல் லியராசியுங்
கணமொடு மலிந்தவட லெனவுரை தரும்பெரிய
கடுவேக முடையநானா

பேதமுறு தேர்கள்மீ தாருயிர்ப் பிள்ளையைப்
பிறங்கிட விருத்திவெற்றிப்
பேசரு மனப்புரவி கட்டிவினை வடவழிப்
பெருமநின் னருள்வலவனால்

தீதற நடத்திடச் செய்தகும ரேசனே
சிறுதே ருருட்டியருளே
சிமயமொய்த் திடுமிமய மயில்வயிற் றுதயமணி
சிறுதே ருருட்டியருளே. 94

உலகினொடு சரஅசர மெவையுமாய் ஒன்றினொடும்
ஒருபற் றிலாதபொருளாய்
உறுமறிவை யறிவிடத் தெழுகின்ற சிற்றிசைவில்
உயிருலகு மயிலில்பரமும்



இலகுமவை யெங்ஙன மெனிற்கருதும் அறிவொன்ற
தெழுநினைவு சுட்டுபொருளென்
றிவையோ ரிரண்டையும் இணைத்தும் பிரித்தும்
இயக்கிவரு பொருளொன்றுமாங்

கலகமுறும் அந்தநினை வின்றாகின் முப்பொருளு
மின்றுபர கதியுமிதுவே
காணென்று கடையேனை வாவென்று முடிமீது
கஞ்சமல ரடிதரித்தென்

சிலைமனங் கனிசெய்த குமரசற் குரவனே
சிறுதே ருருட்டியருளே
சிமயமொய்த் திடுமிமய மயில்வயிற் றுதயமணி
சிறுதே ருருட்டியருளே. 95

ஒருபொரு ளிடத்தினிற் சச்சிதா னந்தமுடன்
உருவநா மமுமுள்ளதென்
றுரைதந்து முன்னர்பின ருண்டாய் விளங்கியுறு
பிரியமா யுளமூன்றுளே

மருளிரிய வருமெய்ம்மை யுருவநா மம்பொய்ம்மை
வன்பழுதை யுரகவுருவின்
மாறா தறிந்திடுதி பின்பழுதை நன்றா
மதித்தவர்க் கரவின்மையின்

இருளறும் பிரமமே நிகழுமற் றொருபொருளும்
எதிரிட் டிலங்காதென
ஏழ்பிறவி வாரிதியி லாழுமெனை வாவென்
றெடுத்தருள் அளித்தகுரவா

தெருளுறுங் கலைமுனிவர் பரவுபோ ரூர்முருக
சிறுதே ருருட்டியருளே
சிமயமொய்த் திடுமிமய மயில்வயிற் றுதயமணி
சிறுதே ருருட்டியருளே. 96

வேறு

வடவைக் கனலென வுதரக் கனல்மிக
மண்டப் பசிவிஞ்சி
மண்டையின் மூளையை யளையென முதுபேய்
வாரி விழுங்கஅதின்

புடையிற் சிறுபேய் கெஞ்சிக் கெஞ்சிப்
பொருமி யழத்தேர்கள்
புணரிக் கலனில் குருதிக் கடலிற்
போகக் காகநிற

மிடறற் றாடு கவந்தக் குழுவினை
விரிதலை முதுகூளி
வெங்கள நாடக சாலையி லாட்ட
வெகுண்டெழும் அவுணர்கணத்

துடலைக் கறியின் அரைத்தெழு தேரன்
உருட்டுக சிறுதேரே
உமையொரு பாகற் கருமைக் குமரன்
உருட்டுக சிறுதேரே. 97

கவைதரு குறுமுள் தாள்ஞெண் டருகுறு
கண்டற் கரியெயிறு
காணென வெண்முகை யுண்டாய் விண்டது
காலுந் துகளள்ளி

நவையறு பெடைஞெண் டுக்குத விப்பகல்
நள்ளிருள் அளைமனைவாய்
நண்புறும் அஃதொடு புக்குக் கொண்டல்
நறுங்குறு துளிவீசத்

தவநனி குளிரான் உளையக் கடல்தன்
தண்திரை வண்கையால்
தரளக் கதவும் பவளக் கதவுந்
தந்தம் மனைமூடும்

உவமையில் நெய்தற் போரூ ரிறைவன்
உருட்டுக சிறுதேரே
உமையொரு பாகற் கருமைக் குமரன்
உருட்டுக சிறுதேரே. 98

பசுமைப் புல்லிச் செந்நிற வல்லிப்
பங்கே ருகமீதும்
பால்பாய் தாறொ டடுக்கும் மடல்குலை
பரியுங் கதலியினும்



நசையுற் றிடுகள் தேறல் பாளை
நறும்பூ கத்திடையும்
நவைதீர் ஈர்வாள் நெட்டிலை முண்டக
நகுவெண் துணர்தோறுந்

திசையுற் றருமணம் வீசுபுன் னாகஞ்
செறிபுளி னத்திடையுஞ்
சினைவளை மதியமு தத்திரள் சிந்துஞ்
செய்தியின் மணிசொரியும்

உசிதக் கல்வியர் சூழ்போ ரூரன்
உருட்டுக சிறுதேரே
உமையொரு பாகற் கருமைக் குமரன்
உருட்டுக சிறுதேரே. 99

தரளவெண் மணியுஞ் சங்குந் துகிருந்
தடவாள் வாய்முரணுந்
தண்திரை யெறியும் வண்கட லிடையே
தந்திக் கனகோடு

நரைதரு கவரியும் நாவியும் அகிலும்
நற்சந் தக்குறடும்
நாடரு திரையால் உந்திப் பலநதி
நண்ணுறல் பண்ணுறவே

இருநில முழுதா ளரையர்க் கங்கங்
கெய்திய நிருபரெலாம்
ஏர்திறை யிட்டங் கவனு ளடங்கி
இருந்திடு முறைமானும்

உருமலி நெய்தற் போரூ ரிறைவன்
உருட்டுக சிறுதேரே
உமையொரு பாகற் கருமைக் குமரன்
உருட்டுக சிறுதேரே. 100

வடவரை யோரா யிரமுழை தோறும்
வருங்கொடி மினலெனவே
வாடரு கவர்நா நீள விதிர்த்திடு
மாசுண ராசனையே

கடகரி யெட்டுஞ் சென்னி கவிழ்த்துக்
கால்கள் மடித்திடவெங்
கடுவே கத்துட னோடிக் குத்திக்
கதிர்செறி புஞ்சமெனப்

படமுடி தாழ எடுத்துத றிப்பர
தத்தின் நடித்திடுமோர்
பருமயில் கடவும் பவளக் குன்றே
பால சமுத்திரமே

உடலுறு முயிர்கட் கினிதரு ளமுதம்
உருட்டுக சிறுதேரே
உமையொரு பாகற் கருமைக் குமரன்
உருட்டுக சிறுதேரே. 101

திருப்போரூர் முருகன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று



# திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்

## கவிராச பண்டாரத்தையா

### காப்பு

வெள்ளைக் கணபதியை வேய்ந்தசடி லப்பெருமான்
பிள்ளைக் கணபதிதாள் பெற்றுரைத்தேன்—வள்ளியுடன்
வந்தகந்தன் காவி மலைபோல வாழவருள்
தந்தகந்தன் பிள்ளைத் தமிழ்.

### அவையடக்கம்

பிள்ளைத் தமிழாம் பெரியபசுஞ் செந்தமிழை
வெள்ளைத் தமிழாய் விளம்பினேன்—எள்ளுறுமென்
புன்மொழியைக் காட்டிப் புனிதத் தமிழ்ப்புலவோர்
நன்மொழியை மேம்படுத்த நான்.

## 1. காப்புப்பருவம்

### திருமால்

சீரார் கமலத் திருஈன்ற
தெய்வப் பிடியுங் குறக்கொடியுஞ்
சேரும் பெருமாள் வேற்பெருமாள்
செந்திற் பெருமாள் மயிற்பெருமாள்

காரார் குடுமித் திருமலையிற்
கருணைப் பெருமாள் குகப்பெருமாள்
கந்தப் பெருமாள் முத்தொழிலுங்
காக்கும் பெருமாள் தனைக்காக்க

பார்ஆ யிழையைத் திருமகளைப்
பாரப் புயத்தில் திருமார்பிற்
பதிக்கும் பெருமாள் வேயின்இசை
பாடும் பெருமாள் பசும்பெருமாள்

ஆரா அமுதங் கடைந்தமரர்க்
கருளும் பெருமாள் திகிரிசங்கம்
அணியும் பெருமாள் முதலைதடிந்
தானை காத்த பெருமாளே. 1

## சிவபெருமான்

### வேறு

வனநதி அறுகு சிறுபிறை இதழி
வளர்சடை முடியின் மீதினில் சேர்த்திய
வரதனை நடன பரதனை இமய
மடமயில் தழுவும் வாமனைப் பாற்கடல்
வரமுனி மதலை அழஅருள் புரியும்
மழவிடை உடைய பாகனைக் கார்க்கடு
மணிமிட றொளிரும் அமலனை நமனை
வதைசெய்த சரண மாமலர்ச் சேர்ப்பனை

இனமுனி வரர்கள் தவமுயல் இடமு
மினியபண் மொழியும் ஆரணக் கூட்டமும்
இருநில வனிதை முலையணி தரளம்
எனவிழும் அருவி நீர்உகத் தூற்றிய
இயல்பெறு வளமை பழமையும் உடைய
எழில்வரை எழிலி தோயுமுக் கோட்டினில்
இலகிய பலவின் நிழலமர் கடவுள்
எழுதிய சபையில் ஈசனைப் போற்றுதும்

அனகனை எமது குலகுரு பரனை
அருள்பெறும் அமரர் சேனையைக் காத்துமுன்
அடையலர் மனது படபட படென
அடலயில் நடவு வீரனைக் கார்த்திகை
அழகிய புளக களபமென் முலையின்
அமுதுணும் இளைய பாலனைத் தீர்த்தனை
அருமறை முடியில் நடமிடு பரனை
அறுமுக குகவி சாகனைத் தேர்ப்பொலி



தினகரர் ஒருபன் னிருவரும் ஒளிகள்
திகழ்உடு பதியும் ஏகுதற் கேக்குறு
சிகரியின் அழகு சினகர மருவு
திருமதி ளெயிலின் மேற்றிசைப் பாற்படு
தெரிவையர் எழுபெண் அரசியர் தமது
திருவருள் புரியும் வாவியிற் பூத்திடு
தினமொரு குவளை மலர்தனை உதவு
திருமலை விசய வேலனைக் காக்கவே. 2

## உமையம்மை

### வேறு

நிறம்வ ளர்த்திடு நீலிசொற் பாத்தரு
நிமலி மட்டவிழ் தாமரைத் தாள்துணை
நினைப வர்க்கருள் கோமளக் கோல்தொடி
நிலைமை பெற்றிரு நாழிநெற் சேர்த்துல

கறம்வ ளர்த்தவள் தூயபொற் கோட்டிம
அசல புத்திரி யாமளை கார்த்திகை
அருளு டைக்குழல் வாய்மொழிப் பார்ப்பதி
அடியி ணைப்புகழ் தானெடுத் தேத்துதும்

மறம்வ ளர்த்தநி சாசரச் சீற்றர்கள்
வலிதொ லைத்தசு ரேசனைத் தாக்கியோர்
மயில்ந டத்திய வீரனைச் சூர்ப்பகை
மறவ னைக்கதிர் வேலனைத் தேக்குறு

திறம்வ ளர்த்தசி வாகமப் பாற்கடல்
தனைம தித்ததி லேஎடுத் தூற்றிய
தெருள்ஒ ழுக்கமு தீசனுக் கூட்டிய
திரும லைக்குரு நாதனைக் காக்கவே. 3

## உச்சிப்பிள்ளையார்

### வேறு

சுரரை வளைத்துத் தலைமிசை குட்டித்
தொகைலோகக் காப்பினர்
தொழிலை அடக்கிக் கொடுமை செலுத்தித்
தொலையாமைத் தேக்கொடு

செருவில் எதிர்த்துப் பொருத தயித்தியத்
திறலாளைப் போர்ப்புரி
திருமலை யுச்சிக் கணபதி பற்பச்
சிறுதாளைப் போற்றுதும்

அரவுபிடித்துச் சடைஅணி கொற்றத்
தரனார்கண் தீப்பொறி
அறுவகை முற்றிச் சரவண முற்றிட்
டடியாரைக் காத்தொரு

பிரணவ நுட்பப் பொருளை விரித்துப்
பிரமாவைத் தாக்கிய
பிரச மலர்க்கண் குவளை மலைக்குள்
பெருமாளைக் காக்கவே.

## திருமகள்

### வேறு

இச்சைக் கிசைந்த வரங்கொடுக்கும்
எங்கள் குவளைத் திருமலையை
ஏத்தும் அடியார் வீட்டகத்தில்
எங்கோன் மாமன் மார்பகத்திற்

பச்சைப் பசுந்தாள் செங்கமலப்
பனிப்பூம் பொகுட்டில் குடியிருக்கும்
பவளத் துருவத் திருமடந்தை
பாதத் துணையைப் பணிந்திடுவாம்

கொச்சைக் குறவர் குலச்சிறுமி
குமரி குறத்தி பசுநிறத்தி
கொங்கைக் குவட்டிற் குடைந்துமற்றக்
குவட்டுக் கிரியைத் தகர்த்துழக்குஞ்

செச்சைப் புயபூ தரத்தழகன்
செழிக்கும் திருச்சண் முகத்தழகன்
செவ்வேல் அழகன் பண்பைநகர்ச்
செவ்வேள் பனுவல் தழைக்கவே. 5



## நாமகள்

உதரத் திடையின் உலகொடுக்கி
உமிழ்ந்தோன் இருவர்க் கொருகொழுநன்
உந்தி மலரின் வந்துதித்த
ஒருநான் முகத்தன் திருமனையாள்

அதரச் சிவப்பி குழல்விழிகள்
அழகு கறுப்பி உடலிடம்பூண்
ஆடைமுறுவல் வெள்ளைநிறத்
தம்மை வாணி பதம்பணிவாம்

மதுரக் கவிதை மழைபொழியும்
வரத அருண கிரிமேகம்
வழங்குந் தமிழ்மா ரியில்தோய்ந்து
வளர்பன் னிருபொன் வரையின்மிசை

கதிர்நித் திலமும் செம்மணியும்
கடம்பும் குரவும் வள்ளிகொங்கை
களபப் புழுகும் கமழ்ந்திலகும்
கந்தன் கவிதை செழிக்கவே. 6

## பிரமதேவன்

படிஏழுலகும் படைத்துயிர்க்கும்
பலவேறுருவம் படைத்ததிலே
பரிந்துமுகபே தமும்படைத்துப்
பாராய்பனுவ லாட்டியென்று
பகர அதற்கு நிகராக

முடியாவாணி அவன்படைத்த
முகங்கள்தோறும் இருந்திருந்து
மொழியும்பேதங் காட்டமின்னை
முழுதுமகிழ்ந்து நாவில்வைத்த
முளரிப்பிரமன் சரண்பணிவாம்;

வடியாக்கடலைச் சிறைபுரிந்து
மழலைச்சீதை சிறைமீட்ட
மாயன்மருகன் வச்சிரத்தால்
மலையின்சிறையைத் தடிந்தவிண்ணோன்
மதலைசிறையைத் தீர்த்தசுரக்

கொடியோனுடற்கே நான்குசிறை
கொடுத்துநடத்திக் கொடியுயர்த்த
குமரக்கடவுள் திருமலையில்
குடிகொண்டிருந்து விளையாடுங்
குரிசில்பனுவல் தழைக்கவே. 7

**காளி**

வேறு

பண்அம் பணத்திதிரி சூலிகௌ மாரியொரு
பாலைக் கிழத்திநீலி
பச்சைப் பசுங்கமாரி கொற்றப் பெரும்படைப்
பசாசுவே தாளம்உடையாள்

கண்ணன் திருத்துணைவி கைச்சக் கரக்கௌரி
கல்வா கனக்கபாலி
கதிகொடுத் தாளும்என் திருமலைக் காளிசெங்
கமலசர ணம்பணிகுவாம்

வண்ணம் கறுத்ததிரு மேனியொரு பாதியின்
வடிவக் கருங்கடலின்நீர்
மட்டுமிஞ் சிப்பெருகி அப்புறச் செம்மையில்
வழிந்தொழுகும் வாறிதெனவே

கண்ணுந் திருக்கந்த ரத்தில்விடம் வைத்தருளும்
நகர்ஈசர் மார்பிலணியும்
நாமவெள் ளைப்பொடிப் புழுதிஆ டுங்குமர
நாயகன் கவிபெருகவே. 8

**வள்ளிதேவயானை, கன்னிமார், சத்தமாதர்கள்**

வேறு

தருவிற் கிறையும் குறவர்களும்
தவளக் களிறும் செம்மானும்
தலைமை பெறவந் துதித்தருளுந்
தாய்மார் இருவர் சரண்போற்றி



மருவிட் டொழுகும் பைங்காவி
வாவிக் கரையின் மேவுகன்னி
மார்கள்எழுவர் சத்தகுல
மாதர் இவர்கள் சரண்பணிவாம்

துருவைப் பரியிப் பேரடலைத்
துணைவன் கரத்தால் துடைத்தேறின்
சூரைத் துடைத்தங் கவன்செனனத்
துயரைத் துடைத்துச் சொல்அவுணர்

கருவைத் துடைத்தோர் அயிராணி
கண்ணீர் துடைத்து மெய்யடியார்
கவலை துடைத்த திருமலையிற்
கந்தன் கவிதை விளங்கவே. 9

**வீரபத்திரர், வயிரவர், சாஸ்தா, அட்டவசுக்கள், ஏகாதச ருத்திரர், அசுவினி தேவதைகள், சந்திரன், ஆதித்தர், பதினெண்கணம், சப்தரிஷிகள்**

வேறு

வட்ட நிலத்தொ டடுக்குல கத்துள
வஞ்சம் ஒழிந்திடவே
மலைதக ரும்படி மயில்நட வுஞ்சிறு
மதலையை எந்தையையே

சிட்டர்கள் உத்தம பத்தி மிகுத்திடு
சிந்தை மகிழ்ந்திடவே
திருமலை யின்குவ டதனில் உறைந்தருள்
சிவசுத கந்தனையே

துட்டன் மகத்தை உழக்கிய விக்ரம
தும்மி நிரம்பியசீர்
தொலைவறு திண்திறல் வயிரவர் இம்பர்கள்
தொழுமணி கண்டனுமே

அட்ட வசுக்கள் உருத்திரர் மருத்துவர்
அம்புலி செங்கதிரோன்
அருள்பதி னெண்கண முனிவர் புரந்தரன்
அமரர் புரந்திடவே. 10

## 2. செங்கீரைப்பருவம்

மனத்தினில் நினைத்துருகும் உத்தமர் உளத்தின்மிசை
மங்காத வேதமுடிமேல்
மயிற்பரி திருப்பொலி புறத்தென தகத்தினொடு
வன்போரின் மேடமிசையே

புனற்சடை முடிக்கடவுள் அற்புத மடிக்குள்உமை
பொங்கார மார்புதனில்நீ
பொருப்பினை முதற்சிறை அறுத்தவிச
யத்தினொடு
பொன்றாத தேவர்தலைமேல்

அனத்தினை உயர்த்தவன் முடித்தலை யினிற்சுரர்கள்
அன்பான வாறுதலைமேல்
அனிச்சமும் உருத்திய பதச்சிறு குறச்சிறுமி
அம்பாகு நீலவிழியாள்

தினைக்கதிர் வனத்திலும் மலர்ச்சரணம் வைத்தகுக
செங்கீரை ஆடியருளே
திருக்கிளரும் உற்பல மலர்த்திரு மலைக்குமர
செங்கீரை ஆடியருளே. 11

கூராடும் வேல்விழிகள் குழையில் ஆடக்குழைகள்
கொண்டாடு தோளில்ஆடக்
குறுவியர்வு திருநுதற் சிலையில் ஆடச்சுட்டி
கூடத்து வண்டாடவே

வாராடு பொன்மார்பின் மாலைஆ டத்தரள
மாலையொடு சேலைஆட
மலராடு செங்கைதனில் வெள்வளைகள் ஆடநின்
மனதுநின் றூசல்ஆடத்

தாராடு மைக்குழல் சரிந்தாட வல்லிஇடை
தள்ளாட நகையாடியே
தளிராடு கற்பகச் சோலையிற் பந்தாடு
தனியானை முலையானைமேற்



சீராடு மான்மதச் சேறாடும் ஒருகளிறு
செங்கீரை ஆடியருளே
திருக்கிளரும் உற்பல மலர்த்திரு மலைக்குமர
செங்கீரை ஆடியருளே. 12

மங்காத கற்பகக் காவினில் செந்தினையின்
வனசர மிசைப்பிறந்து
வண்மைச் செழுஞ்சர வணப்பொய்கை நதிசரமும்
வாழவே தவமுயன்று

பொங்கார முங்குரவும் நீபமுஞ் செச்சையும்
பூங்குவளை யும்கோடலும்
பூத்துப் பொலிந்தழகு வாய்த்திலகு பன்னிரு
புயக்கிரி சரத்தைமேவுங்

கொங்கார் கதுப்பிளங் குஞ்சரியும் மஞ்சரிக்
கோதைக் குறப்பிடியுமே
குணபேத மில்லா திடத்தினும் வலத்தினுங்
கூடப் பிணைக்கநடுவோர்

சிங்கார வச்சிரத் தூண்போல் இருப்பவன்
செங்கீரை ஆடியருளே
திருக்கிளரும் உற்பல மலர்த்திரு மலைக்குமர
செங்கீரை ஆடியருளே. 13

கொந்துகமழ் சரவணப் பொய்கையின் மருங்கில்இரு
கோட்டொருவெள் ஏற்றிலேறிக்
கூர்மழுக் கையனும் தையலும் திருவுளங்
கூடக் கசிந்துருகியே

வந்துமக வாறுருவும் ஒருருவம் ஆகவே
மங்கைபார்ப் பதிஎடுத்து
மடியில்வைத் துச்சியின் முகந்துபுற நீவிமணி
வாய்தோறும் முத்தமிட்டே

இந்துமுக மண்டலத் துமைமங்கை கொங்கையின்
இழிந்தொழுகு பாலைவள்ளத்
தேந்திக் கொடுக்கக் குடிக்கும்அப் போதுபனி
ரண்டுகடை வாயின்வழியே

சிந்திவழி கின்றதென முத்தணியு மார்பனே
செங்கீரை ஆடியருளே
திருக்கிளரும் உற்பல மலர்த்திரு மலைக்குமர
செங்கீரை ஆடியருளே. 14

கால்பெயர்த் தசைநடைக் கொண்டுநளி னத்திலை
கறித்துக் குதட்டுமேதி
கன்றுக் கிரங்கிக் கனைத்துநீர் விட்டுமுற்
கால்வாரி நின்றுமுலையின்

பாலுகுத் திடஅது பரந்தோடி முப்பழப்
பங்கச் செழுங்கழனியிற்
பாய்ந்தொழுக அதனிடை கிடந்து சேறாடும்
பருங்கரும் பகடுபூட்டிச்

சாலடித் துழும்உழவர் மார்பினில் தோளினில்
தலைதொறும் முகங்கடோறும்
தளிரடிப் பிடிநடைச் சாதிக் கடைசியர்கள்
தங்கள்நய னங்கள்போலச்

சேல்குதிக் குந்திருப் பண்பைநக ராதிபதி
செங்கீரை ஆடியருளே
திருக்கிளரும் உற்பல மலர்த்திரு மலைக்குமர
செங்கீரை ஆடியருளே. 15

வேறு

இனமுனி வரர்கள் குருமுனி குருபரன்
என்றே கொண்டாடும்
இவைஅவ ரொடுபொரு பகைநிசி சரர்பதி
எங்கே என்றேகி

மனவலி புயவலி படைவலி தவவலி
மஞ்சா ருஞ்சூரன்
மதலைகள் துணைவர்கள் கிளையுடன் அவனுடல்
வன்பா ரம்தீர

நனைமலர் சிதறியும் அரிஅயன் முதலினர்
நண்போ டும்பாட
நகைமணி வளையணி கரதல வயிறொடு
நம்பா சங்க்ராமா



தினகரர் விழியையும் அருள்செயும் ஒருமணி
செங்கோ செங்கீரை
திருமலை அறுமுக சரவண பவகுக
செங்கோ செங்கீரை. 16

பசைஅறு நெஞ்சுடை அவுணர் பெரும்படை
பஞ்சாய் நொந்தேழு
பரவையின் மிசைபுக அலைகெட வடகிரி
பந்தாய் நின்றாட

விசையின் நொறுங்கிய திகிரி நெடுங்கிரி
விண்டே செந்தூளாய்
விடவிட அரவொடு கமடமு மசைவுற
வெந்தீ யும்காலும்

இசைபெறு மண்புனல் வெளியுடன் ஐந்தெனும்
எண்பூ தம்சோர
இமையவர் முனிவர்கள் துயரொடு மகிழஇ
ரண்டோ டொன்றேழு

திசைசுழ லும்படி மயில்நட வும்பதி
செங்கோ செங்கீரை
திருமலை அறுமுக சரவண பவகுக
செங்கோ செங்கீரை. 17

கொந்து கமழ்ந்திடு குஞ்சியு மூவிரு
குலமணி மௌலிகளும்
கோகந கங்களொர் ஆறு மலர்ந்தன
குளிருந் திருமுகமுஞ்

சந்த மணங்கமழ் கந்தர மும்கிரி
தண்டிய திண்புயமும்
தனிஅயி லும்கர தலமும் இலங்கிய
சந்துறு தடமார்பும்

தொந்தி தருஞ்சிறு பண்டியும் மேலணி
சுந்தர அரைஞாணும்
துகிலும் பரிபுர பதமும் கொடுதுயர்
தொலையும் படிஅடியார்

சிந்தையின் நின்று நடம்புரி யுங்குக
செங்கோ செங்கீரை
திருமலை அறுமுக சரவண பவகுக
செங்கோ செங்கீரை. 18

மகரக் கடலிற் கடுவிட முண்டவன்
வளையா வலியாலு
மாயக் காலுக் குடைபட் டுருளா
மணிமுடி பெறலாலும்

நிகரொப் புவமை இலாத சுதந்தர
நீவிளை யாடியநாள்
நெறிபட் டடிபட் டுன்னால் நிலைகுலை
யாதுவி ளங்கியதால்

தகரக் கருமைக் கோதைஅ ரம்பையர்
தயவுறு கொழுநருடன்
தடவட வரையினும் இவைபெரி தெனவே
தங்கி இருந்தேகுஞ்

சிகரிப் பண்பைத் திருநக ரதிபதி
செங்கோ செங்கீரை
திருமலை அறுமுக சரவண பவகுக
செங்கோ செங்கீரை. 19

காயொடு பூவொடு கனிஉறு மாவு
கண்டம்இ ரண்டாகக்
கண்டகர் நெஞ்சம் உலைந்துகு லைந்து
கலங்கி மலங்கிஅழப்

பேயொடு காளி நடஞ்செய உம்பர்
பிழைத்தோம் என்றாடப்
பேருல குய்ந்து சராசர கோடி
பிராணி தழைத்தாடத்

தாயொடு தமரும் இலாத அதீதன்
தழல்விழி வழிதோன்றித்
தண்டிய அண்டம் நிரம்பிய காலின்
தலைஒரு வாகனமாய்த்



தீயொடு நீரொடும் வரும்இடி ஏறே
செங்கோ செங்கீரை
திருமலை அறுமுக சரவண பவகுக
செங்கோ செங்கீரை. 20

## 3. தாலப்பருவம்

பண்டைக் கொடிய தீவினையும்
பழிக்குங் குலமும் நானெனும்ஓர்
பகையும் தீர்ந்திட் டிம்மையிலே
பரிந்து மனது குழைந்துருகுந்

தொண்டைத் தொகையி னுடன்கூடித்
தொனிக்க இனிக்குந் திருப்புகழைச்
சொல்லித் துதிக்க நல்இயலாந்
தொலையா வாழ்வு கொடுத்தருளி

அண்டத் திறைவன் பொன்முடிக்கும்
அமலக் கமலன் மணிமுடிக்கும்
அமரர் முனிவர் தலைகளுக்கும்
அணியப் பணியக் கிடையாத

தண்டைப் பதத்தை எனக்களித்த
தலைவா தாலேர் தாலேலோ
தாமக் குவளைத் திருமலைவித்
தகனே தாலோ தாலேலோ. 21

மையற் குறவர் குறத்தியர்கண்
மருளு மடம்போய்த் தெருளெய்த
மான்கள் பசியும் மனப்பயமும்
மறந்து சுரந்த மடிப்பாலைப்

பையப் பதுங்கும் புலிப்பிணவின்
பறழுக் கருத்திக் கொலைமறந்த
பாரப் புலிதன் முலைப்பாலைப்
பன்றிக் குருளைக் கினிதூட்டக்

கையில் கவணில் பதித்தமணிக்
கல்லும் உருகக் கிளிகள்தினை
கவரா திருந்து கசிந்துருகக்
கனிவாய் ஆலோ லம்புகலும்

தையற் குறத்தி மனம் உருக்குஞ்
சமர்த்தா தாலோ தாலேலோ
தாமக் குவளைத் திருமலைவித்
தகனே தாலோ தாலேலோ. 22

நீடுங் கருணைத் திருவருளால்
நீதூ தனுப்ப விடைவாங்கி
நெடிய கடலைக் கடந்திலங்கை
நீரில் அழுந்தக் குதித்தவுணர்

கூடும் பதிம கேந்திரத்தின்
குணபால் காக்குங் கயமுகனைக்
கொன்று சயந்தன் சிறைச்சாலை
குறுகிக் குகஉன் வரவுரைத்துச்

சூடு மகுடச் சூரன்முன்போய்த்
தூது பகரச் சூரன் எதிர்
சொல்லிச் சீற வல்லையிலோச்
சுடர்க்கோ புரத்தால் அயன்கொலுவைச்

சாடும் வீர வாகுதுணைத்
தமையா தாலோ தாலேலோ
தாமக் குவளைத் திருமலைவித்
தகனே தாலோ தாலேலோ. 23

செப்பா மோனப் பரமசுகச்
செங்கைக் கருநெல் லியங்கனியே
திருக்கார்த் திகைபார்ப் பதிமுலைப்பால்
தேக்கும் ஒருசெம் பொற்குடமே

கொப்பார் குழைச்சி குறத்திகொங்கைக்
குவட்டில் அணியுஞ் செம்மணியே
குளிருஞ் செழுங்கங் கையில்பிறந்த
கோமே தகமே கூர்வடிவேல்

அப்பா அரசே உமைமடந்தைக்
கருமைக் குருந்தே கண்மணியே
அமரர் விருந்தே யுலகினுயிர்
அனைத்தும் புரக்கும் அருமருந்தே



தப்பா விரதப் பெருமான்சந்
ததியே தாலோ தாலேலோ
தாமக் குவளைத் திருமலைவித்
தகனே தாலோ தாலேலோ. 24

கன்னங் கரிய மால் இடத்தே
கலந்து விளங்குந் தாணுவின்மேல்
கண்ணில் உதித்தோர் ஆறுருவாய்க்
கால்மே லேறிக் குளம்புகுந்து

மன்னும் உயிருக் குயிராகி
வடிவொன் றாகிப் பலமுகமாய்
வளர வயலுஞ் சோலையினும்
வாவிதோறும் விளையாடி

அன்னம் இருபால் இருக்கஇசைந்
தார்க்கும் வேலை நடத்திமகிழ்ந்
தன்பு புரிந்து பரிந்துபுரிந்
தடுத்தோர் பரவச் சூர்தடிந்துன்

தன்னைப் பொருவும் அனுமநதித்
தலைவா தாலோ தாலேலோ
தாமக் குவளைத் திருமலைவித்
தகனே தாலோ தாலேலோ. 25

குமரன் சரணம் சரணமென்று
கூறிச் சுரர்கள் சரண்புகுதக்
கொடியோர் மனத்தில் பயம்புகுதக்
கொலையும் களவும் கெடிபுகுத

அமரர் உலகம் குடிபுகுத
அவுணர் பதியில் எரிபுகுத
அடையார் உயிர்கள் சொர்க்கமுடன்
அழல்வாய் நரகம் போய்ப்புகுதத்

துமிர்த அலையா ழியில்அவுணர்
சோரிக் கடல்போய்ச் சுரந்துபுகுத்
துங்க வீர வாகுசொன்ன
சொல்லுப் புகுதாச் சூரன்நெஞ்சில்

சமர வடிவேல் புகளறிந்த
சதுரா தாலோ தாலேலோ
தாமக் குவளைத் திருமலைவித்
தகனே தாலோ தாலேலோ. 26

வேறு

மதமலை துணைவா குறமகள் கணவா
வானோர் கோமானே
மலைமகள் புதல்வா அறுமுக முதல்வா
வாகா மேகாரா

பதபரி புரனே முகவசி கரனே
பாலா சீராளா
படைபொர அசையா ரணமுக விசையா
பாராள் சூரேறே

சிதமுறு குழகா அதிசய அழகா
தேனே பாலாறே
சிவகுல திலகா அவகுல கலகா
தேவே சேயோனே

சதமகன் மருகா திருமலை முருகா
தாலோ தாலேலோ
தமிழறி புலவா தனிஅயில் வலவா
தாலோ தாலேலோ. 27

வேறு

இந்து நெடுஞ்சிலை சந்திர திலகம்
இரண்டும் உரிஞ்சிடவே
இந்துவொ டுஞ்சிறு தென்றல் வருந்தொறும்
இளகி நறுஞ்சேறாய்க்

கொந்து கமழ்ந்து வழிந்ததை ஆவின்
குழுவிடும் எருவெனவே
கூடைகள் தோறும் எயிற்றியர் வாரிக்
குடில்மெழு கக்குறவர்



செந்தினை யோடு கருந்தினை அள்ளிச்
சிதறு புனங்கள்தொறுஞ்
செல்உகு நீரான் ஐவனம் விளையுஞ்
செய்தொறும் உரம் இடவே

சந்த மணங்கமழ் திருமலை முருகா
தாலோ தாலேலோ
தமிழறி புலவா தனிஅயில் வலவா
தாலோ தாலேலோ. 28

தொண்டர் தொழுந்தொறும் இன்ப மிகுந்துதி
சொல்லிய நல்ஒலியும்
தும்புரு நாரதர் இங்கித வீணை
நிடும் ஏழிசையும்

அண்டர் அரம்பையர் மங்கல கீதம்
அறைந்திடு துழனிகளும்
அந்தர துந்துமி யும்குட முழவும்
அதிர்ந்திடும் ஓதைகளும்

மண்டிய வன்புடை முனிவர் சிவாகம
வகையும் சதுமறையும்
வாய்க்கும் புலவர் செவிக்கும் இனிக்க
வடித்த திருப்புகழின்

தண்டமி ழின்தொனி தருதிரு மலையா
தாலோ தாலேலோ
தமிழறி புலவா தனிஅயில் வலவா
தாலோ தாலேலோ. 29

கங்குலும் மங்குலும் ஒருரு வாகிக்
கானில் நடந்ததெனுங்
காட்டெரு மைக்குலம் வேட்டுவ ரேனல்
கதிரை மிகப்பருகிக்

கொங்கவிழ் குவளை நறுஞ்சுனை நீர்கள்
குடித்து மதர்ப்புடனே
குகரக் குடுமி முழைக்குள் விடுத்த
குழக்கன் றைத்தேடிச்

செங்கண் மருண்டு கனைப்ப முலைப்பால்
சிந்தி வழிந்தோடிச்
சேரந னைந்து வெளுப்புற லாலும்
தெய்விக நீராலும்

சங்கரன் மலைநிக ருந்திரு மலையா
தாலோ தாலேலோ
தமிழறி புலவா தனிஅயில் வலவா
தாலோ தாலேலோ. 30

## 4. சப்பாணிப்பருவம்

அடித்துணை நினைப்பவர் மனத்திருள் விளக்க
அனற்பூ டுதித்தசுடரே
அகத்தினின் மிகக்கிருபை செனித்தருள் தொடுக்குமயில்
அப்பா இனிக்கும் அமுதே

தொடிக்கைகள் சிவக்கம ழுலைக்குரல் பிறக்கநிறை
சொற்பாக முற்றபுலவோர்
துதித்திடு புயக்கிரி துளக்குற இதழ்க்குலவு
துப்பூடு முத்தொளிரவே

மடப்பிடி நடைத்துடி இடைக்குட முலைக்குமரி
மட்டூறி நெய்த்தகுழலாள்
மதித்திரு முகத்தினள் குறச்சிறுமி மிக்கவடி
வப்பாவை மைக்கண் எனவே

தடத்தினில் முளைத்தகுவ ளைத்திரும லைக்குமர
சப்பாணி கொட்டியருளே
தடக்கிரி பொடிப்பட அயிற்படை விதிர்த்தகுக
சப்பாணி கொட்டியருளே. 31

வேய்தொறும் எயிற்றியர்கள் தொட்டில்கட் டிச்சிகியின்
மென்பீலி யுள்விரித்து
வெம்முலை அருத்திவாய் முத்தாடி மதலைகளை
மெல்ல அதன் மேல்வளர்த்தி

நேயமுறு கொழுநருடன் மலைவிட் டிறங்கிவளர்
நீள்சோலை யில்புணர்ந்து
நினைவழிய உடைகுலைய மனதுபர வசம்உருகி
நித்திரை தெளிந்துவரும்முன்



தூயபூ ரணமதி தவழ்ந்தேறி ஏறியத்
தொட்டிலின் கிட்டஅணுகித்
துண்ணென விழித்துக் குறச்சிறார் மழலைமொழி
சொல்லிவிம் மிப்பொருமியே

தாய்முகம் எனக்கண்டு மகிழ்திரு மலைக்குமர
சப்பாணி கொட்டியருளே
தடக்கரி பொடிப்பட அயிற்படை விதிர்த்தகுக
சப்பாணி கொட்டியருளே. 32

இருநில வரம்பையொரு குடைதனில் அமைத்தர
சியைந்திடு பெருஞ்செல்வமும்
இயலாதி முத்தமிழ்ச் செஞ்சொல்முத லானபதி
னெட்டுவகை யில்பாடவும்

மருமலர் உகுத்துலவை குலவுதரு விற்சசிதன்
வனமுலை திளைத்த மார்பும்
வாலமா மதிசூடி பாலலோ சனம்உறா
மன்மதன் விரும்பும் அழகும்

அருமறை விரித்துரைசெய் சதுமுகமும் வெற்றிபுனை
ஐம்படை தரித்தகரமும்
அம்புயக் கண்களும் பரமபத முத்தியுடன்
அத்தனையும் அன்பர் பெறவே

தருபனிரு கட்கருணை புரிதிரு மலைக்குமர
சப்பாணி கொட்டியருளே
தடக்கிரி பொடிப்பட வயிற்படை விதிர்த்தகுக
சப்பாணி கொட்டியருளே. 33

வண்டுமொய்த் திலகுவெண் கேதகைப் பூவினை
மடப்பெடைக் குருகிதெனவே
வண்மைப் பெருஞ்சேவ லங்குருகு கண்டிரு
மணிச்சிறகி னால்அணைத்துக்

கொண்டுதுயி லப்பேடு பார்த்துப் பதைத்துக்
கொதித்துக் கொதித்துவிம்மிக்
கோபமுற் றங்கங் குழைந்தேகி உம்பர்தங்
குளிர்பொதும் பரின்ஒதுங்க

அண்டருல கத்துள அரம்பையரும் ஆடவரும்
அதிசயம் இதென்றுகாண
அச்சேவல் பின்தொடர்ந் தோடியூ டற்குறைகள்
அகலப் புணர்ந்து மீளுந்

தண்டலைப் பண்பைப் பதித்திரு மலைக்குமர
சப்பாணி கொட்டியருளே
தடக்கிரி பொடிப்பட வயிற்படை விதிர்த்தகுக
சப்பாணி கொட்டியருளே. 34

கந்தமிகு முண்டகக் கண்ணனும் கருணைஎண்
கண்ணனும் உடற்கண்ணனும்
கதிதனை வழங்குமுன் திருமுன்பு வந்துசெங்
கதிர்வேல் புகழ்ந்திரந்து

சுந்தரக் குங்குமக் கொங்கைஒரு மங்கைநஞ்
சுதையைவேட் டருளுகெனவே
சுடர்முடி துளக்கிவெகு மகிழ்வுடன் நகைத்தருள்
சுரந்துள மிசைந்துமறுநாள்

அந்தரத் தமரர்முசு குந்தன்முதல் இம்பர்கள்
அருந்தவர் பெருந்திசையினோர்
அணிமணக் கோலத்தின் அதிசயம் கண்டுய்ய
அப்பரங் குன்றின்மிசையே

தந்தியை மணந்தகுவ ளைத்திரு மலைக்குமர
சப்பாணி கொட்டியருளே
தடக்கிரி பொடிப்பட வயிற்படை விதிர்த்தகுக
சப்பாணி கொட்டியருளே. 35

வேறு

வம்பொன்றுஞ் சந்தொடு குரவு
மணத்த புயக்காரா
மஞ்சும்துஞ் சுங்குல கிரியை
மடித்த வயிற்காரா

அம்பஞ்சுங் கண்பெறு குறமகள்
அத்தி நயக்காரா
அன்பும்பண் புங்கொடு தொழும்அடி
யர்க்கெளி மைக்காரா



செம்பைம்பொன் தந்திடு மொழிதிகழ்
சித்ர மயிற்காரா
செம்பொன்கொஞ் சுந்திரு மலைவளர்
செக்கர் நிறக்காரா

கும்பன்கண் டின்புறு குருபர
கொட்டுக சப்பாணி
குனமிறங்குந் தங்குஞ் சிவசுத
கொட்டுக சப்பாணி. 36

வேறு

துட்ட அரக்கர்கள் பட்ட பிணக்குவை
சுற்றுக டற்பூமி
தொக்கு மறைக்கவி ழிக்கன லைக்கொடு
சுட்டட லைப்பூதி

இட்டுல கத்துள சட்சம யத்தரும்
இச்சம யத்தாக
இப்படி யுத்தம் விளைத்த களத்தில்
எதிர்த்து மறுத்தோடி

நெட்டை மரத்தியல் பைக்கொ டுரத்தொடு
நிற்கும தச்சூரன்
நெட்டுரு வத்துடல் பட்டுரு வத்தசை
நெய்த்தவு டற்சோரி

கொட்ட அயிற்படை தொட்ட திறற்குக
கொட்டுக சப்பாணி
குக்குட மெய்த்துவ சத்திரு மலைமுகில்
கொட்டுக சப்பாணி. 37

அளவில் அரக்கர்கள் கதறு தொனிக்குரல்
அசனி இடித்திடவே
அங்கவர் செம்மணி யணிமுடி சிந்தி
யழற்பொலி மின்னோட

இளமதி ஒத்தில கெயிறெனு மாம்பிமண்
எங்கும் உறச்சோரி
இந்திர கோப மலிந்திட வேபுவி
யில்அவிர் வில்லிடவும்

வளமை ஒழித்திட அழுத அரக்கியர்
மண்டூ கம்போல
வானுல கென்னும் வயிற்பயிர் உய்ந்திட
வன்தூ ரனகால்வாய்

குளமுடை யச்சர மழைபொழி புயலே
கொட்டுக சப்பாணி
குக்குட மெய்த்துவ சத்திரு மலைமுகில்
கொட்டுக சப்பாணி. 38

துடித்த தரத்தைய துக்கியு றுக்கிய
சுழல்கண் தீயவுணர்
சோரிகு டைந்துகு ளித்திகல் வெற்பைத்
துண்ணென நீறிட்டுப்

பிடித்தக ரத்திரி சூலிஇடாகினி
பேழ்வாய் வெம்பூதம்
பேய்நரி கழுகுப ருந்துக ருங்கொடி
பெரிய விருந்தாக

வடித்தஉ வர்த்ததி பாகொடு பால்நெய்
மதுப்புனல் ஏழ்கடலும்
மாறுப டாமல் அளாவிநி ணத்தொடு
மாவடு வுங்கூட்டிக்

குடித்து மதத்தஅ யிற்படை யானே
கொட்டுக சப்பாணி
குக்குட மெய்த்துவ சத்திரு மலைமுகில்
கொட்டுக சப்பாணி. 39

நெஞ்சுகு ழைந்துகு ளிர்ந்தப கீரதி
நீராட் டிப்போற்றி
நீறொடு திலகமொர் ஆறுசெ ழும்பிறை
நெற்றிதொ றுந்தீட்டி

அஞ்சனம் அன்பொடு கண்களில் எழுதியோர்
ஐம்படை யும்பூட்டி
அரைவடம் ஆழிசி லம்புகு தம்பைஅ
ணிந்துமு கம்பார்த்து



வஞ்சிதி கம்பரி கொங்கைசு ரந்தும
கிழ்ந்தும கிழ்ந்தூட்டி
வாய்தொறு முத்திம டிக்குள் இருத்திமென்
மழலைச் சொற்கேட்டுக்

கொஞ்சிம கிழ்ந்தருள் பிள்ளைப் பெருமாள்
கொட்டுக சப்பாணி
குக்குட மெய்த்துவ சத்திரு மலைமுகில்
கொட்டுக சப்பாணி. 40

## 5. முத்தப்பருவம்

நித்தங் குவளைச் சுனைஆடி
நெடுஞ்சோ லையிற்பூக் கொய்துகல்லும்
நெகிழச் சிலம்பின் எதிர்கூவி
நெடிய வேங்கை நிழல்மேவி

அத்தஞ் சிவக்க அம்மனைபந்
தாடிக் கழங்கும் எடுத்தாடி
அரத்த மணிமின் போலூசல்
ஆடி ஆடி உடலிளைத்துச்

சித்த மதனுக் கிளையாத
செவ்வாய்க் கருங்கண் எயிற்றியர்கள்
சிற்றில் விளைத்து விளையாடத்
திரிகண் மதமால் கரிக்கோடு

முத்தங் கொடுக்குங் குறிஞ்சிநில
முதல்வா முத்தம் தருகவே
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தம் தருகவே. 41

அழிந்து புவனம் ஒழிந்திடினும்
அழியாத் தோணி புரத்தின்மறை
யவர்கள் குலத்தி னுதித்தரனோ
டம்மை தோன்றி அளித்தவள்ளச்

செழுந்தண் முலைப்பால் குடித்துமுத்தின்
சிவிகை யேறி மதுரையில் போய்ச்
செழியன் பிணியுஞ் சமண்பகையுந்
தேவி துயருந் தீர்த்தருளி

வழிந்து நறுந்தேன் உகுவனபோல்
மதுரங் கனிந்து கடைதுடிக்க
வடித்துத் தெளிந்த செந்தமிழ்த்தே
வாரப் பாடல் சிவன்கேட்க

மொழிந்து சிவந்த கனிவாய்ச்சண்
முகனே முத்தம் தருகவே
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தம் தருகவே. 42

தலைமுத் தொழிலும் இயற்றும்அயன்
தனமால் ஈசன் எனுமூவர்
தால மிசைப்பொன் உரத்தின்மிசைத்
தலையின் மிசையின் தயவாகக்

கலைமுத் தமிழ்வா ணியைத்திருவைக்
கங்கை தனையுந் தரித்ததல்லால்
காத லுடன்வேட் டகத்தில் இன்னங்
கருத்து நாணா திருப்பதற்கே

சிலைமுத் துதிரப் பூவாளி
செலுத்து மதனும் இரதியுமே
செவ்வாய் முத்தம் இடும்போது
சேர்ந்து நெருங்கும் அவர்முடிநேர்

முலைமுத் தழுந்த வள்ளிபுணர்
மோகா முத்தம் தருகவே
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தம் தருகவே. 43

தகட்டிற் சிறந்த இதழ்க்கமலத்
தடத்தில் குளத்தில் தண்பணையில்
தழங்குந் துழனிப் பெருமதகில்
சயிலப் புதுநீர் தத்துதொறும்

பகட்டு முரட்டுப் பருவாளை
பணைத்துப் பாய்ந்து செழும்பலவின்
பழத்தைத் தகர்த்து மாங்கனியின்
படுவைச்சிதறிப் பசிய முகில்



அகட்டைக் கிழிக்க முகில் வெருவி
அழகஞ் சொரிந்து மடவார்கள்
அளகத் தழகுக் குடைந்தன போல்
அங்கம் வெளிறி அணிமாட

முகட்டிற் கிடக்கும் பண்பைநகர்
முதல்வா முத்தந் தருகவே
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தம் தருகவே. 44

தொழுது புலவர் புகழ்ந்ததண்டைத்
துணைத்தா மரையி லிருமுத்தந்
தூய கணைக்கான் முழந்தாள்செந்
துடையி லிடையி லேழுமுத்தம்

எழுத அரிய தொந்தியுந்தி
இலங்கு மார்பின் மூன்றுமுத்த
மேய்ந்த மரங்கந் தரம்புயத்தில்
இருபத் தைந்து திருமுத்தம்

அழுது சிரித்து மழலைசொல்லு
மருமைத் துகிரி லாறுமுத்தம்
அழகு கதுப்புக் கண்குடுமி
அனைத்தும் அந்தப் படியுடல

முழுதும் உமையாள் முத்தம்இடு
முத்தே முத்தம் தருகவே
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தம் தருகவே. 45

வேலைப் புனலைக் கலக்கிஎட்டு
வெற்பைப் பிடுங்கிப் பந்தாடி
மேருக் குடுமி திருகிஉம்பர்
வேந்து தனையுங் கொன்றெழுப்பித்

தூலத் துருவம் எடுத்தயனைத்
தொடரிட் டிரங்கிப் புரந்துசிவத்
துரகம் அனைத்தும் விளையாட்டால்
தொலைத்துத் துணைவரு டன்மேவிக்

கோலச் சடிலத் தரன்செவியின்
குலவண் டினங்கள் அருந்துதற்குக்

குழந்தை வயதில் பெருமதியால்
குமுதம் நெகிழ்த்துப் பிரணவத்தின்
மூலச் செழுந்தேன் உகுத்தருளும்
மூர்த்தி முத்தம் தருகவே
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தம் தருகவே. 46

வேறு

திருந கர்ப்பண் பையில் இருக்குஞ்
செழியன் முத்தம் தருகவே
தெருள்கொ டுத்திங் கெனைஉ ருக்குஞ்
சிறுவன் முத்தம் தருகவே
கருதி மொய்க்குஞ் சமண் அழிக்குங்
களிறு முத்தம் தருகவே
களிறி னுக்கும் குறம கட்கும்
கணவன் முத்தந் தருகவே
பருவ ரற்கங் குலைஒழிக்கும்
பரிதி முத்தந் தருகவே
பரம னுக்கும் பொருளு ரைக்கும்
பவள முத்தந் தருகவே
தருப ரைக்கும் புனல்ம கட்குந்
தனையன் முத்தம் தருகவே
சதும றைக்குந் திரும லைக்குந்
தலைவன் முத்தம் தருகவே. 47
தொந்த மிட்டின் பங்கு திக்குந்
தொண்ட சித்தம் குளிரவே
சுந்த ரப்பொங் கங்கொ டுக்குந்
தொந்தி வட்டஞ் சரியவே
கெந்த மொய்க்குஞ் செம்ப தத்தின்
கிண்கி ணிப்பொன் குலவவே
கிஞ்சு கத்தின் சந்த்ரன் ஒக்கும்
கிம்பு ரிக்கொம் பொளிரவே
சிந்து ரத்தின் செஞ்சி வப்புந்
திண்செ விக்குந் திகழவே
செங்க னிக்கன் பும்க ளிப்பும்
சிந்தை முற்றும் பெருகவே



தந்தை சுற்றுந் தும்பி மெய்ச்சுந்
தம்பி முத்தம் தருகவே
சதும றைக்கும் திரும லைக்கும்
தலைவன் முத்தம் தருகவே. 48

வேறு

சினவாள் அரிக்குருளை அனையாய் எனக்குனது
திருவாயின் முத்தமருளே
சிதவா ரணக்கடவுள் மருகா எனக்குனது
திருவாயின் முத்தமருளே

மனமாயை யைப்பொடிசெய் தருள்வாய் எனக்குனது
மணிவாயின் முத்தமருளே
வரதா குறச்சிறுமி விரகா வெனக்குனது
மணிவாயின் முத்தமருளே

சுனைவா சமைக்குவளை யணிவாய் எனக்குனது
துகிர்வாயின் முத்தமருளே
துடியாய் நடத்துதகர் உடையாய் எனக்குனது
துவர்வாயின் முத்தமருளே

கனகா சலக்குமரி குமரா எனக்குனது
கனிவாயின் முத்தமருளே
கனமேக மொய்த்ததிரு மலையாய் எனக்குனது
கனிவாயின் முத்தமருளே. 49

சலியாது பற்பபத நடையாய் வனத்தின்இடை
தனியே தனித்துலவியே
தடிமேல் நடக்குமொரு முதியோன் எனக்குறவர்
தருமான் இடத்தணுகியே

மலியா தரத்தினொடு மயல்தீர்வ தற்குமொரு
வழிநீ யுரைத்திடெனவே
வகைபேசி அத்திமுகன் வரவே நினைத்தவளை
மறைவாய் மணந்தகலவே

புலிபோன் மலைக்குறவர் பிறகே தொடுத்தும்எதிர்
பொரவே செயித்தவர்முனே
பொருமா மயிற்பரியின் அறுமா முகத்தினொடு
பொலிவாய் உதித்தருளியே

கலியாண இட்டமுறு முருகா எனக்குனது
கனிவாயின் முத்தமருளே
கனமேக மொய்த்ததிரு மலையாய் எனக்குனது
கனிவாயின் முத்தமருளே. 50

## 6. வாரானைப்பருவம்

தந்தா வளமுன் அழைப்பமனஞ்
சற்றுந் தரியா தெழுந்துகுல்லைத்
தாமம் சரிய உடைசரியச்
சக்ரா யுதத்தை முன்நடத்திச்

செந்தா மரைப்பெண் புவிமடந்தை
திகைப்போ டெழுந்து பின்தொடரச்
சேடன் முதுகும் அவன்மனமும்
திருப்பாற் கடலும் வெளிறிவெஃகப்

பைந்தார்க் கருடன் கடைக்கண் அருள்
பார்த்து நேரே பறந்துவரப்
பாரக் கொடிய முதலைவதைப்
படவும் பாதம் தரைப்படவும்

வந்தான் மருகா முருகாசெம்
மலையே வருக வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே. 51

வெண்சா மரைபோல் பலவிதமாய்
விரிந்த மனத்தின் கருவியெல்லாம்
வெவ்வே றாகப் பகுத்தறிந்த
விநயம் அறிந்தங் குனையறிந்து

கண்சா றொழுக விம்மிவிம்மிக்
கரைய அழுது கசிந்துருகிக்
களித்துச் சிரித்துக் குதித்தாடிக்
கவினாக் குளறத் துதித்திடுவோர்

எண்சாண் உடம்பும் இனிக்கமகிழ்ந்
தெங்கும் பெருகி அலைமோதி
இரண்டு வினையின் கரைகள்கடந்
தெழுந்த பரமா னந்தம்எனும்



வண்சா கரத்தில் உதித்தசுதை
மருந்தே வருக வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே. 52

சினந்தான் மிகுந்து பொருஞ்சூரன்
தேவி தாலி தீப்புகுதத்
திறல்சேர் அவுணர் மனைவியர்கள்
திருநூல் இழந்து கைமைஎய்த

அனந்தான் வெளிற நடைபயிலும்
அழகு கசியுங் கலைமகளும்
அரம்பை மாரும் செழுந்திருவும்
அணியுந் திருமங் கலந்தளைப்பக்

கனந்தாழ் குடுமி மலையரசன்
கரநீர் வார்க்க மேனைகண்டு
களிக்க அமரர் துதிக்கஉமை
கழுத்தில் ஒருமங் கலநாணை

வனைந்தான் இலகு திருநுதற்கண்
மணியே வருக வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே. 53

அயல்சூழ் நாரை கணைக்கால்கண்
டணுகி அணுகிப் பின்தொடர
அன்னந் தோற்க நடந்துகளை
அகழ்ந்தே உறுப்பின் பகைதீர்த்துப்

புயல்சூழ் மலைபோல் முலைகள்தொறும்
பூட்டு நீல வடம்புரளப்
பொன்னங் கொடிபோல் ஒல்கி ஒல்கிப்
பொருந்து மருத நிலம்குலவுங்

கயல்சூழ் விழியின் கடைசியர்கள்
கருத்திற் புலவி தவிரஎன்று
கருதி அவர்கள் புறந்தாளைக்
கமடம் இதென மள்ளர்பற்றும்

வயல்சூழ் பண்பைத் திருநகரின்
வாழ்வே வருக வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே. 54

அனையுங் கயிலைப் பெருமானும்
அங்காப் புடனே மார்பிலெடுத்
தணியச் சமைத்த பதக்கம்என
அமரர் முனிவர் அதிசயித்து

நினையும் படிக்கு விளையாட்டு
நிகழ்ச்சி புரிந்து மேருஎனும்
நெகிழ்ந்த பசும்பொன் மலைமீது
நேசத் துணைவர் இலக்கரொடு

முனையும் கனிவும் பெறுவீர
மொய்ம்பன் முதலொன்பதுபேரும்
முதிரு நவமா மணிபோல
முயன்ற புடைசூழ்ந் திலங்க அங்கே

வனையு நடுநா யகமணிபோல்
வயங்கும் பெருமாள் வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே. 55

தோயாத் துகிலும் அரைவடமும்
சுற்ற வருக வருகவே
சுரந்து வடியுங் கடைவாய்நீர்
துடைக்க வருக வருகவே

ஆயாய் ஈன்ற கங்கைநன்னீர்
ஆட்ட வருக வருகவே
அருமைப் பதம்என் கண்ணிலெடுத்
தணைக்க வருக வருகவே

வீயா தொழுகுந் திருமுலைப்பால்
மிசைய வருக வருகவே
வீணை தெவிட்ட மழலைமொழி
விள்ள வருக வருகவே



வாயால் எனக்கோ ராணிமுத்தம்
வழங்க வருக வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே. 56

முதிருங் கலைவா ணியும் தமிழ்மா
முனியோ டருண கிரிமுதலோர்
மொழியுங் கவிகொள் செவியால்என்
மோட்டுச் சிறுசொற் கேட்பதுபோல்

கதிர்கொள் வடிவேல் ஏந்தியசெங்
கையில் ஒருசெங் கோல்வாங்கிக்
கடம்பு புனைந்த திருப்புயத்திற்
காட்டு வேம்புந் தரித்தருளி

அதிருங் குரற்சே வலைஉயர்த்த
வாண்மைக் கொருமீன் கொடி உயர்த்த
தண்ட முழுதுந் தானாகி
ஐந்து தொழிலுஞ் செய்தவனோர்

மதுரை யரசு புரிந்தஉக்ர
வழுதி வருக வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே. 57

எதிரும் புலவன் வில்லிதொழ
எந்தை உனக்கந் தாதிசொல்லி
ஏழைப் புலவர் செவிகுருத்தோ
டெறியுங் கருவி பறித்தெறிந்தே

அதிருங் கடல்சூழ் பெரும்புவியில்
அறிந்தார் அறியார் இரண்டும் இல்லார்
ஆரு மெனைப்போல் உனைத்துதிக்க
அளித்த அருண கிரிநாதன்

உதிருங் கனியை நறும்பாகில்
உடைத்துக் கலந்து தேனைவடித்
தூற்றி யமுதின் உடன்கூட்டி
ஒக்கக் குழைத்த ருசிபிறந்த

மதுரங் கனிந்த திருப்புகழ்ப்பா
மாலை புனைந்தான் வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே. 58

நாரி ஒருத்திக் கிடப்பாகம்
நல்கும் பெருமான் நுதல்விழியில்
நண்ணும் பொறியைப் பவனன் அங்கி
நடுங்கிச் சுமந்து கங்கையென்னும்

வேரிப் புனலில் புகுத்தஅவள்
வெம்பிப் பயந்து சரவணத்தின்
மீதில் இடமூ விருகுழவி
விரைந்து பிறந்தங் கழுதுவிம்மி

மூரி நெருப்பின் உடன்மடவார்
முலையுண் டுறங்கி எழுந்திருந்து
முளரிப் பூவில் தவழ்ந்திட ஐ
முகத்தோ னுடன்வந் துமைகரத்தால்

வாரி அணைக்கத் திரண்டதிரு
வடிவத் தொருவன் வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே. 59

வேறு

பகைநிசி சரர்கள் மனதையும் இனிது
பருகிய அழகன் வருகவே
பரிபுரம் அதிர நடைபயில் கமல
பதமத களிறு வருகவே

மொகுமொகு மொகென நகைமணி சுதற
முனிதகர் கடவி வருகவே
முருகவிழ் குடுமி அவிழ்வது அனைய
முலைதர வருக வருகவே

அகமெனு முளரி நறவொடு மலர
அருள்வெயி லிரவி வருகவே
அரனுமை மடிபொன் உரமிசை தவழும்
அறுமுக மதலை வருகவே



மகபதி முடியில் இலகிய சரண்என்
மனமிசை புனைய வருகவே
மணமலி குவளை தருதிரு மலையின்
வரும்ஒரு குழவி வருகவே. 60

## 7. அம்புலிப்பருவம்

கலைஏறி மேலேறி வந்திலகு வாய்இவன்
கலையேறி மேலேறினான்
காமனுக் கேகவிகை யாய்விரிந் தாய்இவன்
காமனுக் கேகவிகையான்

நிலையாத கோட்டைகொண் டோடிவரு வாய்இவன்
நிசிசரர்கள் கோட்டைகொண்டான்
நீடுகுவ ளைக்குரிமை யாகிவரு வாய்இவன்
நித்தமொரு குவளை புனைவான்

தொலையாத வேலையூ டுருவிவிடு வாய்இவன்
சுடர்வேலை உருவிவிடுவான்
சொல்லில்இவ னுக்குவமை யாரும்இலை நீசிறிது
தொழில் உவமை பெற்றதாலே

அலைஆழி யில்துயில்கொள் அரியருமை மருகனுடன்
அம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கொலு இருப்பவனொ
டம்புலீ ஆடவாவே. 61

கொஞ்சமதி யிற்பெரிய மதியுடையொர் காண்ஒணாக்
குற்றமொரு நாள்படைத்தாய்
கூரறிவி னாலறிஞர் ஆவலொடு காணக்
குழந்தையில் உயர்ந்ததிவனே

நஞ்சுபொதி வாளெயிற் றரவுபொர வேயுடல்
நடுங்கிப் பயந்தொளிப்பாய்
நாகப் பெரும்பகை துணுக்குற மயிற்பரி
நடத்திய சமர்த்தன் இவனே

கஞ்சமல ராளிசுதன் இடுசாப மேகொண்டு
கலையிழந் தேதிரிந்தாய்
கமலனைக் குடுமிகள் பிடித்துப் புடைத்துக்
கடுஞ்சிறை புரிந்ததிவனே

அஞ்சுமுக நாதனருள் ஆறுமுக நாதனுடன்
அம்புலீ யாடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கொலு இருப்பவனொ
டம்புலீ யாடவாவே. 62

ஒழியாத மறுவெனுங் குட்டரோ கத்தினால்
உடல்கூனி வீங்கிவாடி
உற்பலத் திருமலைதொ ழாதவர்கள் போலவே
உலகிடை பிறந்திறந்து

பழியால் வரும்பகைப் பாம்புனை விழுங்கவும்
பதைபதைத் தேசுழன்றாய்
பரிவினொடு சந்நிதி புகுந்தவர் பெரும்பிணி
பறத்துவது நீயும் அறிவாய்

விழியால் இவன்சிறிது கருணைபுரி யக்கூனும்
வெப்புந் தவிர்ந்ததுன் தன்
மேன்மைக் குலஞ்சொல்லும் வெந்துயர்
ஒழிந்திடுவை
வெய்யபகை யும்துடைப்பாய்

அழியா வரம்பெறுவை அருள்பெறுவை முருகனுடன்
அம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கொலு இருப்பவனொ
டம்புலீ ஆடவாவே. 63

தமராகி ஆயிரத் தெட்டண்ட மேவிய
தைத்திய ரொடுஞ்சூரனுந்
தம்பிமார் மைந்தர்கள் மகிழ்ந்திட இரத்தச்
சமுத்திரம் எழுந்துபொங்க

எமராயன் ஆகுமொரு நுளையன்வலை வீசியுயிர்
என்னுமீ னைப்பிடிக்க
ஈராறு செங்கதிர்கள் வனசமல ராகவே
எழுமுகில்சை வலமாகவும்

உமராக வேசூழ் உடுத்திர ளெலாமதில்
உதித்தபுற் புதமாகநீ
ஒருதோணி யாய்மிதந் தோடிக்க ளேபரத்
தோங்கல்தொறு மேங்கிமோத



அமராடு திண்டிறற் சேவகப் பெருமான்முன்
அம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கொலு இருப்பவனொ
டம்புலீ ஆடவாவே. 64

புத்திதனில் இரவிநீ அட்டமம் செவ்வாய்
பொருந்திய களத்திரத்திற்
புதன்நாலின் மூன்றினிற் பொன்வெள்ளி ஆறினிற்
போற்றுசனி சென்மமாகத்

துத்திதிக மும்படப் பாம்புகள்ஓர் ஒன்பதில்
தோன்றிப் பகைத்தபகையுந்
துட்டமிரு கங்களும் பேயுநோ யுங்கலித்
துன்பமும் வெம்புபடையுங்

கத்துபுன லுங்கனலு மவமிருத் துங்கொலைக்
காலனுஞ் செய்வினைகளுங்
கண்டதுண் டப்படக் கூவுசே வற்கொடிக்
கட்டியழி யாதசெல்வம்

அத்தனையு மேகொடுத் தன்பருடன் வாழ்பவனொ
டம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கொலு
இருப்பவனொ
டம்புலீ ஆடவாவே. 65

மிடலொடு திசைசுமக் கின்றவே ழங்கவள
வேழஞ் சுமப்பதாக
மேதினியை முதலான புவனங்கள் தாங்குமக
மேருவே தூணதாகக்

கடலேழை யுங்குடித் தெழுமேகம் ஏழுங்
கடாம்பொழி கவுட்களாகக்
காஞ்சனச் சுவர்சுற்றும் அண்டமொரு கூடமாய்க்
கந்தமலை யிற்பிறந்து

திடமான தடைமீறி யேபூத வெளிஎலாந்
தெருவீதி யாய்நடந்து
திங்களுன் தலைகளைக் கொம்புக்கு மாறெனச்
செங்கைநீட் டிப்பிடிக்கும்

அடல்ஆனை ஏறுங்கு மாரரா வுத்தனுடன்
அம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கொலு இருப்பவனொ
டம்புலீ ஆடவாவே. 66

என்றைத் தடுத்துவெளி எல்லா மறைந்திட
எழுந்தசூர் மாவொர் அயிலா
லேறுபட் டிருதுண்ட மாகவொரு துண்டம்இவன்
ஏறுமயி லாகவொன்று

வென்றித் துணைச்சிற கடித்தண்ட கூடமும்
வெடித்திடக் கூவிவானின்
மீனைநெற் பொரியெனக் கொத்திக்
கொறித்துனையும்
வெண்சோறி தென்றுதாக்கிக்

குன்றக் குறத்தியெம் பெருமாட்டி யைப்பெறுங்
குலமான் இருத்தல்கண்டுங்
கோமளக் குகன்இவன் விருப்பொடு தரித்திடுங்
குவளைச் சகாயன்என்றும்

அன்றைக்கு நின்னுயிர் கொடுத்தசர ணாயுதனொ
டம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கொலு இருப்பவனொ
டம்புலீ ஆடவாவே. 67

பணிலமுத் தும்பவள முஞ்சாலி னூடெழும்
பசும்பொன்னு நீலமணியும்
பன்னிறக் கதிர்விரித் தந்தநிலத் தரசன்விற்
பான்மைகாட் டக்குரண்டம்

பிணிமுகத் துருவடைந் தருகுறுஞ் சேவலைப்
பேடுதே டப்பெடையினைப்
பேராத சேவற் பெருங்குருகு தேடவது
பேதைக் கடைச்சியர்கள்கண்

மணிநிழற் கதுவுறப் பார்த்துமகி ழக்கண்கள்
வாய்ந்தசிறை யும்படைக்க
மள்ளரது கண்டுகண் டேமுருகன் ஏறுமயில்
வாகனமிதென்று போற்றும்



அணிவயற் பண்பைப் பதிக்குமர நாயகனொ
டம்புலீ ஆடவாவே
யருட்டிரு மலைக்குடுமி யிற்கொலு இருப்பவனொ
டம்புலீ ஆடவாவே. 68

வன்புடைய கண்டக ரெனுங்கொடிய நிசிசரர்கள்
வாழ்பதிம கேந்திரத்தின்
மாமதி ளிடித்தவுண ரைக்கொன்று கொன்றுதிரை
வாரியிற் பிணநிரப்பித்

தென்புலத் தெப்புரமும் வீரசொர்க் கத்தினுஞ்
செறுநருயி ரேநிரப்பித்
தேவலோ கத்தினிற் கற்பகச் சோலையில்
தெய்வச் செழும்பிடியுடன்

என்புநெக் குருகவுட லம்புளகம் வரமனமும்
இளகியிள கித்தெணீராய்
இருவிழியி னுந்தரள மாலைவர மால்கொண்
டிசைந்துதொழும் ஏழை அடியார்

அன்பெனுஞ் சேவகம் அடைந்தமத யானையுடன்
அம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கொலு
இருப்பவனொ
டம்புலீ ஆடவாவே. 69

திருமலைக் கயிலையில் பரமனுமை நடுவினில்
சேர்ந்திவன் இருக்குநாளில்
திருமால் அயன்சதக் கிருதுமுதல் அமரர்சூர்
செய்குறை இரந்துரைப்பப்

பொருபடைத் தலைவருந் தம்பிமா ருந்திறற்
பூதப் பெரும்படைகளும்
புடைவரத் திண்தேர் நடத்திமா யாபுரி
புகுந்தொரு பொருப்பினோடும்

ஒருதனித் தாரகனை வென்றவலி கண்டுகண்
டுரிமைபெறு தேவகிரிமேல்
உம்பரிறை யுங்கமல னுந்தேவர் யாவரும்
உவப்புடன் அருச்சனைசெயும்

அருமணிப் பரிபுரத் திருபதத் தொருவனுடன்
அம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கொலு இருப்பவனொ
டம்புலீ ஆடவாவே. 70

## 8. சிற்றிற்பருவம்

கூண்ட மாயப் பரசமயக்
குழியின் வீழ்ந்தங் கழியாமற்
கொங்கை மலையும் மடவார்கள்
குழற்காட் டினும்போய்ச் சுழலாமற்

பூண்ட விரதச் சைவநெறி
புகுந்து சரியை கிரியையொடும்
புனிதச் சிவயோ கமும்புரிந்து
பூத வீட்டைச் சுத்திபண்ணி

ஆண்ட குரவன் உனதருளால்
அருள்முப் பொருளும் பிரித்தறிந்தங்
கத்து விதத்தின் உருவடைந்த
அடியார் சிரத்தின் அயன்பொறியைத்

தீண்டி அழிக்குஞ் சேவடியால்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே. 71

நேய முடைய அடியவர்க்கு
நிகழுஞ் செனனப் பிணியல்ல
நித்தம் பரவும் கடவுளர்க்கு
நிருதர் புரிந்த சிறையல்ல

மாய முடைய கிரவுஞ்ச
மலையுங் கடலுஞ் சூரும்அல்ல
வலிய குறவர் காவல் அல்ல
மழலைக்குறத்தி குமரும் அல்ல

தூய வமரர் முனிவர்சிவத்
துரோக மல்ல மேருவல்ல
துங்கச் சிலைவேள் உடலம் அல்ல
துதிக்கும் புலவர் வறுமையல்ல



தீய புரமும் அலஅவைபோற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே. 72

பாடக் கிடையாப் புகழைவெள்ளைப்
பாட்டிற் புனைந்து புகழ்ந்திடுவேம்
பவனி வரும்போ தயினிசுற்றிப்
பரவிப் பரவிக் கடன்கழிப்பேங்

கூடக் கிடையாத் திண்புயத்தைக்
கூடுங்குறத்தி குஞ்சரிக்குங்
குலவு மாய ரிகுளையராய்க்
குற்றே வலிலே சஞ்சரிப்பேஞ்

சூடக் கிடையாத் தண்டையந்தாள்
துகளைத் துடைத்துத் தாலாட்டித்
தொட்டில் உழைவைத் தாட்டிடுவேஞ்
சோதிக் கடவு ளுமைமடந்தை

தேடக் கிடையாத் திரவியமே
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே. 73

வருநா மகட்குத் திருமடந்தை
மாமிக் கொடுமை புரியாமல்
மாமி தனக்குக் கலைவாணி
மருகிக் கொடுமை செய்யாமல்

ஒருநாட் கொருநாள் உவகைபொங்கி
ஒருவர்க் கொருவர் களிப்பெய்தி
ஒளிர்செங் கமல வெண்கமலத்
துறையும் பான்மை போன்மகிழ்ந்து

தருநா கரிகத் தாடவர்கள்
தன்மார் பினுநா வினுமேவித்
தவிராச் செல்வத் தொடுகல்வி
தழைத்துச் செழிக்கும் வடவாரித்

திருநா டுடைய குகப்பெருமாள்
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே. 74

தொனிக்குந் தொடிக்கைக் கடைசியர்கள்
துண்ணென் றெழுந்து குரவைசெய்து
துள்ளிப் புதுநீர்ச் செழுங்கழனி
தொறுநாள் நடவு தொடங்கிநட்டுத்

தனிக்கு மனத்தான் மருதநிலத்
தலைவர்ப் போற்றிக் கடமதுவைத்
தடக்கை வள்ளத் தினில்வார்த்துத்
தயவா யருந்த அம்மதுவுட்

பனிக்குங் கருணை முகம்அளக
பாரந் தோன்றப் பகைஇரவு
பரந்த தெனமள் ளரைநினைந்து
பகற்போ தினுமள் ளியர்க்காசை

செனிக்கும் பண்பை நகர்க்கரசே
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே. 75

அல்வைத் திடுங்கூந் தலம்பிடித்தெய்
வானைத் திருவைப் பரங்குன்றில்
அயிரா ணியும்விண் ணவர்க்கிறையும்
அளிப்ப மணஞ்செய் தருளினவன்

வல்வைத் திடும்பூண் முலைச்சிறுமி
வள்ளிதனையுந் தினைப்புனத்தில்
வரிவிற் குறவன் குறத்திதர
மணந்தான் என்று மொழிந்தேமோ

கல்விச் செருக்கால் விளையாட்டுக்
களிப்புச் செருக்கால் சூர்தடிந்த
கடிய செருக்கால் சமண்பகையைக்
கடந்த செருக்கால் இளஞ்செருக்கால்



செல்வச் செருக்கான் மனச்செருக்காற்
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந், திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே. 76

காவிச் சுனைநீர் குடைந்தாடிக்
கரையி லிருந்த தொழுத்தைமனங்
கரையக் கருதி உருவேற்றிக்
கன்னி மாரை யும்பரவி

ஆவிப் புலனின் றுருகமகிழ்ந்
தாடிப் பாடி அங்கைகொட்டி
அருமைப் புகழைப் புகழ்ந்துபுகழ்ந்
தங்கம் பிரதக் கிணமாகத்

தூவிச் சிகரச் சினகரத்தைச்
சுற்றிப் பரிந்து கந்தசஷ்டி
சோம வாரங் கார்த்திகைநாள்
சுக்கிர வாரந் தோறும்வந்து

சேவித் துனையே தெரிசிப்பேஞ்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே. 77

மருமா லிகைப்பூங் குழல்மடவார்
வாவி குடைய அவர்துகிலை
வாரிக் குருந்தின் மிசையேறி
மடநாண் விரகம் தலைக்கொண்டு

கருமா நாகஞ் செந்நாகங்
கலந்த தெனஅவ் வனிதையர்கள்
கையால் நிதம்பத் தலம்பொதிந்து
கருத்துந் துகிலு நின்றிரப்பப்

பெருமா யைகள்செய் திடைச்சியர்கள்
பின்னே தொடர வேயிசைத்துப்
பேய்ப்பெண் முலையுண் டுயிர்வாங்கிப்
பெண்க ளிடத்திற் குறும்புசெயுந்

திருமால் மருகன் அலவோநீ
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே. 78

கந்தப் பதுமச் சரவணமும்
கந்த புரியும் கந்தவெற்பும்
கழுநீ ருதிக்குந் திருத்தணியும்
காஞ்சி புரத்தின் மாவடியும்

சொந்தப் புரிஏ ரகத்துடனே
சோலை மலையும் பரங்குன்றும்
துங்கத் திருவா வினன் குடியும்
சோதித் திருவேங் கடமலையும்

சந்தப் பொதியும் குற்றாலத்
தலமும் இலஞ்சித் தமிழ்ப்பதியுந்
தழைக்குங் கதிர்கா மத்தடமுஞ்
சயிலந் தோறும் விளையாடிச்

செந்திற் பதியும் புரந்தபிரான்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே 79

பொன்னி னிறமாய்ச் சிவந்துமுளை
புறப்பட் டெழுந்து மரகதத்தின்
பொலிவு பெறவே குருத்துவிட்டுப்
பூத நாதன் படைபோல

மன்னு மருங்கிற் கிளைகிளைத்து
வள்ளற் குணத்தோர் செல்வமென
வளர்ந்து தூணி வனப்பிதென
வசியப் பசிய பாம்பிதெனத்

துன்னும் பொதியாக் கதிரீன்று
துட்ட ரெனவே செம்மாந்து
சொல்லும் அறிஞர் போலருட்பால்
சுரந்து சுரந்து தலைவணங்குஞ்



செந்நெல் வயற்பண் பையம்பதியாய்
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே. 80

## 9. சிறுபறைப்பருவம்

சங்குற்ற செங்கைதொட் டழல்கரிய தாகவே
சயமா முடித்து மேவுந்
தவிராத கற்புடைய தையலர்கள் பூண்முலைச்
சையோக மேத ணந்து

பொங்குற்ற பள்ளியுட் சப்ரமஞ் சத்தினிற்
பூவணையு மேது றந்து
பொதுமாதர் சேரியில் இராப்பகல் நடந்தவர்கள்
போகம்வேட் டிடும்வி டர்கள்போற்

கொங்குற்ற சோலையும் புளினமும் இகழ்ந்துபைங்
கூழ்ச்செந் நெலைத்து கைத்துக்
கோடுகொண் டிக்குக் குலங்களையு முறித்திளங்
கொடிவள்ளை யைக்க றித்துச்

செங்கட் கரும்பகடு சேறாடும் வளநாட
சிறுபறை முழக்கி யருளே
செழுமறை முழக்கமுறு திருமலை யருட்குமர
சிறுபறை முழக்கி யருளே. 81

வள்ளிமலை தனில்முதிய சிவமுனிவன் முன்னர்ஒரு
மான்வந் துலாவ மானை
மாமுனிவன் நயனத்தி னாற்புணர்ந் திடஅதன்
வயிற்றிடைக் கருப்ப மாகித்

துள்ளிஅயர் வோடுவயி றீற்றுளைந் தீன்றெயினர்
தொட்டகுழி இட்ட கலவுந்
துங்கச் சிலைக்குறவர் மரகதச் சிலையெனத்
தோகையைக் கண்டெடுத்து

விள்ளுமுவ கைக்கடல் படிந்தவர்கள் சிற்றூரில்
விரைவினொடு கொண்டு வந்து
வீறுடன் வளர்த்துத் தினைப்புனத் தினில்வைத்த
வேட்டுவ மடந்தை கையால்

தெள்ளுதினை மாவுக் கவாவுற்ற மோகனே
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை அருட்குமர
சிறுபறை முழக்கியருளே. 82

பெண்கள்சங் கத்தினோ டிலவைநகர் விட்டுப்
பெயர்ந்துதிரு மலையின் மேவிப்
பிரசவேர் கல்லிப் பிடுங்கிவிளை யாடிஒரு
பேதைமடி யில்து யிலவுந்

தண்புனற் சுனையுண்டு பூவுண்டு நாளும்வட
சாரலிடை வைகு மெனவே
சண்முகப் பிள்ளைநீ யருள்புனைந் திடவுனைத்
தயவினொடு கண்டு போற்றிப்

பண்புபெற் றிடுசுப்ர மணியனொடு விக்கிரம
பாண்டியன் செங்கை யாலும்
பங்கயக் கண்ணனருள் குஞ்சரி குறத்திஇரு
பாவையர்கள் பார்வை யாலுந்

திண்புயத் தைந்துகட் குவளைசூ டுங்குளக
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை யருட்குமர
சிறுபறை முழக்கியருளே. 83

வனமுழங் குங்கவிகள் தாவவளர் தெங்கின்மிசை
மலிமுப் புடைக்கனிகளும்
மாங்கனி பலாக்கனிகள் சம்பீர மென்கனிகள்
மாறாமல் வீழோசையும்

இனமுழங் கும்பழைய சைவர்கள் சிவாகமமும்
இன்னிசைத் தேவாரமும்
எங்கணும் பரவச முடன்பரவும் அடியவர்
இயம்பும்ஆ கரசத்தமுங்

கனமுழங் குங்கன முழக்கமும் வடவருவி
கல்லென ஒலிக்குமொலியுங்
கரகமுனி முதலினோர் வேதபா ராயணக்
கம்பலையும் உம்பர்முரசுந்



தினமுழங் குஞ்சித்திர சபைநடனன் அருள்புதல்வ
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை அருட்குமர
சிறுபறை முழக்கியருளே. 84

தண்டைகள் சிலம்புகள் சதங்கைகள் பதங்களில்
சரிகலந் திசைமுழங்கத்
தாமரைப் பன்னிரு தடக்கையில் வியப்பொடு
தரித்தபொன் வளைமுழங்கத்

தொண்டர்கள் விருப்பொடு தெருட்பெறு திருப்புகழ்
துதித்திடு துதிமுழங்கச்
சுந்தரத் திருவரையில் அரைவடக் கிண்கிணிச்
சோதிமணி தான்முழங்க

அண்டருல கம்புவி அனந்தனுல கெவ்வுலகும்
அணிமணப் பறைமுழங்க
அறுசமயம் அல்லாத பரசமய வாதிகள்
அகத்தொடு மிகுந்த அவுணர்

திண்திறன் மனத்திற் பெரும்பறை முழங்கநீ
சிறுபறை முழக்கி யருளே
செழுமறை முழக்கமுறு திருமலை அருட்குமர
சிறுபறை முழக்கி யருளே. 85

பொருவரிய கயிலைமலை அண்ணல்கைச் சூலமும்
போராழி யுங்குலிசமும்
பொங்குந் திருப்புகழ்ச் சாணைதீட்டிக்கதிர்
பொலிந்திலகு கூர்மைபெறவே

ஒருபெரிய வீரவேல் சூரனுர முங்கிரியும்
ஊடுருவி ஓடிமீள
ஒல்லையில் எறிந்துபகை வென்றுசே வற்கொடி
உயர்த்தசே வகமிருந்துந்

தருநிழலில் அரசுபுரி அரசனருள் குஞ்சரி
தடங்கண்வேற் கஞ்சியஞ்சித்
தையலவள் குங்குமச் சந்தனச் சேறுடன்
தகரமிரு மதமொழுகிய

திருமுலைக ளென்னுமிரு மலையரண் அடைந்தவன்
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை அருட்குமர
சிறுபறை முழுக்கியருளே. 86

கத்துபுனல் அருவிசொரி பொதியமலை யில்திகழ்
கடத்தினில் இருந்தெழுகையாற்
கடலகடு புகுதலான் மலையையு முறித்துக்
கயற்புலம் அழுத்திவிடலால்

அத்தர்திரி கூடத்தர் திருமவுலி தீண்டிநின்
றபிடேக மாட்டுகையினால்
அன்புட னடுத்தவர்க் கருள்புரிந் திடுகையால்
அழியாத சாபமிடலால்

பத்திமிகும் உத்தமத் தவமுனிவர் பாலிகல்
படைத்தகரை மீறிவரலால்
பாரமா கிச்சிறிய நாமமுற லால்கலை
படித்தகுறு முனியைமானுஞ்

சித்திர நதித்தலைவ முத்தமிழ் முதற்புலவ
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை அருட்குமர
சிறுபறை முழக்கியருளே. 87

உறுநாக மும்கமட மும்கனக மேருவுடன்
ஓரேழு திரைவாரியும்
உட்புறப் போராழி யும்சக்ர வாளகிரி
யும்திசை சுமந்தகளிறும்

இறுநாளில் அவையவை படும்பாடு படஅமரர்
ஏங்கிக் குதித்தாடவே
இப்படி மிகுத்தபகி ரண்டமு நடுங்கஅசு
ரேசன்மன முஞ்சலிப்ப

நறுநான வார்குழற் பதுமைமுதல் அவுணர்குல
நங்கையர்கள் மங்கலப்பொன்
நாணற் றுதிர்ந்துவிழ வேணுப் பெருஞ்சிலையில்
நாண்வளை தேற்றிவாங்கிச்



சிறுநாண் முழக்கிநிசி சரர்தள முழக்குநீ
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை அருட்குமர
சிறுபறை முழக்கியருளே. 88

தையலர்கள் ஊடியெழும் ஊடறீர்ந் திடஅவர்கள்
தாளையிளை ஞோர்கள் வருடிச்
சந்திரதில கங்குழைத் திந்துநுத லுக்கழகு
தருதிலக மேபுனைந்து

தொய்யில்எழு திக்கொங்கை மேலுத்த ரீபமுஞ்
சுடர்மணிக் கலனும்வீக்கிச்
சுந்தரப் பொன்மேனி யணிபணி திருத்திவேல்
துணைக்கஞ் சனங்கள் தீட்டி

மையொழுகு குழன்முடித் தவர்முடித் திடவுமதில்
வண்டுமொய்த் திடுதல்கண்டு
வஞ்சியிடை முறியுமென அம்மலர் கழித்தும்பர்
வனமலர்கள் கொய்து சூட்டுஞ்

செய்யமணி மேடைதிகழ் பண்பைநக ருக்கதிப
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை யருட்குமர
சிறுபறை முழக்கியருளே. 89

மருவாத பாலையிற் பொய்யா மொழிக்குமுன்
வந்தொரு செழுங்கவிதையு
மாறான சூரன்முன் தம்பிநீ தூதுபோய்
வாவென் றியம்புமொழியுங்

குருவாக வந்தருண கிரியைத் திருப்புகழ்
கூறென முதற்சந்தமுங்
கும்பமுனி இருசெவி மனத்தொடு சரீரமுங்
குளிரமுத் தமிழின் இயல்பும்

அருவாய் மிகுந்தபல வுருவாய் நிறைந்தருளும்
அப்பனுக் கொப்பிலாத
ஆனந்த மதுரரசம் ஒழுகுதே வாரமுடன்
அழியாத ஒருவாய்மையுந்

திருவாய் மலர்ந்துரைசெய் குமரகுரு நாதனே
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை யருட்குமர
சிறுபறை முழக்கியருளே. 90

இசைக்குழலும் வீணையுங் கஞ்சமும் பல்லியமும்
எல்லாம் பயின்றுபாடி
ஏறுதக ரானைபரி தேருகைத் துங்கடல்கள்
ஏழையுந் துளியாக்கியே

வசைத்தொழி லரககர்கள் துணுக்கென மலைத்தமரர்
வஞ்சகமி தென்றயிர்ப்ப
வானவர்கள் தானவர்கள் செய்கையென் றேமதி
மருண்டுளம் வெருண்டுசோர

மிசைப்படு முடுக்கதிர் களைத்தலை மயக்கிமக
மேருவை முறித்துழக்கி
விண்டுவிண் டண்டங் குலுங்கக் குலுங்கநவ
வீரர்கள் இலக்கர்சூழத்

திசைக்கிரி யனைத்தையும் உருட்டிவிளை யாடுநீ
சிறுதே ருருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதே ருருட்டியருளே. 91

புவியுலகு துயரகல அசுமேத யாகம்
புரிந்துபல வேள்வி ஆற்றிப்
புண்ணியமும் வீரமுஞ் செல்வமுங் கல்வியும்
பொன்றாத ஆடவர்களால்

அவியுணவை அனுதினம் விழைந்தும்பர் வாய்வயி
றனைத்துந் தெவிட்டவூட்டி
ஆனந்த மதுபெருகி மனதுருகி விழிசொருகி
அசையாமன் மேடைதோறுங்

குவிஉபய முலையின்மிசை வீணைசேர்ந் துச்சுருதி
கூட்டிஎழு கரமுமூட்டிக்
கோதையர் குயிற்குதலை மழலைமொழி அமுதினொடு
கூடவா சிக்கும் இசையாற்



செவியுணவு மன்னவற் குதவுபண் பைக்கதிப
சிறுதே ருருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதே ருருட்டியருளே. 92

உகமும் பரித்தொகை கரித்தொகைபல் இரதமுடன்
ஒளிரும்வாள் அவுணர்மாள
உன்னுடைய போர்ஆழி சென்றறுப் பச்சூரன்
ஒருவனே நின்றுநெஞ்சை

அகமும் பெருங்கவலை கொண்டதி சயித்துவிழி
அழலுகுத் தெயிறதுக்கி
அப்படி அவன்படையும் இப்படி முடிப்பனென
அன்னவன் முன்னியேவப்

புகழ்கொண்ட திறல்வீர வாகுவுடன் நவவீரர்
பூதர்கள் இலக்கர்தம்மைப்
புந்தியை மயக்கியொரு கொடியில்வா ரிக்கொண்டு
போயண்ட கோளகையின்மேல்

திகழிந்திர ஞாலப் பெருந்தேர் பறித்தநீ
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே. 93

உருத்தார வாரித் திடுங்கொடிய நிசிசரர்
உமாபதி வலக்கண்ணதிரும்
ஒருமருக னடவுகளி றொத்திருந் தோடவே
உம்பர்கோ மான்புரக்குந்

தருத்தாம நந்தனவ னஞ்செழித் ததிலுறு
சராசரம் எலாந்தழைப்பச்
சாபநா ணும்பூணு மாபரண முந்திகழ்
சரக்கறை மிகத்தழைப்ப

மருத்தா மரைத்தவி சுடைப்பாக னுஞ்சிலை
வளைத்தெய்தி டாதகணையும்
வாசியும் பேசிய திருப்புகழ் விருப்புடன்
வழுத்தித் துதிக்கவந்த

திருத்தாதை ஏறும் பெருந்தேரும் வாழ்கவே
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே. 94

கனந்திகழ் கிரிக்குலம் இரண்டையும் எறிந்துவெங்
காஞ்சனத் தளிர்மாவையும்
கண்டதுண் டப்பட முறித்திரு வகைப்புலவர்
காரகந் தூள்படுத்தி

இனந்தனை முடிந்தவன் இவன்றனையும் வெல்வதற்
கிதுசமயம் என்றுமலைகள்
எல்லாந் திரண்டுபய மாகிமா வடுவுடன்
இணங்கிஅம ராடுவனபோல்

வனந்தனை விருப்பொடு புரந்தருள் குறத்திமான்
மதம்ஒழுகு வனமுலைகளும்
வள்ளைச் செழுங்குழையில் வாசக் கருங்குழலில்
வாவிவிளை யாடுவிழியுந்

தினந்தின முரத்தொடு பொரக்குழையும் விரகனே
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே. 95

பெருகுகரு ணைக்கடல் உவட்டெறிந் தருளொழுகு
பெரியபன் னிருவிழிகளும்
பேரழகு பெறுநுதல் களுந்திலத முந்தெருட்
பிரணவம் சொலும்வாய்களும்

இருவனிதை யர்க்குமயல் செயுமந்த காசமுடன்
இலகும்ஈ ராறுகுழையும்
ஏரிலகு நாசிகள் கபோலங்கள் அத்தனையுய
எழில்சிறந் தொளிததும்பி

முருகுகமழ் சண்முகத் தாமரைக ளேபின்னு
முன்னும்விக சித்திடுதலால்
முத்தமிழ்ப் புலவர்க்கும் அடியர்க்கும் அமரர்க்கு
முனிவரொடு சூரனுக்குந்



திருமுதுகு தாராத தண்ணளிச் சேவகன்
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே. 96

அரிக்கும்அய னுக்கும்வெரு வாததூர் வென்றதுகை
அயிலோஅன் னோர்கள்படையோ
அப்பனுக் கும்பொருள் நிரப்பிய குருக்களென்
றாரணத் தொகைபுகலுமே

பரிக்குமயி லுக்குமொரு சேவற் கொடிக்கும்இணை
பகரஒரு பொருளும்இல்லை
பதினா யிரங்கோடி மன்மதன் அழகுநின்
பாததூ ளிக்குநிகரோ

புரிக்குளுயர் பொன்னுலகு நின்னுடைய பண்பா
புரிக்குநிகர் ஒப்பாகுமோ
பூதரம் எலாமிருந் துஞ்சுனையி லோர்குவளை
பூத்திரு மலைஒக்குமோ

தெரிக்கில்உலக கத்துவமை இல்லாத தெய்வநீ
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே. 97

பாரோடு பதினாலு லோகத்தில் உள்ளவெம்
பழியோடு பாவம்ஓடப்
பஞ்சம்ஓ டக்கொடுமை யஞ்சிஓ டத்தமிழ்ப்
பாவலர்கள் வறுமை ஓடச்

சூர்ஓட அவுணர்கள் பயந்தோட வானவர்கள்
துன்பங் கலங்கியோடச்
சொல்லோடு பழகாத புலவரோ டப்பழைய
தொண்டர்மன மாயைஓட

வாரோடு கொங்கைமட வாரோடு மிளைஞர்தம்
மனையோடு மேவிவாழ
வந்துதெரி சித்துளோர் பிணிஓட அங்கவர்
மனத்துயர் அனைத்தும்ஓடத்

தேரோடி வரும்வீதி திகழ்பண்பை வாழவே
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே. 98

பொன்மௌலி யும்கருணை பொழிவதன மும்திருப்
புருவமும் நெற்றியழகும்
புண்டரிக நயனஅரு ளும்குழைக ளும்தமிழ்ப்
புத்தமுத மொய்த்தவாயும்

வின்மலிந் திலகுகூ ரியதுண்ட மும்கவின்
விளங்கியக போலங்களும்
வெண்தரள மாலையணி கண்டமுந் திண்புயமும்
வேலுமுள ரிக்கைகளும்

பன்மணியு நூலுமணி மார்பமுந் தோயாத
பட்டுடையும் மிக்கதண்டைப்
பாதமுந் தோகைமயி லும்சிந்தை யுள்ளே
பதித்துத் துடிக்கும்அடியார்

சென்மஇருள் முழுதும்விடி யக்கூவு சேவலாய்
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே 99

மங்கல மடப்பிடி குறக்கொடி இடத்தினும்
வலத்தினும் இருந்துவாழ்க
மாமயிலும் வாழ்கஅதன் மேலிலகு நூபுரம்
வனைந்தசே வடியும்வாழ்க

பொங்கொளி தயங்குதிரு ஆபரண முந்நூல்
புனைந்திடுபொன் மார்பும்வாழ்க
போர்வேலும் ஈராறு செங்கையும் பன்னிரு
புயங்கள்சுந் தரமும் வாழ்க

தங்குகரு ணைக்கண்கள் ஆறிரண் டுந்திருச்
சண்முகத் தருளும்வாழ்க



தாழ்குழைமுந் நான்கினொடு பவளவா யாறுடன்
நடமகுட மினிதுவாழ்க.

திங்கண்மும் மாரிபொழி யச்சேவல் வாழ்கநீ
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே. 100

திருமலை முருகன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று

உ

# திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்

## மார்க்க சகாய தேவர்

### பிள்ளையார் வணக்கம்

சுந்தரனாந் தென்விரிஞ்சைத் தோகைமயில்
வாகனன்மேற்
சந்தமுறும் பிள்ளைத் தமிழ்பாடச் - செந்தமிழ்சேர்
வாக்கெனக்கு நல்கி மதமா முகக்கடவுள்
ஊக்கமுடன் காப்பா னுவந்து. 1

### பருவத்தொகை

சாற்றரிய காப்புச்செங் கீரைதால் சப்பாணி
மாற்றிய முத்தமே வாரானை - போற்றரிய
அம்புலியே சிற்றிலே ஆய்ந்த சிறுபறையே
பம்புசிறு தேரோடும் பத்து. 2

## 1. காப்புப்பருவம்

### திருவருள்

திருக்கஞ்ச இருகரத்தின் அபயவர தமுஞ்சேர்
திகழமர கதமளித்த தெய்வசிகா மணியை
அருக்கன்சந் திரன்தவழும் புரிசைவிரிஞ் சையில்வாழ்
ஆறுமுகத் தரசைஎமை யாண்டவனைப் புரக்க
பெருக்கஞ்சந் ததமேவுஞ் சிவநாத னிடத்திற்
பிறந்தவொரு சிறுபாலன் பெருங்காணி பெறவே
இருக்கஞ்சன் முதலமர ரரகரவென் றேத்த
விளைத்தபிறை சூடுமுடி வளைத்ததிரு வருளே. 3



### திருநீறு

வேறு

முடியா றுடையாய் குமராசிவ மோட்சத்தேற்றும்
முருகா அசுரே சர்களாகிய காட்டைப்பாற்றும்
முனைவா கருணா கரனேமறை வாக்கிற்சாற்றும்
முடியா முதலே தளையோதிம னார்க்குப்பூட்டும்

அடியார் துணையே அவர்பால்விளை
யாட்டைக்காட்டும்
அமுதே கனியே நறவேமுரு காற்றைக்கேட்கும்
அரசே யெமதா ருயிரேயெமை யூத்தைக்கூட்டில்
அடையாநெறிநீ அருள்வாயென வாழ்த்திப்
போற்றி

விடியா மலமா யைகளாமிருள் தீர்த்துத்தீர்த்து
விழிநீர் தருயோ கிகள்சேர்தரு வீட்டுக்கேற்ற
வெளிறா அமுதா யுலகோரிடர் நீக்கப்பாட்டு
மிகவோ தமுனா ளொருநேயனுள் நாக்கிற்றீட்டும்

வடிவே லுடனே வயல்சூழ்கர னூர்க்குட்டோற்றும்
மயிலே றியசேய் சிறுவானுதன் மேற்பொற்பூத்த
மலைமான் முலையூ றியபாலொடு கூட்டிச்சாத்தும்
வளைபோன் மதிபோல் ஒளிசேர்திரு
நீற்றுக்காப்பே. 4

### மார்க்கசகாயசுவாமி

வேறு

சீரியவே லாயுதனைச் செவ்வேளைக் குகனைத்
தேவர்கள்சே னாபதியைத் திருமயில்வா கனனைக்
காரியகா ரணங்கடந்த கடவுளையெங் கோனைக்
கரபுரியி லாறுமுகச் சேவகனைக் காக்க
சூரியகொந் தளதேசத் தனபாலன் மகிழக்
குளிர்பிறையுஞ் சடைமுடியும் மழுமானும்
பணியும்
வாரியிருட் கடுமிடறும் நுதல்விழியும் மறைத்தே
மறைப்புரியில் வழித்துணையாய் வந்தருள்சே
வகனே. 5

## மரகதவல்லி

### வேறு

அரவின் மணிகளும் அருண கிரணமும்
அழிய ஒளிவிடு தோற்றனை
அழகு பொழிதரும் இளைய குமரனை
அசுர ரொடுபொரு சீற்றனை
அயனு மலைவுறு மறையின் இறுதியை
அமுத மொழிகொடு தேற்றனை
அடிமை படுமவர் கொடுமை பொடிபட
முடுகி யெழுமரு ளூற்றனை

விரவி யளியின முரல நறவுறு
குவளை மலர்கமழ் நாற்றனை
விழிக ளொருபதொ டுபயம் உடையனை
மிருக மதமகில் சேற்றனை
விருது பெருகரு தலர்க ளுடலுயிர்
விடுதி பெறவடு கூற்றனை
விபுதர் புகழ்கர புரியில் வருமறு
முகனை அணிதிரு நீற்றனை

இரவி மதியழ னயனி பரிபுர
சரணி கவுரிச டாட்சரி
இறைவி திரிபுர தகனி முனிவர்கள்
இதய மலரை விடாக்கிளி
எழுக டலுமெழு புவியும் அருளியும்
இளமை நலமழி யாக்குயில்
இழிஞர் தொழிலது புரியும் அறிவில
ரிடர்க ளிடியவ ராப்பிடி

வரையி லுறைபவள் கருணை மழைபொழி
வதனி சடிலிம கோத்தமி
வடுகி பகவதி குமரி சிவனிட
மருவி நிறையக லாத்திரு
வனச மலர்மகள் சகல கலைமகள்
வழிய டிமைவினை தீர்ப்பவள்
மலையின் மடமகள் வருண மரகத
வலிய மலியவள் காக்கவே. 6



## கங்கை

### வேறு

எம்பா தகநீக் கியவே லவனை
இமையோ ரரசைக் குமரே சனையென்
இதயத் திருளைக் களையுங் குகனை
அம்பான் மொழிஅம் மையளித் தருளும்
அமுதைக் கனியைக் கரனூர் தனில்வாழ்
அடியார் பெருவாழ் வையளித் தருள்க
கம்பா நதிகோ தமைகா வேரி
காளுந்தி கோதா விரிபா லிநதி
கனகா நதிகண் டிகைகுண் டிகைசூழ்
பம்பா நதிவா னதிசீ தைநதி
பாஞ்சா லிதபோ நதியே முதலாம்
பலவா நதியா னபகீ ரதியே. 7

## கணபதி

### வேறு

முந்திவரு சூராரின மாளச் சிவந்தவனை
முன்புகடல் நீர்சுவற வேல்தொட்ட செங்கையனை
முண்டகனை நூல்வினவி வாதித்த புங்கவனை
மொய்ம்புபெற வேதொழுத கீரற்கி ரங்கினனை

எந்தையை என்ஆவியை என்னாவிக் கருந்துணையை
என்சிரசி லோலமிடு பாதச்ச தங்கையனை
இன்பமுரு கேசனைமெய்ஞ் ஞானக்
கொழுங்கனியை
எங்கள்கர னூரின்மயி லோனைப் புரந்தருள்க

அந்தரமெ லாமதிர வாய்விட்டு மண்டிவரு
மஞ்சலரெ லாமுறிய வால்சுற்றி மஞ்சுதளை
அங்கைகொடு தாவியத னீரைப்பி ழிந்துகட
லம்புவியெ லாநெளிய வோடித்தி ரும்பிவிட

மந்தரமெ லாமசைய வேமுட்டி யங்குலவு
வன்பரிதி தேர்முறிய வேகுத்தி வெண்டரளம்
வந்துலவு மேழ்சலதி நீர்வற்ற உண்டுமிழும்
வண்டுகண்ம தாசலம தாயற்றி ருந்தவனே. 8

## வைரவன்

வேறு

ஒருகைமணி ஒருகைகயி றொருகைசரம் ஒருகைசிலை
ஒருகைகடம் ஒருகை வடிவாள்
பொருகழுமு ளொருகைசிரம் ஒருகையிவை யுடையகர
புரிவடுக னடிதுதி செய்வாம்
முருகையரி மருகைமயின் முனியைமறை முதலையறு
முகனையுமை மகனை யடியார்
இருளகல வருகுகனை எமையடிமை கொளுமரசை
இனிமையொடு புரவு செயவே. 9

## திருவேல்

வேறு

முடியொ ராறுடை யானையெம் ஐயனை
முதல்வனைச் செவ்வேளைப்
படியெ லாம்புகழ் தேவனை விரிஞ்சையம்
பதிமுரு கனைக்காக்க
கொடிய தானவர் குருதியி லாடிவெங்
குடலெனுந் தொடைசூடி
நெடிய யாக்கையின் நிணமெலாம் அருந்திய
அவன்கையின் நெடுவேலே. 10

## திருமயில்

வேறு

தொண்ட னாகவெ மைக்கொ ளுஞ்சிறு
தோன்ற லைச்சதுர் வேதநூல்
சொல்லு மாமணி வாய னைச்சுக
மாயி ருந்தும ணங்கொளும்

வண்டு சேர்தரு நீப மாலைய
னைத்தி ருக்கா னூரில்வாழ்
மரக தக்கொடி பெற்ற செஞ்சுடர்
மணியை யன்பொடு காக்கவே

அண்ட கூட நடுங்க மால்வரை
தூளி யாகஅத் தூளியால்



ஆழி யேழுநி ரம்பி மேடுப
டக்க லாபம டித்தெழுந்

தெண்டி சாமுக முங்க டைக்கணி
மைக்கு முன்னமு லாவியே
என்று மாட லியற்றி வாழவ
னேறு கின்றம யூரமே. 11

## திருமுருகாற்றுப் படையும் திருப்புகழும்

வேறு

அம்மைமுலை யுண்டுவிளை யாடுமிளை யோனைஎமை
யாட்கொண்ட குமரேசனைச்
செம்மையுள ஆறுமுக னைத்திரு விரிஞ்சைவரு
சேயைப் புரந்தருள்கவே
மும்மைமல மகலநக் கீரமுனி சொன்னதிரு
முருகா றெனுந்தேறலும்
எம்மருண கிரிநாதர் ஓதுபதி னாறா
யிரந்திருப் புகழமுதுமே. 12

## பலதேவர்கள்

வேறு

கந்தனை வேளை விரிஞ்சையின் மேவு
கடம்பனை மாதுமையாள்
மைந்தனை வேலனை எங்கும ரேசனை
வந்திரு தாள்பணிவார்
இந்திரர் வானவர் சந்திர சூரியர்
எண்டிசை யோர்முனிவோர்
செந்திரு மார்பினர் விஞ்சையர் பாதலர்
செங்கம லாசனரே. 13

# 2. செங்கீரைப்பருவம்

உம்பரசு ரேசர்புரி வாதனை உரைத்தருள
உயர்கயிலை வாழ்ப ரமனார்
யோகத்தி லுன்னவெண் ணீறணியு நுதல்விழியி
லோராறு பொறிகள் சிதற

வெம்பொறி யெழுந்தண்ட ரண்டம் பரந்துலவ
விண்ணவர்க ளஞ்சி மலைவாழ்
வித்தகர்க் கோதவப் பொறிகள்தமை வாவென்று
வெங்கனலி தனையி தனைநீ

சம்ப்ரமொடு சரவணந் தனில்விடுதி யென்னவத்
தழலவன் கொண்டகலவத்
தழல்வெம்மை யாற்கங்கை தனில்விடக் கங்கையுஞ்
சரவணந் தனில் வைத்திடச்

செம்பதும முகமா றுடன்குலவு கரனூர
செங்கீரை யாடி யருளே
திருமுருக வரிமருக வரதகுரு பரகுமர
செங்கீரை யாடி யருளே. 14

ஆரமா முமைதாட் சிலம்பினவ மணிசிதற
வதனையர னாட வொன்பான்
ஆயிழைய ராயவர் கருப்பந் தரித்துமையி
னருளினா லவர்க ளருளும்

வீரவா குவையுமடல் வீரகே சரியையும்
வீரமா கேந்திர னையும்
வீரமா கேசனையும் வீரபுரந் தரனையும்
வீரராக் கதனை யுந்தோள்

தாருலாம் வீரமார்த் தாண்டனையும் வீரராந்
தகனையும் வீர தீரன்
தன்னையுந் தம்பிய ரெனக்கொண்டு தோலாத
சமரேறி வடிவே லினால்

தீரராம் நிசிசரரை வென்றகர னூராளி
செங்கீரை யாடி யருளே
திருமுருக வரிமருக வரதகுரு பரகுமர
செங்கீரை யாடி யருளே. 15

ககனமுக டுருவியெழு மகமேரு கிரியையொரு
கனகபம் பரமாகவே
கைக்கொண்டொ ராயிரக் கதிர்முடிச் சேடனைக்
கயிறாக வேசுருட்டிச்



சகலலோ கமுமுறத் தமுவியிடு கமடமது
தன்னையொரு குறியாகவே
சங்கரர் மகிழ்ந்தருள வரவிகட் கிடையூறு
சாராம லாடுகுமரா

மகரதோ ரணமறுகு மாணிக்க மண்டபமும்
வயிடூரியப் புரிசையும்
மரகதக் கோயிலும் பவளநித் திலமருவி
மதியின்மண் டலமளாவுஞ்

சிகரகோ புரமுமொளி தழையவாழ் கரனூர
செங்கீரை யாடி யருளே
திருமுருக வரிமருக வரதகுரு பரகுமர
செங்கீரை யாடி யருளே. 16

பரவையை யுறிஞ்சிவட குலகிரி குலுங்கிடப்
பாய்ந்தண்ட ரண்டமெல்லாம்
பயமெழ விழித்துவிழி களிலனல் கொழித்துரக
பந்திமுடி திண்டாடவே

தரணியி னடந்துதிசை மதகரியுடன்பொருது
தாவியா காயமேவித்
தாரகை யுதிர்த்தமரர் தாருவை யழித்துவரு
தகரினே றியகுமரனே

வரையில் குங்குமமரமு மணநாறு சந்தனமும்
மதுவொழுகு புன்னாகமும்
வாழையின் கனியுமணி யாரமும் உடன்கொண்டு
மழைபொழியு மேகமளவாய்த்

திரையெறிந் தொருபாலி நதிவருங் கரனூர
செங்கீரை யாடி யருளே
திருமுருக வரிமருக வரதகுரு பரகுமர
செங்கீரை யாடி யருளே. 17

பங்கயத் திறையைமறை நூல்வினவி யோமெனும்
பதவுண்மை நீசொல்லெனப்
பண்டவன் திண்டாடல் கண்டுகுட் டிததளை
படுத்திவண் சிறையூடுவைத்

தங்கையிற் செபமாலை குண்டிகை தரித்தபய
வரதத்தொடேக முகமா
யன்றமர்ந் தண்டரண் டங்களையும் உண்டாக்கும்
ஐயனே துய்யஅரசே

கொங்குடைச் சண்பகா டவியுமிள வாழைக்
குருத்துமணி சேர்கரும்புங்
குளிர்தாழை யுங்கமுகு விடுபாளை யுங்கனக
கோபுரக் கொடியுமடவார்

செங்கையிற் கழலுமழை முகிலளவு கரனூர
செங்கீரை யாடி யருளே
திருமுருக வரிமருக வரதகுரு பரகுமர
செங்கீரை யாடி யருளே. 18

வேறு

மாசது பொருந்தாத காசிப னுடன்கூடி
மாயையரு ளும்பாலராம்
வாளரி முகன்றாரு காசுர னெனும்வேழ
மாமுக னெடுஞ்சூரனா

காசமள வுஞ்சீற சோமுகி யெழுந்தேழு
காசினியும் நொந்தேறவே
காவலது கொண்டான வானவர் பயந்தோடு
காலமவ ரஞ்சாமலே

வீசுதிரை யம்போதி நீர்சுவற மஞ்சான
வேடமொ டெதிர்ந்தோலமாய்
மேருகிரி யுந்தூளி யாகவரு வெஞ்சூரர்
வீழவிடு கெம்பீரனே

ஆசறு விரிஞ்சேச னாரருள் இளங்காளை
யாடியருள் செங்கீரையே
ஆறுமுக முந்தோளு மேரொழு கிளங்காளை
யாடியருள் செங்கீரையே. 19

கோடிமணி யந்தூணி னாடக வரங்கூடு
கோதையர் நடங்கூரவே
கோலமத னன்போலும் ஆடவர்கள் கண்டாசை
கூரவிடு வண்டோடியே



நாடியவுர் மஞ்சான வோதியி லலங்கார
நாண்மலர் முகந் தூதுவாய்
நாதமமர் நெஞ்சாசை யோதுத லெனும்பாலி
நாடுடைய கெம்பீரனே

பாடிமறை கொண்டாட ஆரமுத முண்டார்கள்
பார்வைகள் சலந்தூவமா
பாதக முறிந்தோட மாதவ ரெழுந்தார
வாரமுட னின்றாடவே

ஆடிய விரிஞ்சேச னாரருளிளங் காளை
யாடியருள் செங்கீரையே
ஆறுமுக முந்தோளு மேரொழு கிளங்காளை
யாடியருள் செங்கீரையே. 20

தாறுடைய பைம்பூக மாதவர் வரும்போது
சாமரை தருஞ்சோலைசூழ்
தாழைமயி லின்சாயல் மாதரிடை மின்சோதி
தானென மலர்ந்தேடெளம்

நாறுமண முங்கூடி நீறுபுனை யன்பாளர்
ஞானவிழி யின்பாணிபோல்
நாளுமரு வுந்தாது தேறல்சொரி யும்பாலி
நாடுடைய கெம்பீரனே

சீறுமர வம்பாதி மாமதி கருங்காவி
சீதவன சந்தாதுசெந்
தேனொழுகு மந்தாரை தாதகி செழும்பூளை
தேவர்தலை யென்பாமையோ

டாறணி விரிஞ்சேச னாரருள் இளங்காளை
யாடியருள் செங்கீரையே
ஆறுமுக முந்தோளு மேரொழு கிளங்காளை
யாடியருள் செங்கீரையே. 21

மாரமத னன்றேரு மானையும் மகிழ்ந்தேறு
வாசியு மவன்காளமும்
வாளியும் நெடுஞ்சோலை யீயநல வம்போடு
வார்சிலை தரும்பாரில்வாழ்

நாரைவன சந்தாவு மாரலிரை யென்றோடி
நாடிநுக ரும்போதெலாம்
நாவிலதில் வந்தூறு தேனுநுக ரும்பாலி
நாடுடைய கெம்பீரனே

பூரணி கொடுஞ்சூலி நீலியுமை கங்காளி
பூமகள் தொழும்பூவைமால்
பூவிலுறை யுந்தேவன் மாமுனி கரன்றூய
பூசைபுரி யும்பாதனார்

ஆரணி விரிஞ்சேச னாரருள் இளங்காளை
யாடியருள் செங்கீரையே
ஆறுமுக முந்தோளு மேரொழு கிளங்காளை
யாடியருள் செங்கீரையே. 22

நீதிபெறு மன்பாளர் பாவவெயி லண்டாமல்
நீழலரு ளுஞ்சோலையே
நீடிய கொடுஞ்சூர ராகிய கருங்காடு
நீறெழ வெழுந்தீபமே

நாதமொடு கொண்டாடு வாரிருள் இரிந்தோட
நாடொறு மெழும்பானுவே
ஞானியர்கள் நெஞ்சான கோயிலும் அடங்காத
ஞானநிறை யம்பாரமே

மேதினியின் நொந்தாரை யேழ்பிறவி யின்றீர
மேவிட விடுந்தோணியே
மேதியில் வருங்கால னாரெமை யடும்போது
வீடுதவு சஞ்சீவியே

ஆதிய விரிஞ்சேச னாரரு ளிளங்காளை
ஆடியருள் செங்கீரையே
ஆறுமுக முந்தோளும் ஏரொழு கிளங்காளை
ஆடியருள் செங்கீரையே. 23

## 3. தாலப்பருவம்

கரியுரி கஞ்சுக மாகப் புலியதன்
கடிகமழ் பட்டாகக்
கனசடை முடிமயிர் முடியா கச்சிவ
கங்கையொர் பங்காகப்



பரிமள மதிகே தகைமட லாகப்
பாம்பிரு குழையாகப்
படுகனல் விழிபொட் டாகச்சூலம்
பாணியில் வாளாகத்

தெரிய விளங்கிய நான்மறை யாகிய
தேசியி லேறிமுனாட்
செட்டி தனக்கு வழித்துணை யாய்வரு
சேவக னுளமகிழத்

தரியல ருடலஞ் சாடிய வேன்முனி
தாலோ தாலேலோ
சரவண பவகர புரியுறை அறுமுக
தாலோ தாலேலோ. 24

செங்கையி லிடுவளை கலகல கலெனச்
செம்முலை வடமசையச்
சிலையெனும் நுதன்மட வனிதையர் குடைதரு
தெளிபுனல் நிறைவாவிப்

பங்கய மலரிடை இடையிடு பணிலம்
பவளச் செவ்வானிற்
பலபல முழுமதி நிலவிய வெனதிகழ்
பாலித் திருநாடா

கங்கையும் அரவும் இளஞ்சிறு பிறையுங்
கதிர்விடு கொக்கிறகுங்
கடிகம ழிதழியு மறுகும் எலும்புங்
கனசடை முடிசூடுஞ்

சங்கரர் மகிழ்வொடு தழுவிய பாலக
தாலோ தாலேலோ
சரவண பவகர புரியுறை அறுமுக
தாலோ தாலேலோ. 25

களைகளை கடைசியர் முலைகளில் ஒழுகிய
களப நெடுஞ்சேற்றிற்
கனவளை உழவர்கள் உழவென உழுதொளி
கான்றிடு விதையெனவே

விளைவய லிடைவெண் டரளந் தூவிவி
ரிந்தொளிர் தாரகைசூழ்
வேள்குடை யாமதி போலத னூடு
விளங்கிய பானாட்டா

வளமலை மகளுமை கௌரி புராதனி
மரகத வல்லிகையான்
மார்பி லணைத்தமு தந்தர உண்டு
மகிழ்ந்து வளர்ந்தணியும்

தளையவிழ் நீப முலாவுபு யாசல
தாலோ தாலேலோ
சரவண பவகர புரியுறை அறுமுக
தாலோ தாலேலோ. 26

வாவியுள் மேதியி னந்திரை வாரியுள்
மழைசொரி கருமுகில்போல்
வந்து பணிந்திட வாளையொர் கன்றென
மடிமுலை மேன்முட்டத்

தூவிய பான்மல ரோடை நிறைந்தனை
துன்றி வழிந்தோடச்
சோபன மாயுழு மள்ளர்கள் கால்வழி
தோறுமொ துக்கியிடப்

பூவிரை கமழும் பழனத் தலையிற்
புகுதச் சாலியெலாம்
பொன்னிற மாகியெழுந்து வளர்ந்து
பொலிந்தொளி யொடுவானந்

தாவிய பாலிநல் நாடுடை யாதிப
தாலோ தாலேலோ
சரவண பவகர புரியுறை அறுமுக
தாலோ தாலேலோ. 27

நிலனெனும் ஒருகுல மடமகள் சிறுபயி
ராயசி றார்களெலாம்
நின்று வருந்தி யிடாமல் முலைப்பால்
நேயமொ டீவதுபோன்



மலைதரு மருவி விரைந்து வரக்குற
வாணரி னங்களெலாம்
மகிழ்வுட னாடுகு றிஞ்சி நிலந்தனில்
வாழ்பசு மாமயிலா

பலபல முனிவர்கள் அடியிணை பரவிப்
பதமுடன் இசைபாடப்
பனிபடு சிறுபிறை ஒளியது மிளிரப்
பகிரதி முடிமீதில்

சலசல வெனநட மிடுமவர் பாலக
தாலோ தாலேலோ
சரவண பவகர புரியுறை அறுமுக
தாலோ தாலேலோ. 28

மந்திரம் அறியாய் ஆகமம் அறியாய்
மாமறை நூலறியாய்
வழிபட அறியாய் இன்றுன் பூசை
வழுவா வகைசெயவே

முந்திய காணியை யொற்றிவை என்று
மொழிந்திடு ஞாநியர்தம்
முடிசிறி யோனடி தீண்ட அவன்கை
முன்புதன் முடிதீண்டக்

குந்திய சிறுகால் நோவா ரச்சிவ
கொள்கையர் கொண்டாடக்
கோதறு சீதள நீரபி டேகங்
குறைவற வேபுரியச்

சந்திர மௌலி வளைத்தவர் பாலக
தாலோ தாலேலோ
சரவண பவகர புரியுறை அறுமுக
தாலோ தாலேலோ. 29

வேறு

செந்தமி ழாமலர் தூவிய வஞ்சமி
லாதத போதனர் சிந்தையொ ராலய
மாகிய சீமானே

செங்கதி ராரமு தூறிய வெண்கதிர்
சூழ்தரு மாமலை செண்டென வேவிளை
யாடிய கோமானே
வெந்தழல் போல்வரு தானவர் செங்கறை
வாரியின் மூழ்கிவெ றுங்குடன் மாலிகை
குடிய வேலோனே
விஞ்சையர் சேகரர் வாசவன் உம்பர்கள்
மாதவ ரோதிய மென்சிறு வாரிச
மாமிரு தாளோனே

அந்தர மாயுழ லாமலுன் அன்பர்க
ளோடெனை யாளும ருந்துணை யேயமு
தேகனி யேதேனே
அம்புய னாலறி யாமறை யின்பொரு
ளானது காணுமோ வஞ்சன மேயர
சேயடி யார்வாழ்வே

தந்தம தாசல மாமுக வெந்தைக
ணேசர்ச கோதர சண்டம யூரகு
ணாசல தாலேலோ
தண்டலை சூழ்கர னூருறை யுங்கும
ராமுரு காசிவ சங்கர னாரருள்
பாலக தாலேலோ. 30

அண்டர்க ளூர்குடி யேறவு மண்டிய
சூர்பொடி யாகவு மங்கையி லாழியில்
வேல்விடு மாசூரா
ஐம்புல னாலுழ லாமலும் அந்தக
னார்பிடி யாமலும் அன்றடி யேன்முடி
சூடிய சீர்பாதா

தெண்டிரை வாவியில் வாளையெ ழுந்து
நிலாமதி மேவுசெ ழுங்கமு காடவி
தாவிய பானாடா
செங்கம லாசனி தாழுமை கொங்கையி
லூறிய பாலமு துண்டழ காய்விளை
யாடிய சீராளா



வண்டு முகாரித நாசிகு றிஞ்சிவ
ராளிபூ பாள மகிழ்ந்திசை யாயிவை
ஓதிய தார்மார்பா
மந்தர மோடொரு மால்வரை வெஞ்சமர்
கோலிய தாமென வன்களி றானவை
பாய்மலை வாழ்தேவா
தண்டமி ழோதிய பாவலர் சஞ்சித
வேழ்பவ வேர்களை சண்டம யூரகு
ணாசல தாலேலோ
தண்டலை சூழ்கர னூருறை யுங்கும
ராமுரு காசிவ சங்கர னாரருள்
பாலக தாலேலோ. 31

மந்தர மாமுலை மாதர்ம கிழ்ந்துற
வாய்விளை யாடிய மண்டப மேடையின்
மேலொரு தேரோடே
வந்தெழு மாதவ னார்பரி யங்கெழு
வீணையி னோசை மகிழ்ந்திரு வார்குழை
யேறவு நடவாதே
அந்தர மேவிட வாரமு தந்தரு
மாமதி யானத தன்பிற கேவர
வீரிய வேளானோன்
அங்கையில் வாளிகள் தூவிய ருந்தவ
யோகிகண் மீதுந டந்தம ராடிய
பாலிம காநாடா
செந்திரு வேரக மாடர வின்கிரி
ஈசுர மாமலை செங்கழு நீர்மலை
யாடக மூதூரா
செந்தில ணாமலை கூடலு டன்கம
லாலய மேவிய செம்புய மாறுட
னாறுள தாளாளா
சந்திர சேகரி யாயிதி கம்பரி
நாரணி தான்மகிழ் சண்டம யூரகு
ணாசல தாலேலோ
தண்டலை சூழ்கர னூருறை யுங்கும
ராமுரு காசிவ சங்கர னாரருள்
பாலக தாலேலோ 32

பங்கய மோவர மோவுரு ஐங்கணை
யோபிணை யோபர வுங்கய லோகடு
வோவடு வோவேலோ
பைங்கமு நீர்மல ரோகரு குங்கட
லோநம னோபல பண்பயில் சேர்சர
மோமத வேள்வாளோ

வெங்கொலை யோகள வோவெனும் வஞ்சிய
ராசையி னாலவர் வெங்கணை யேபுகழ்
வாரொடு கூடாதே
வெண்பொடி பூசியி டாவலு வஞ்சக
மூடர்கண் மேலினி வெண்கவி மாலையெ
னாவது பாடாதே

மங்கல மாகிய நூலறி வுங்குல
மானமும் ஆளவ ரும்பசி யாலடி
யேனிட ராழாதே
வண்கதி ராதவ னார்வெயின் மஞ்சினை
யேநிக ராகிம றைந்திடு வாழ்வெனும்
மாயையில் வீழாதே

சங்கையி லாவினை யேனையுன் அன்பரோ
டாளும னோகர சண்டம யூரகு
ணாசல தாலேலோ
தண்டலை சூழ்கர ஹுருறை யுங்கும
ராமுரு காசிவ சங்கர னாரருள்
பாலக தாலேலோ. 33

## 4. சப்பாணிப்பருவம்

அண்டகூ டச்சிகர மடையத் துலங்கியணி
யானகமு காடவியெலா
மாதவன் மணித்தேர் வரும்பொழுது பட்டுதிரு
மாரங்க ளைப்பூவைமார்

வண்டலா யத்தவர்வ குத்தபா வைக்கினிய
மலையா க்கோத்திடு
மங்கையர் முலைக்குமிரு செங்கையில் வளைக்கும்
வள்ளைமே வியகுழைக்குங்



கொண்டலா குங்கரிய கொண்டைக்கு மமுதூறு
கோவைக்கு மழகானதோர்
கோகில மொழிக்குமவ ரோதிமந டைக்குமயல்
கொண்டிளைஞர் தூதுவிடவே

சண்டவே ளூர்திமறு கெங்குமார் கரஹுர
சப்பாணி கொட்டியருளே
சங்கரி திகம்பரி சிதம்பரி தருங்குமர
சப்பாணி கொட்டியருளே. 34

வேலியா குங்கமுக மெனுமடவி விடுபாளை
வீசுசா மரையாகவும்
வெண்சங்கம் ஓலமிடு மேரிமடை மதகுகண்
மேளவொலி போலிசையவும்

வாலிதாம் வயல்வனச மணிவிளக் கேந்தவும்
வண்டினம் பாடியிடவும்
வாடையுல வும்புதிய சோலைமண் டபநடுவின்
மாநடஞ் செயுமயூரங்

கூலியா கத்தரள மணியளந் திடுமுழவர்
கோதைமா ரருகிலணையக்
கோலமே னிச்சாயல் கண்டுநா ணிக்கரிய
கொண்டையது சாய்த்தொதுங்குஞ்

சாலிவா னளவிவளர் பாலிசூழ் கரஹுர
சப்பாணி கொட்டியருளே
சங்கரி திகம்பரி சிதம்பரி தருங்குமர
சப்பாணி கொட்டியருளே. 35

துந்துவெனு மொருநிருதன் அண்டரண் டந்தனது
தோள்வலியி னாளவதனால்
துன்பசா கரமூழ்கி இன்பசா கரமீது
துயிலுமா லுடன்மொழியவே

அந்தமா லும்பர்களை அஞ்சலென் றவனுடல்
அழிக்கவா யிரமுளரியால்
அர்ச்சிக்க வோராழி யன்றருள்வ ழித்துணைவ
ரங்கையாற் றழுவுமரசே

வந்தமத கரியொலியும் வாவுபாய் மாவொலியும்
மணிநெடுந் தேரினொலியும்
வந்தனைசெய் வார்களர கரவென்னும் ஒலியு
மட
மாதர்நட மாடுமொலியுஞ்
சந்தமறை யொலியுமலை யொலியுமிகு கரனூர
சப்பாணி கொட்டியருளே
சங்கரி திகம்பரி சிதம்பரி தருங்குமர
சப்பாணி கொட்டியருளே. 36

பொய்யா மொழிப்புலவர் மதுரையிற் சங்கம்
புரக்கவெழு நாண்மறவனாய்ப்
புறவற வளைத்தெனது பெயர்முட்டை பாடெனப்
பொன்போலு மென்றுபாட
வெய்யான பாலைக்கி தேலாது நும்பெயர்வி
ளம்பெனவிளம் பவவர்மேல்
விழுந்ததுளி யென்றெடுத் துப்பாடி யவர்நாவில்
வேல்கொடு பொறித்தசதுரா
மையான மஞ்சுதவழ் காவில்வா ழுதிர்புன்னை
மலரரும் பைத்தரளமா
வடபான திக்கரையின் வண்டலம் பாவைமுலை
மார்பினி லணிந்துமகிழ்வாய்த்
தையாவி ழிச்சியர்கள் விளையாடு கரனூர
சப்பாணி கொட்டியருளே
சங்கரி திகம்பரி சிதம்பரி தருங்குமர
சப்பாணி கொட்டியருளே. 37

பரமர்தரு மாதியுஞ் சிவஞான தானமும்
பரவுமை வகைவேள்வியும்
பலபலவி சிட்டகா ரணமோடு தருமமும்
பாதகமு முறைசொர்க்கமும்
நரகவிய லுஞ்சனன மரணவிய லுஞ்சொர்க்க
நரகசே டத்தினியலு
ஞானபோ தமுமினிய பரிகார மாமியலு
நற்கோபு ரத்தினியலுங்



கரகமல முடிமிசை குவித்துமன முருகியிரு
கண்கணீர் நின்றுசொரியக்
கடலேழு மங்கையிற் கொண்டகுறு முனியன்று
கயிலையங் கிரியின்மேவிச்
சரணதா மரைதொழ மொழிந்தகர னூராளி
சப்பாணி கொட்டியருளே
சங்கரி திகம்பரி சிதம்பரி தருங்குமர
சப்பாணி கொட்டியருளே. 38

## வேறு

துக்கமக லத்தினநி னைப்பவர்ம னத்திருள்து
ரத்தியம ணித்தீபமே
சுற்றியபி றப்பினிலி யற்றியவி னைத்திடர்து
வைக்குமொரு சிற்றானையே
மைக்கடுவ டக்கியவ ழித்துணைவர் பொற்புயம
லைக்கணியு முத்தாரமே
மற்றுநிக ரற்றசுரு திப்பொருள்க லைப்பொருண்ம
ணக்குமொரு கர்ப்பூரமே
நெக்குருகு சிட்டர்கள்கு ளித்திடவ ருட்புனனி
றைத்தருளு நெட்டோடையே
நித்தமுத திக்குளுத யப்பரிதி யிற்சுடர்நி
கழ்த்தியம ணிக்கோவையே
குக்குடமு யர்த்தருள்தி ருக்கரபு ரத்திறைவ
கொட்டியருள் சப்பாணியே
கொட்டமொடெ திர்த்தவசு
ரக்குழுவை வெட்டுமுனி
கொட்டியருள் சப்பாணியே. 39

புற்றரவு கச்செனவி சைத்தவர்ம ழுக்கனல்பொ
றுத்தகம லப்பாணியார்
புத்தமுதி னைச்சுரர்க ளுக்குதவி நச்சதுபொ
சித்தகரு ணைப்பார்வையார்
வெற்றியிட பக்கொடிய டைத்தவர்ந டத்தொழில்வி
ளைத்தவிரு பொற்பாதனார்

வித்தகர்வ ழித்துணைவர் பொற்புயம
ணைத்தவள்வி
ருப்பமுறு நற்பாலனே

சிற்றிடைவ ருத்துசிக ரக்கனத னத்தியர்தெ
றித்தகள பச்சேறுசூழ்
தெற்றிகள்பு லர்த்தமது ரத்தமிழ்ம ணத்தினொடு
சித்தசர்ம ணித்தேரதூர்

கொற்றமுள் நற்கரபு ரத்தறுமு கத்திறைவ
கொட்டியருள் சப்பாணியே
கொட்டமொடெ திர்த்தவசு
ரக்குழுவை வெட்டுமுனி
கொட்டியருள் சப்பாணியே. 40

கைத்தலம முப்பெறுக ணத்தவர்க ளூற்றகயி
லைத்திரும லைச்சூழலோ
கட்டழகு பெற்றொளிப ரப்புமது மட்டுடைய
கற்பகம லர்ச்சோலையோ

வெத்தலமு மெப்பொருளு மிப்படியெ
னச்சொன்மறை
யிற்பொருளி னப்பாலுமோ
விக்குவிலெ டுத்தமத னைப்பொடிப டக்கணிலெ
ரித்தவரி டப்பாகமோ

நித்தியம லத்தனுவெ னத்தவநி லைக்கணினி
னைப்பவர்ம னக்கோயிலோ
நித்தமு முனக்கிடமெ னப்பரவு பத்தர்தொழு
நித்தியக ளிப்பாகவே

கொத்தலர்வ யற்கரபு ரத்தறுமு கத்திறைவ
கொட்டியருள் சப்பாணியே
கொட்டமொடெ திர்த்தவசு ரக்குழுவை வெட்டுமுனி
கொட்டியருள் சப்பாணியே. 41

கற்றவறி விற்பெரிய வப்பரைமு ருட்டறிவு
கற்றவர்கள் கற்றூணிலே
கட்டியுத திக்குள்விட வப்பொழுத வர்க்கதுக
டக்கவரு ளைத்தூவுவா



ரெற்றுபுனல் மத்தமித ழித்தொடையெ ருக்கறுகி
ருக்குமுடி யெட்டாமலே
யெக்குமத லைக்குயரு முச்சியைய ளைத்தவரெ
டுக்குமிள மைப்பாலனே

உற்றிடுமு ழுத்தியர்மு கத்தில்விழி நித்திலமு
திர்க்குநளி னப்பூவின்மே
லுற்பலமெ னத்திகழ்வ தற்குழவர் வெற்றுளமு
ருக்கவரு மக்கோலவேள்

கொற்றவமர் முற்றியதி ருக்கரபு ரத்திறைவ
கொட்டியருள் சப்பாணியே
கொட்டமொடெ திர்த்தவசு ரக்குழுவை வெட்டுமுனி
கொட்டியருள் சப்பாணியே. 42

அப்புடைவ யற்கயல்கு தித்தெழவு திர்த்தகம
லத்தரள நற்சோதியா
லற்றையிரு ளைக்கடிய மைக்குவளை யிற்றுகள
தைப்பொருதி டக்காமவேள்

செப்புமதி முற்றிருளி லுற்றதென வட்டமுள
செப்பிளமு லைப்பாவைமார்
சித்தமும யக்கவிடர் சித்தமுமு றப்பொருதி
ருக்கரபு ரத்தேவனே

முப்பழமி தப்படுபொ ரிக்கறிப ருப்புநெய்மு
ளைத்துவரை யிக்கோடுதேன்
முக்கணவ லப்பமடை பிட்டுமது ரித்தவடை
முப்பொழுது முட்டாமலே

கொப்புணல்வ யிற்றிலடை யக்கொளுமவ வற்கிளவல்
கொட்டியருள் சப்பாணியே
கொட்டமொடெ திர்த்தவசு ரக்குழுவை வெட்டுமுனி
கொட்டியருள் சப்பாணியே. 43

## 5. முத்தப்பருவம்

சிலையுந்திகழ் பிறையுந்தொழு சிறுவாணுதன் மடவார்
சிகரக்கன தனமொன்றிய செம்மாமணி யொளியை

மலையின்மிசை யெழுமாதவ னென்றம்புய மலரும்
வயல்சூழ்கர புரிமேவிய மயிலேறிய வரதா
கலையின்படி நடவாதகொ டுஞ்சூரைய ழிக்குங்
கனதோள்வலி பெறவேசிவ கயிலைக்கிரி யுடையாள்
முலையுண்கனி வாயாலொரு முத்தந்தனை யருளே
முருகாஅரி முருகாவொரு முத்தந்தனை யருளே. 44

மாலானவர் பாலாழியுள் வளர்கின்றவ ளம்போன்
மழைமாமுகில் தவழுந்துய மணிமேடையி லேறப்
பாலார்மொழி மடவாரெறி செம்பந்துடல் பட்டே
பனிவான்மதி செம்மைப்படு பாலித்திரு நாடா
வேலாவுமை பாலாசிவ சீலாவனு கூலா
வேதாசுரர் நாதாமயில் வீராகர னூரா
மூலாகம வாயாலொரு முத்தந்தனை யருளே
முருகாஅரி மருகாவொரு முத்தந்தனை யருளே. 45

தீரக்கவி பாயப்பல தென்னம்பழ மடுவிற்
றிரளாய்விழ நெடுவாளைசி னத்தோடெதிர் நாடிப்
பாரப்புயல் தாவித்திகழ் பலவைப்பொரு துதிரும்
பலவின்சுளை யுடனேவரு பாலித்திரு நாடா
வீரப்பசு மயிலாகர புரிமேவிய வரதா
விண்ணோர்தொழு மிறைவாசதுர்வேதப்பொருள்கமழு
மூரற்றிரு வாயாலொரு முத்தந்தனை யருளே
முருகாஅரி மருகாவொரு முத்தந்தனை யருளே. 46

மற்றாருமொவ் வாமாதர்கண் மறுகெங்குமி றைக்கு
மணமார்பனி நீரோடிவ யற்போயது பாயப்
பொற்றாமமெ னச்சாலிவ ளர்ந்தேறிய பாலிப்
புனல்வேலையெ னச்சூழ்கர புரிவாழிளை யோனே
சிற்றாரமு தச்சோமன்மு டிச்சூடிந லஞ்சேர்
சேமேல்வரு மீசற்குப தேசந்தனை யருளு
முற்றாகம வாயாலொரு முத்தந்தனை யருளே
முருகாஅரி மருகாவொரு முத்தந்தனை யருளே. 47

கதிரானிறை செஞ்சாலியும் வயன்மேவுக ரும்புங்
கனசங்கமு மதியுந்திகழ் கமுகாடவி மானு



மெதிராதவ னெழுபோதல ருந்தாமரை மலரு
மெரிமுத்தம ளிக்குங்கர புரிவாழிளை யோனே
அதிராவருள் முகிலேநல மழியாமத களிறே
யறுமாமுக வரசேதொழு மடியார்பெரு வாழ்வே
முதிராமணி வாயாலொரு முத்தந்தனை யருளே
முருகாஅரி மருகாவொரு முத்தந்தனை யருளே. 48

வேறு

அருணாச லப்பதியை நினைவார்த மக்குமொளி
யழியாத பொற்ச பையைநே
ரறிவார்த மக்குமொரு கமலால யத்திலுட
லடைவார்த மக்கு மலைநீர்

வருகாசி யிற்சனன மொழிவார்த மக்குமருண்
மறைஞான முத்தி தமதூர்
மறுகேந டக்கிலருள் புரிவார்வ ழித்துணைவர்
மகிழ்வாய ணைக்கு மரசே

குருமாம ணிக்கிரண வெயில்வீசு முச்சியது
குவிகோபு ரத்தி லழகார்
கொடிமேவி ருக்குமுழு மதிதேவ ரிட்டவொரு
குடையாமெ னத்தி கழவே

திருநாள்பெ ருத்தகர புரிவாழ்தி ருக்குமர
திருவாயின் முத்த மருளே
சிறுதாம ரைக்குநிக ரறுமாமு கக்குழவி
திருவாயின் முத்த மருளே. 49

உருகாம னத்திமிர முடையேனி ரக்கமுட
னொருபூத ருக்கு முதவே
னுலகோர்ப ழித்தசெயல் புரிவேனி டர்க்கடலி
லுழல்வேனி ரக்க வெழுவேன்

மருவார்க றுத்தகுழன் மடமாதர் கட்கடையின்
மயலாலி ளைத்து மெலிவேன்
வழிபாடு மர்ச்சனையு மறியேனு ளக்கமல
மலர்மீதி ருக்கு முருகா

வருகார்வ யற்குவளை யளிபாடி யிட்டபொழு
தழகாயொ ழுக்கி யிடுதே

னடியாரி சைக்குருகி விழிநீர்து ளித்தருளு
மதுவாமெ னத்தி கழவே
திருவார்செ ழித்தகர புரிவாழ்தி ருக்குமர
திருவாயின் முத்த மருளே
சிறுதாம ரைக்குநிக ரறுமாமு கக்குழவி
திருவாயின் முத்த மருளே. 50

அரைமீது கட்டுநவ மணிநாணு நெற்றிதனி
லழகாய பொற்சு டிகையோ
டணிநீறு முத்துவட மிசைமார்பு நற்செவியி
லசைவாய பொற்கு ழையுநீள்
வரைவார ணக்கொடியு மயில்வாக னப்பரியு
மணநாறு சிற்றடியுமே
மலமாயை விட்டகல மறவாத பத்தருடன்
வறியேனை வைத்த தலைவா
விரைவாயொ லித்தபுனல் மதகூடு பட்டதிர
விசையாகி முட்டி யிளநீர்
விழவேகு தித்ததிக வலைவாண ரைக்கறுவி
விளையாடி யிட்ட கயல்சூழ்
திரைவாவி யுற்றகர புரிவாழ்தி ருக்குமர
திருவாயின் முத்த மருளே
சிறுதாம ரைக்குநிக ரறுமாமு கக்குழவி
திருவாயின் முத்த மருளே. 51

தவநாவ லிற்சடையன் மகவாயு தித்திறைவர்
தடையான்ம ணத்தொரு வியே
தமிழ்பாடி நற்பரவை யொடுகூட விட்டவிறல்
தனையோதி நெற்கு வையெலா
நவமாவ ழைத்தருளி நிதியாக மட்சிலைகள்
நதியூடு விட்ட பொருள்தான்
நலமார்கு ளத்தில்வர வருளானி னைத்தமலர்
நடமாடு மொற்றி நகர்வாழ்
அவள்தோள ணைத்தரனை யொருதூது விட்டருகி
லலராறொ துக்கி யடைவா



யவநாசி யிற்கரவு நுகர்சேய ழைத்தருளு
மவரோடு முத்த குதியோர்
சிவநூன் மணத்தகர புரிவாழ்தி ருக்குமர
திருவாயின் முத்த மருளே
சிறுதாம ரைக்குநிக ரறுமாமு கக்குழவி
திருவாயின் முத்த மருளே. 52

சதுமாமு கற்குநிகர் சிவநாதர் பெற்றசிவ
தருமாவு னக்கு முறைநீ
தவறாம லிப்பொழுது பரிபூச னைக்கிளையை
தருகாணி யொற்றி தரவே
யிதுதாய்த னக்குமொழி யெனுஞானி கட்சிசைய
வியலாவு ரைக்க வரனே
யினியேது திக்குமிலை யெனவாடு மப்பொழுதி
லிளையாய்ம னக்க னவிலே
விதவேதி யத்தலைவ னெனவாயு ரைத்தபடி
விடிபோது தற்சு தனைநீர்
விடமூழ்கி டச்சுருதி யறிவோதி யப்புமுடி
விடவேசி ரத்தை வளைவார்
திதமாய்வ ளர்த்தகர புரிவாழ்தி ருக்குமர
திருவாயின் முத்த மருளே
சிறுதாம ரைக்குநிக ரறுமாமு கக்குழவி
திருவாயின் முத்த மருளே. 53

## 6. வருகைப்பருவம்

செந்தா மரையிற் சிறுசதங்கை சிலம்பக்
குதம்பைக் குழைமின்ன
செம்பொன் னரைஞா ணெகிழ்ந் தொளிரச்
சிகரக்குடுமி யிசைந்தசைய
வந்தா தரவின் மணிவாயான் மழலை
காட்டி மரகதத்தாய்
மடிமீ தேறி முலையுண்டு வளர்ந்து
விரிஞ்சைப் பதிவாழுங்

கந்தா வருக மணங்கமழுங் கடம்பா
வருக வசுரேசர்
காலா வருக பன்னிரண்டு கையா
வருக வழித்துணைவர்

மைந்தா வருக மயிலேறு மன்னா
வருக வடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா மணியே
வருக வருகவே. 54

உருகா மனமுஞ் சிவஞான முணரா
வறிவு முனதுபுக
ழோதா நாவு மோதக்கேட் டுவந்தே
யினிய நதிபோலப்

பெருகா விழியு முடையேனைப் பிறவிக்
கடலில் வீழாமற்
பேணி யெடுத்திங் கெனதுள்ளம் பிரியா
விரிஞ்சைப் பதிவாழு

முருகா வருக சதுர்வேத முதல்வா
வருக வினைதீர்க்கு
முனைவா வருக மலராறு முகவா
வருக திருமாலின்

மருகா வருக மயிலேறு மன்னா
வருக வடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா மணியே
வருக வருகவே. 55

கண்ணா லுனது திருவடியைக் கண்டா
தரவு பெருகியிரு
கையாற் றொழுதுன் றிருக்கோயில் காலால்
வலஞ்செய் துனதுபுகழ்ப்

பண்ணா லுருகிப் புகழ்ந்துகண்ணீர் பாயா
வெனையுந் தாயாகப்
பரிந்து வளர்க்கும் பெருங்கருணை படைத்து
விரிஞ்சைப் பதிவாழு



மண்ணால் வருக வுலகமுழு தாண்டாய்
வருக கதிதருமெம்
மையா வருக வாறுமுக வப்பா
வருக விளங்குகதிர்

வண்ணா வருக மயிலேறு மன்னா
வருக வடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா மணியே
வருக வருகவே. 56

பூந்தா மரையின் மலருழக்கிப் புதுப்பூங்
குவளை நறவருந்திப்
பொய்கைக் கரையி லினிதேறிப் பொழிலிற்
றுயிலு மேதியினங்

காந்தா ரப்பண் ணளிபாடக் கேட்டு
முலையிற் சொரியும்பால்
கரும்புக் கழகு பெறப்பாயக் கமழும்
விரிஞ்சைப் பதிவாழுஞ்

சேந்தா வருக மரகதத்தின் சிறுவா
வருக குறிஞ்சிநிலத்
தேவா வருக விடரொழிக்குஞ் செல்வா
வருக பசுங்கடம்பின்

மாந்தா தணிந்து மயிலேறு மன்னா
வருக வடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா மணியே
வருக வருகவே. 57

தேவே வருக திருவிரிஞ்சைச் சேயே
வருக தெவிட்டாத
தேனே வருக சுவையமுதத் தெளிவே
வருக கதிகொடுக்குங்

கோவே வருக பெருங்கருணைக் கடலே
வருக கலைபொழியுங்
காரே வருக மரகதத்தின் கண்ணே
வருக விண்ணோர்கள்

கோவே வருக பரியகுணக் குன்றே
வருக வுபதேச
குருவே வருக சிவஞானக் கொழுந்தே
வருக வொருகரத்தின்

மாவே லெடுத்த பரப்பிரம வடிவே
வருக வடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா மணியே
வருக வருகவே. 58

வேறு

அரிய வடவரையை நிறுவி யெழுமதியை
யடைக லெனவரவு கயிறதா
வமுத மெனமுனிவ ரமர ரரிபிரம
ரசுர ரிவர்கள் கடல்கடையுநா

ளெரியி னுடல்கருக வரியி னுடல்கருக
விரவி யுடல் கருக வுலகெலா
மெரிய வெரிபுகையின் மறைய வளர்திசையி
னிபம தலறிவிழ வரையெலாம்

விரிய வெழுசலதி கமர்கள் படவருணன்
மிகவு மெலியமுகி லுருவுபோல்
விரவி யடர்தலொடு பரவி யெழுகொடிய
விடமு மமுதமென மிசையவே

கரிய மிடறுடைய விமல ரருள்குமர
கரபு ரியின்முருக வருகவே
ககன மெனுமுகடு மதிர நடனமிடு
கலப மயிலிறைவ வருகவே. 59

முனிவர் பரவியர கரென வமரர்தொழ
முயலன் முதுகுநெற நெறெனவே
முடியி லிளமதியு நதியு மசையமறை
முரல முழுதுமுடல் புளகமாய்

இனிய வரவுபுலி பணிய வடியர்மன
மிளகி விழிகண்மழை பொழியவே
யிரவி லழகுபெற நடன முடுகியிடு
மிறைவ ரருள்குமர வருகவே



புனித வமுதமெனு நதியில் வருகயல்கள்
புடையி லுழுமுழவர் வெருளவே
புதிய கதலிகனி யுதிர வெழவுமுத
புழுதி தனிலொழுகு மதுவினாற்

கனியு மளறுபடு பழன முடையசிவ
கரபு ரியின்முருக வருகவே
ககன மெனுமுகடு மதிர நடனமிடு
கலப மயிலிறைவ வருகவே. 60

பழைய வரவின்முது கொடிய நடனமது
பயில விரணியனை முனியவேழ்
படியை மலரடியி னளவு செயவமரர்
பசிய கலவமுது கடையவான்

மழையை யொருமலையின் மறைவு செயவிடையர்
மனையி லளைதிருடி வலுமையான்
மருது பொரவலகை முலையி னமுதுகொள
வலவன் மகிழ்மருக வருகவே

உழவ ருழுதுபயிர் முழுது மிடநறவ
மொழுகு குவளையெனு மலரின்மேல்
உலவி மதுரவிசை முரலு மளிகள்பெற
உதவி யிடுவதென வயலில்வாழ்

கழையின் விழுதரள மதியி னிலவுதரு
கரபு ரியின்முருக வருகவே
ககன மெனுமுகடு மதிர நடனமிடு
கலப மயிலிறைவ வருகவே. 61

அரையில் வடமசைய அழகு பெறுகுடுமி
யசைய வுமைமகிழ வருகவே
யலர்கொள் சரணவணி கலக லெனமழலை
யமுத மொழுகியிட வருகவே

இரையு முததியது சுவற அயிலைவிடு
மிளமை யிடுகுமரன் வருகவே
இனிய கவிதைகொடு நினது புகழ்பரவி
யெமது வினைகள்கெட வருகவே

வரைகொ ளரவமுயன் முசுவொ டிருளிமரை
வருடை கரடிகலை கவரிமான்
வழுவை யுழுவையரி மறவர் குறவ..தின
மருவு மலைகிழவ வருகவே

கரையி னதியினலை பொருது தரளமெறி
கரபு ரியின்முருக வருகவே
ககன மெனுமுகடு மதிர நடனமிடு
கலப மயிலிறைவ வருகவே. 62

அனகை யருள்பொழியும் விமலை யழகொழுகும்
அமலை யருள்குமர வருகவே
அசுரர் மகுடமணி சிதற வயில்விசிறும்
அறுமு கவவருக வருகவே

பனக மவுலியரன் மகிழ மறையிறுதி
பகரு மணியதர வருகவே
பரவி யெழுமுனிவர் பணியு மொளியுடைய
பவள விருசரண வருகவே

மனமு மொருமைபெற விழிக ளருவியென
வழிய வுளமுருக வருகவே
மறலி தொடர்புகெட வெனையு னடியரொடு
மருவி யிடவருள வருகவே

கனக மதிலருண கிரண மெனநிலவு
கரபு ரியின்முருக வருகவே
ககன மெனுமுகடு மதிர நடனமிடு
கலப மயிலிறைவ வருகவே. 63

## 7. அம்புலிப் பருவம்

நீல வூணினர்க ணாவை நீயிவனு
நீல வூணினர்க ணானவ
னேமி யங்குவடு சூழ்வை நீயிவனு
நேமி யங்குவடு சூழ்பவன்

ஏல நீயரிய மானு ளாயிவனும்
என்று மோரரிய மானுளான்
இருளு மாசினெயொ ழிப்பை நீயிவனும்
இருளு மாசினையொ ழிப்பவன்



ஓல மாமலையி லெழுவை நீயிவனும்
ஒப்பி லாமலையி லெழுபவன்
உனக்கி வாறுநிக ராத லாலிவனு
னைக்கு லாவியழை யாநின்றான்

ஆலு மாமயில னாடுதற் கமுத
அம்பு லீவருக வருகவே
அமரர் பரவுகர புரிய னுளமகிழ
அம்பு லீவருக வருகவே. 64

இன்ன நீமலைவ லஞ்செய் வாயிவனி
மைக்கு முன்னிலம்வ லஞ்செய்தோன்
எறிக திர்க்கிடைவை நீயு முச்சுடரில்
இவன வன்கதிர ழிப்பவன்

மன்னி வாழ்மறுமு கம்ப டைப்பையிவன்
மறுவி லாவறுமு கத்தினான்
வருமு கத்திருளொ ழித்திடாயிவனு
மனவ கத்திருளொ ழிப்பவன்

மின்ன ராவுகொளு முணவு நீயிவனவ்
விடவ ராவுண்மயில் வாகனன்
மேனி நீவளர்ந் தழிவை யென்றுமிவன்
மேனி தானுமழி யாதவன்

அன்ன தாலிவன் றனக்கொவ் வாயமுத
அம்பு லீவருக வருகவே
அமரர் பரவுகர புரிய னுளமகிழ
அம்பு லீவருக வருகவே. 65

வரிசை கொண்டகுடை நீய தாக விருண்
மாவை யூர்மதனன் வாழ்வையு
மனம கிழ்ந்ததிக மைத்து னச்சரச
வளமை யாலொழிய மாற்றியே

உரிமை கொண்டவவ னானை யின்பிடரில்
உன்னை வைத்தருளி நாடொறும்
உனக்க வன்கவிகை யாயி டும்பதமும்
உதவி னாலுமிவ னுதவுவான்

பிரிய மாயுனைவி ரும்பி வாவெனவ
ழைத்த பேறெவர்கள் பெற்றுளார்
பெற்றி யாலுனது பெற்றி யேயினிய
பெற்றி மாதவர்கள் காணுதற்

கரிய கந்தன்விளை யாடு தற்கமுத
அம்பு லீவருக வருகவே
அமரர் பரவுகர புரிய னுளமகிழ
அம்பு லீவருக வருகவே. 66

பத்தி யாயுலகை வட்ட மிட்டுவரு
பரப ரப்பினையு மாற்றுவான்
பழுது பட்டகலை முழுது முற்றிலகு
பண்பை யுந்தருவ னீதலான்

நித்த மாயுடல முற்றி டுங்குறையை
நீக்கி யேகருணை நோக்குவான்
நின்ம லர்க்கருளு மூல மந்திரமு
நின்செ விப்படவு மொழிகுவான்

தத்து சாகரம தற்கு ளுஞ்சனன
சாக ரத்துமுதி யாமலே
தண்டை கிங்கிணிச தங்கை கொஞ்சுமிரு
தாம ரைப்பதமு முதவுவான்

அத்தன் வேலன்விளை யாடு தற்கமுத
அம்பு லீவருக வருகவே
அமரர் பரவுகர புரிய னுளமகிழ
அம்பு லீவருக வருகவே. 67

எண்ணி லாதபல புண்ணி யங்களையி
யற்றி நெஞ்சிலிரு ளற்றபேர்
ஏத்தி யேத்தியவ ரோல மிட்டலறி
னுங்கி டைக்கவரி தானவன்

விண்ணி னூடுமறு வாய உன்னைவடி
வேலெ டுத்தகர நீட்டியே
வேத வாய்மழலை யால ழைத்திடவு
மேவி டாமலுமி ருப்பதோ



பண்ணி னால்மதுர மாக வேகவிதை
பாடு வார்வினைக ளோடவே
பச்சை மாமயிலி லேறி வந்திருப
தாம்பு யந்தனைய ளித்திடும்

அண்ணல் வேலன்விளை யாடு தற்கமுத
அம்பு லீவருக வருகவே
அமரர் பரவுகர புரிய னுளமகிழ
அம்பு லீவருக வருகவே. 68

பங்க யாசனனை வேத நுண்பொருள்வ
ராமை கண்டுமுடி குட்டியே
பாத தாமரையி னாலு தைத்திடர்ப
டுத்தி வன்சிறையில் வைத்தல்போல்

இங்கு நீயினிவ ராதி ருந்திடினெ
ழிற்க ரங்கொடுபி டித்துன்மேல்
எழுந்த கோபமொடு குட்டி வன்சிறையி
லிடுவ னின்றுனையு முண்மைகாண்

கொங்கு லாவுமிரு தண்டை யங்கழல்கள்
குந்தி நின்றுவிரல் சுட்டியே
கொஞ்சு வாய்மழலை மொழியி னாலிவன
ழைத்த சால்புகுறை யாமலே

அங்கை வேலன்விளை யாடு தற்கமுத
அம்பு லீவருக வருகவே
அமரர் பரவுகர புரிய னுளமகிழ
அம்பு லீவருக வருகவே. 69

பந்த நீகொளவி ருந்த வஞ்சகர்ப
துங்க வேபொருத றிவையே
பண்டு நாகரரி நம்பர் வந்தடிப
ணிந்த சால்புதனை யறிவையே

உந்தி நீமுழுகி டும்பெ ருங்கடலை
உண்ட வேலுடைய தறிவையே
உன்க ணேறுமர வங்க ளஞ்சிடவு
றிஞ்சு தோகையுள தறிவையே

இந்த நேரமிவன் நண்புகொண்டுபகை
யின்றி யேயினிமை யடையலாம்
எம்பி ரானெனமையு மன்பர் தங்களொடி
ணங்க வேகருணை யருளினான்

அந்த ணீர்வயல்வி ரிஞ்சை யம்பதிய
மர்ந்த வாறுமுக முடையவேள்
அம்பு லீவருகவென்ற னன்கடுகி
அம்பு லீவருக வருகவே. 70

எண்டி சாமுகரு மிங்கி தம்புகலும்
இந்த்ர தேவனுல கருளவோ
என்று நீகுடையெ னும்பெ ரும்பதவி
இன்ப வேளுலகை யருளவோ

வண்டு போலுமுரு நந்த னுந்திதனில்
வந்த வேதனுல கருளவோ
மந்த்ர வேதமுனி தந்தை யென்னவரு
மஞ்சு ரூபனுல கருளவோ

சண்ட வீரரெனு நண்ப ரொன்பதின்மர்
தங்க ளோடுறவு நல்கவோ
தண்டை சேரிருப தங்க ளுன்சிரசு
தங்க வோவெதுவு மறிகிலேம்

அண்டர் சூழ்திருவி ரிஞ்சை யம்பதிய
மர்ந்த வாறுமுக முடையவேள்
அம்பு லீவருக வென்ற னன்கடுகி
அம்பு லீவருக வருகவே. 71

வன்ப ராவுனைவி ழுங்கு துன்புறும
ருந்து நேயமுட னுதவவோ
மங்கை பாகர்பெறு மந்த மந்திரம
கிழ்ந்து நின்செவியின் மொழியவோ

உன்ச ரீரமரு வுங்க ளங்கமதொ
ழிந்து தீரவருள் புரியவோ
உன்றன் மேனியில குங்க வின்கொளவொ
டுங்கு கூனிமிர நினையவோ



இன்ப ஆரமுத மும்பர் பங்கினிலி
ருந்த மாபலனை யருளவோ
எங்க ளாலிவைதெ ரிந்தி லேம்புகலி
னின்று நீபெறுவ தென்கொலோ

அன்பர் சூழ்திருவி ரிஞ்சை யம்பதிய
மர்ந்த வாறுமுக முடையவேள்
அம்பு லீவருக வென்ற னன்கடுகி
அம்பு லீவருக வருகவே. 72

இஞ்சி சூழருணை யன்ப னன்புறவி
யம்பு பாடல்களை யறியலாம்
எங்கள் கீரன்மொழி யும்ப சுந்தமிழெ
னுஞ்சொல் வேதநிலை தெரியலாம்

விஞ்சு சூரர்களை வென்றி டுந்திறல்வி
ளம்பு காதைகளை வினவலாம்
வெந்த பூதியைய ணிந்த தொண்டர்கள்வி
ரும்ப வேகவிதை புகலலாம்

வஞ்ச மோடவரு தண்டை யங்கழல்வ
ணங்க லாமுலகை வலமதா
வந்து சூழ்வதிலும் இன்றி வன்றனைவ
லஞ்செய் தேபிறவி யொழியலாம்

மஞ்ச மார்வயல்வி ரிஞ்சை யம்பதிய
மர்ந்த வாறுமுக முடையவேள்
அம்பு லீவருக வென்ற னன்கடுகி
அம்பு லீவருக வருகவே. 73

## 8. சிற்றிற் பருவம்

வேதன் முடியிற் படுங்கமலம்
விண்ணோர் சிரத்தி லணிபதுமம்
விசய மயின்மே லெழுமுளரி
விமலர் புயஞ்சேர் திருக்கஞ்சம்

சாத மொழிக்கு மம்புயமெந்
தலைமே லிருக்கும் புதுநளினம்

தண்டை சதங்கை கிங்கிணிசேர்
சலசம் புவியிற் படலாமோ

காதம் புதிய மணங்கமழுங்
கடம்பா முருகா கதிர்வேலா
கந்தா குமரா பெருங்கருணைக்
கண்ணா வண்ணா கதியருளை

யாதண் களப மணிமார்பா
அடியேஞ் சிற்றி லழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே
அடியேஞ் சிற்றி லழியேலே. 74

வங்கத் தரங்கக் கடலன்று
மாயக் கிரவுஞ்ச கிரியன்று
வானத் துயரு மாவன்று
மருவா ருறையும் பதியன்று

துங்கத் தசுரர் முடியன்று
தொலையா வமரர் சிறையன்று
துரகக் கொடுமா முகியன்று
தொழுவார் பிறவித் துயரன்று

சங்கத் தவனு மலரோனுந்
தவளா சலத்தில் வருவோனும்
சரணஞ் சரண மெனும்புதிய
தண்டை முழங்குஞ் சிறுதாளால்

அங்கைக் கதிர்வே லுடையோனே
அடியேஞ் சிற்றி லழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே
அடியேஞ் சிற்றி லழியேலே. 75

பூத்தே யுலகம் புரப்பாளைப்
பொய்யர் தமக்குக் கரப்பாளைப்



பொழியுங் கருணை விழியாளைப்
பொற்புங் கற்பு மழியாளைக்

கூத்தை யுடையா னிடத்தாளைக்
குவிமா முலைமேல் வடத்தாளைக்
குறையா வெண்ணெண் கலையாளைக்
குளிர்சே ரிமய மலையாளை

மாத்தே வருக்குந் தெளியாளை
வணங்கு மடியார்க் கெளியாளை
வரையைச் சிலையா வளைத்தாளை
மறைக்கு முதலாய் முளைத்தாளை

ஆத்தே ஆத்தே யெனுங் குமரா
அடியேஞ் சிற்றி லழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே
அடியேஞ் சிற்றி லழியேலே. 76

பொய்யா வுளத்தி லிருப்பாரைப்
பொலியுங் கயிலைப் பொருப்பாரைப்
பொருமா கரியை யுரிப்பாரைப்
புரமூன் றெரிய வெரிப்பாரைக்

கையார் மறிமான் மழுவாரைக்
கமலா லயன்மால் தொழுவாரைக்
கனக சபையில் நடிப்பாரைக்
கங்கை முடியின் முடிப்பாரை

மையார் மலத்தை யொழிப்பாரை
மதவே ளெரிய விழிப்பாரை
மறலி நடுங்கப் பொருவாரை
வழிக்குத் துணையா வருவாரை

ஐயா வையா வெனுங் குமரா
அடியேஞ் சிற்றி லழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே
அடியேஞ் சிற்றி லழியேலே. 77

இம்மா நிலத்தை யளந்தானை
இகன்மா மருதம் பிளந்தானை

இலங்கா புரியைக் கெடுத்தானை
இமையோர்க் கமிர்தங் கொடுத்தானைக்

கைம்மா விடுக்கண் களைந்தானைக்
ககன மளவா வளர்ந்தானைக்
கன்றால் விளவை யெறிந்தானைக்
கருதா ருளத்திற் பிரிந்தானை

மைம்மா சுணத்தில் நடித்தானை
வருபா ரதத்தை முடித்தானை
வைய மனைத்தும் அயின்றானை
வடத்தி னிலையில் துயின்றானை

அம்மா னம்மா னெனுங் குமரா
அடியேஞ் சிற்றி லழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே
அடியேஞ் சிற்றி லழியேலே. 78

## வேறு

பசுமை மலர்த்தட நளின மளித்திரள்
படிவ வனற்சொரி கரிபோலே
பதும நிறத்தினை யறுபத முற்றுடல்
பவள மெனத்திகழ் வயலூடே

கசியு மதுப்பொழி குவ்ளை களைச்சில
களைக ளெனக்களை மடமானார்
கரகம லத்தினில் வளையொலி சித்தசர்
கலைக ளுரைத்தருள் கரனூரா

நிசியி னிருட்கண மெனுமுரு வத்தொடு
நிலவி னெயிற்றொடு முயர்வான்மேல்
நிலவிய செக்கரை யனைய மயிர்த்தலை
நிரையொடு முக்கிர முடனேசூழ்

அசுரரை வெட்டிய வயிலுள கைத்தல
அடியவர் சிற்றிலை யழியேலே
அழகொழு கப்புமு கொழுகிய பொற்புய
அடியவர் சிற்றிலை யழியேலே. 79



முதல்வ ரிணைப்பத மலர்கொ டரக்கிய
முனிவைநி னைத்தின மலையாதே
மொழிதி யெனக்கழல் செறியு மலர்ப்பத
முளரி தனைப்பணி குதல்போலே

கதிர்மணி யிட்டிழை கனகம திற்றிகழ்
கனவிட பத்தினை யடியூடே
ககனமு கட்டினி லிருளைய கற்றிய
கலைமதி யுற்றெழு கரனூரா

ததிபரு கச்சுதர் மலரி லிருப்பவர்
சனக ரகத்தியர் புலவோர்மா
தவர்கள் வசிட்டரொ டடியர் துதித்திரு
சரணம் விருப்பொடு தொழவேதான்

அதிமது ரத்துடன் மறைசொலு முத்தம
அடியவர் சிற்றிலை யழியேலே
அழகொழு கப்புமு கொழுகிய பொற்புய
அடியவர் சிற்றிலை யழியேலே. 80

மழையுரு வத்திரு வுருவு படைத்தவன்
மலரவ னுற்றிடு மிடமோவார்
மதலை தனக்குயர் முடியை வளைத்தருள்
வரதர் வழிக்கொரு துணையாவோர்

கழல்தொழு தற்கவர் வருபொழு துற்றிடு
களையக லப்பயி லுதல்போலே
கரிய மணிக்கிர ணமுமதி லிற்கன
கமுமரு வித்திகழ் கரனூரா

பழநி திருத்தணி யருணை யிடைக்கழி
பழமுதிர் பொற்கிரி யலைவாயோர்
பணிமலை சற்குரு மலையொடு பற்பல
பனிமலை யுச்சியி லுறைவோனே

அழலொளி கக்கிய அயிலுள கைத்தல
அடியவர் சிற்றிலை யழியேலே
அழகொழு கப்புமு கொழுகிய பொற்புய
அடியவர் சிற்றிலை யழியேலே. 81

இரவி ரதத்துள புரவி கடத்தளி
யிடவுயர் பொற்றிரு மதின்மேலே
எழுதிய சித்திர விடப மணிக்கொடி
இமையவர் கற்பக மலரூடே

பொரவத னிற்பரி மளநற வத்துளி
புயலுல கத்தருள் மழைபோலே
பொழிய வயற்றிகழ் பயிர்கள் தழைத்தெழு
புகழை விளக்கிய கரனூரா

வரமரு ளித்தன தடியவ ருச்சியின்
மலரடி வைத்ததி மதமாறா
மருவலர் முப்புர மெரிய நகைத்தடன்
மதனை யெரித்தவவ் வரையாளும்

அரன்மகி ழப்பொரு ளுரைசெயு முத்தம
அடியவர் சிற்றிலை யழியேலே
அழகொழு கப்புழு கொழுகிய பொற்புய
அடியவர் சிற்றிலை யழியேலே. 82

மழலை தனிற்சிவ மறைகள் முழக்கியு
மணியை முழக்கியு மணிவாயால்
வயிரை முழக்கியு மொருகுழல் பற்றியு
மகிழ்பறை கொட்டியு மணியாலே

இழைய மலர்ப்பத நடன மியற்றியும்
இசைகள் பயிற்றியு மகிழ்நானா
இரத மெனக்குல வரையை நடத்தியும்
இறைவர் களிப்பது பெறவேழ்பார்

முழுது மடிக்கடி யுலவியு மைக்குல
முதலை நடத்தியு மருவார்மேல்
மனியு மருப்பிரு பிறைநிகர் கைக்கய
முனியை நடத்தியும் விளையாடி

அழகிய பொற்கர புரியுறை யுத்தம
அடியவர் சிற்றிலை யழியேலே
அழகொழு கப்புழு கொழுகிய பொற்புய
அடியவர் சிற்றிலை யழியேலே. 83



## 9. சிறுபறைப் பருவம்

சந்தாச லம்பொருவு முலைசுமந் திழையெனச்
தளருமிடை யிந்த்ராணியும்
தடவிகட கரடகவ ளத்தவள வொருநாலு
தந்தவிறன் மாவுமணியும்

ஐந்தாரு வுஞ்சுரபி யும்படைத் திந்திரனு
மம்மனை பெறக்கருணையால்
அங்கைவேல் கோலாக வசுரர்முடி பந்தா
அடித்துவிளை யாடுமரசே

எந்தாயெ னப்பரவு தொண்டர்முடி மீதிலணி
இருபாத மலர்கமழவே
இன்பமட வார்கருங் குழலினுங் காமமுறும்
இளைஞர்தங் கொண்டைகளினும்

செந்தாழை யின்புது மணங்குலவு கரனூர
சிறுபறை முழக்கியருளே
திருமழலை மொழியின்மறை பலபல முழக்குமுனி
சிறுபறை முழக்கியருளே. 84

சந்தியினு மந்தியினு முள்ளும் புறம்பினுஞ்
சாகா வரம்பெற்றுழு
தண்டமுழு துந்தனது பெயர்நிறுவு மிரணியன்
றன்னைநர சிங்கவடிவாய்

வந்துமணி வாசற் படிக்கிடை கிடத்திமணி
மார்புகீண் டொளியுகிரினால்
மணிக்குடல் பிடுங்கியுதி ரந்தனை யருந்திய
மாமேக வண்ணன்மருகா

அந்தண ருரைத்தருளு மாகம முழக்கமும்
அமுதமெனு மொழிவனிதைமார்
ஆடலின் முழக்கமும் பாடலின் முழக்கமும்
அடியார்க ளோதியருளும்

செந்தமிழ் முழக்கமுமு ழங்குகர னூராளி
சிறுபறை முழக்கியருளே

திருமழலை மொழியின்மறை பலபல முழக்குமுனி
சிறுபறை முழக்கியருளே. 85

மத்தமத வாரணந் தன்னிழலை மாறென
வளர்ந்துவிசை யிற்பாயமேல்
மண்ணுருவி யரவின்மணி தெரிதரலு மற்றதன்
மருப்பிற் சொரிந்தமுத்தும்

புத்திரவி யுடன்மதிய மொத்தடவி யிருளெலாம்
போகத் துரந்துதிகழப்
பூமகள் முலைக்கணியு மாரவட மெனவருவி
புரளுமலை யாளுமிறைவா

சத்தநிலை வழுவாம லத்தமொரு சற்றுந்
தளர்ந்துவெளி றாமலமுதந்
தழுவுபதி னாறா யிரந்திருப் புகழெனுந்
தமிழ்மாலை சாற்றியுருகிச்

சித்திபெறு மருணகிரி நாதர்புகழ் கரனூர
சிறுபறை முழக்கியருளே
திருமழலை மொழியின்மறை பலபல முழக்குமுனி
சிறுபறை முழக்கியருளே. 86

மந்தமா ருதரதமு மந்திமா லைக்களிறு
மாசுக மெனுந்துரகமும்
வளர்மதிக் கவிகையுந் திரைகடற் படகமு
மைக்கோகி லக்காளமும்

கந்தமா மோலையுஞ் சுரிகையும் பெற்றொரு
கரும்பணி சுரும்புசிலைநாண்
கமழுமலர் வாளிகொண் டுலகமே ழும்பொருத
காமமத வேண்மைத்துனா

தந்திவாழ் பழனியங் கிரியினும் வெள்ளிமலை
தன்னிலும் அருணைதனிலும்
சந்ததமு முக்குவளை மலர்மருத் தணியாச்
செருத்தணி திருத்தணியினும்

செந்திமா நகரினும் பயில்குமர கரனூர
சிறுபறை முழக்கியருளே



திருமழலை மொழியின்மறை பலபல முழக்குமுனி
சிறுபறை முழக்கியருளே. 87

மலையைப் பிளந்தசுரர் மார்பைப் பிளந்துதிரை
வாரிநீ ருண்டுமகவான்
வாழ்வைப் புரந்தமரர் துன்பந் துரந்துவட
வரைபோல வருதாரகன்

தலையைப் பிளந்துபந் தாடிவே தாளபூ
தங்கள்பசி தன்னைமாற்றிச்
சண்டனணு காமலடி யாரிடர் துணிக்குமொரு
தனிவே லெடுத்தஅரசே

அலையிற் பொலிந்துவரு பாலியினில் வரும்வாளை
ஆயிரம் வலைபீறிநூ
றாளைவிழ முட்டிவிளை யாடிவய லோடிமிக
ஆரவா ரித்துமதவேள்

சிலையைத் தடிந்துவந் துலவுகர னூராளி
சிறுபறை முழக்கியருளே
திருமதலை மொழியின்மறை பலபல முழக்குமுனி
சிறுபறை முழக்கியருளே. 88

## வேறு

அதிர்த்திடு குரல்களு நெரித்திடு புருவமு
மழற்பொறி விழிகளுமாய்
அதுக்கிய சிறுபிறை யெயிற்றொளி களுநடை
அதிர்ச்சியு மணியணியாய்

விதிர்த்திடு படைகளு மழைப்புய லுருவமு
மிகுத்துள தலைகளுமாய்
வெளிப்படு மசுரர்கள் சிரக்குவை பலபல
விழப்பொரு மொருசதுரா

பொதுத்தனி லழகுற நடித்தவர் மழுவது
பொறுத்தவர் குறுகலர்வாழ்
புரத்தினை யெரிபட நகைத்தவர் மதனுடல்
புகைத்தவ ரமரர்களால்

முதுக்கொடு விடநுகர் மிடற்றின ரருள்குக
முழக்குக சிறுபறையே
முழுத்தமிழ் தெரிகர புரத்தறு முகமுனி
முழக்குக சிறுபறையே. 89

அருக்கனை முறுவலை யுதிர்த்தெழு மதியுட
லரக்கிய வெமனிருதோள்
அறுத்தொரு குயில்கொடி கரித்தலை விழவிழ
வடித்தம ரர்களுடனே

தருக்கொடு மகமது வளர்த்தவன் மணிமுடி
தரித்தவ னகமனையாள்
தரித்திடு குழையற வடித்தடி யவர்வினை
தவிர்த்திடு மவர்துணைவா

நெருப்பெழ விழிகளை விழித்தல கைகள்பல்
நிருத்தம திடுவெழுபார்
நெளித்திட வருநடை படைத்திடு மசுரர்கள்
நிணக்குவை குவைபடவே

முருக்கிய வடியயி லெடுத்தரு ளியகையின்
முழக்குக சிறுபறையே
முழுத்தமிழ் தெரிகர புரத்தறு முகமுனி
முழக்குக சிறுபறையே. 90

கருப்புவி லுடையவள் மலர்க்கணை யுடையவள்
கடைக்கணி லருளுடையாள்
கருப்புகு வினையனை யெடுத்தவ ளடியவர்
களித்திட வரமருள்வாள்

அருப்புறு மணிமுலை யுறுத்திட அமலனை
அணைத்தவ ளுலகமெலாம்
அளித்தவ ளுயிர்களை வளர்த்தவள் திரிபுர
மழித்தவள் இடரடையாள்

திருச்சடை மிசைமதி முடித்தவள் பலகலை
தெரித்தவ ளரியறியாள்
சிறப்புள வரமது பெருத்தவ ளிடையது
சிறுத்தவள் நிறையழியாள்



முருக்கித முமையவ ளளித்தருள் குருபர
முழக்குக சிறுபறையே
முழுத்தமிழ் தெரிகர புரத்தறு முகமுனி
முழக்குக சிறுபறையே. 91

இளைத்திடு பவவினை குளித்திடு மடியரை
யெடுத்திடு மொருபுணையாய்
எதிர்த்திடு மசுரர்கள் முடித்தலை யெனுமதி
லிடித்திடு மொருபடையாய்

அளப்பற வயனெழு தெழுத்தெனு மலினம்
அகற்றிடு மொருகலையாய்
அடித்தல நினைபவ ரிரப்பற நவநிதி
யளித்திடு மொருதருவாய்

விளக்கிய வடியயி லிருக்குமி னியவெழில்
விரித்தொளி விடுமுறையாய்
விரைத்தெழு கடுநடை விடைச்சிவ னுமையவள்
விழிக்கணி மதுமலராய்

முளைத்தம ரர்கள்பய மொழித்தரு ளியகையின்
முழக்குக சிறுபறையே
முழுத்தமிழ் தெரிகர புரத்தறு முகமுனி
முழக்குக சிறுபறையே. 92

வடித்திடு கணையென மணிக்குழை கறுவிய
மதர்த்திடு மிருவிழியால்
மணத்தொளி பலவிடு மகிற்புகை யிடுமது
மலர்ச்செரு கியகுழலால்

அடிக்கடி விடரறி வினைத்திரு டிகள்கள
வடக்கிய முறுவலினால்
அடற்சிலை மதன்முடி யசைத்திட லதுவென
அசைத்திடு மலைமுலையால்

எடுத்திரு கனதன முனைப்புட னனுதின
மிளைத்திடு கொடியிடையால்
இமுக்குடை மயலினை யளிப்பவர் வசமுறு
மெமக்குள விடர்கெடவே

முடிச்சடை யுடையவ னளித்தருள் குருபர
முழக்குக சிறுபறையே
முழுத்தமிழ் தெரிகர புரத்தறு முகமுனி
முழக்குக சிறுபறையே. 93

## 10. சிறுதேர்ப்பருவம்

மாதரிரு விழியாகு மம்புக்கு மதனவேள்
வாளிக்கு நடுவாகியே
மாலாகு மருணகிரி நாதரரு ணைச்சிகரி
வடவாச லிற்பயிலநம்

பாதமலர் பாடுநீ யென்னஅடி யேனுமெப்
படிபாட என்றஅளவில்
பத்திதரு முத்தநகை யத்தியிறை வாவெனப்
பாடென்று சொல்லியியலாற்

பூதலமு மெங்கிளையு மீடேற நாவிற்
பொறித்தவ ருரைத்தகவிதைப்
புத்தமுது பன்னிரு செவிக்குநிறை யக்கொண்டு
போதமு னளித்தருளினாற்

சீதளம லர்ச்சரண முதவுகர னூராளி
சிறுதே ருருட்டியருளே
செயசெயென அமரர்தொழ அசுரர்முடி சிதறுமுனி
சிறுதே ருருட்டியருளே. 94

ஓராயி ரம்பேரை வருடத்தி லொருநாளி
லுண்கின்ற கற்கிமுகிதான்
ஒன்றுகுறை யாகியிடு மன்றுநக் கீரர்வர
ஓடிப்பி டித்தவரையும்

காராய குன்றத் தடைத்துரிய நியதிக்
கடன்துறை முடிக்க அகலக்
கருதிமுரு காறவ ருரைத்தருள நீலக்
கலாபமயி லேறியணுகிப்

பேரான குன்றந் திறந்திவுளி முகியைப்
பிளந்துநக் கீரர்தமையும்



பெரியவேல் கொண்டுபுனல் கண்டுசுனை மூழ்கிப்
பிரான்முகலி நதியின்மேவச்

சீராய திருவருள் புரிந்தகர னூராளி
சிறுதே ருருட்டியருளே
செயசெயென அமரர்தொழ அசுரர்முடி
சிதறுமுனி
சிறுதே ருருட்டியருளே. 95

மரகதக் கொடிதவஞ் செய்தகதை யுங்கரி
மாயவன் புரமானதும்
வருகரன ருச்சித்த துஞ்சது முகக்கடவுண்
மாபூசை செய்தவாறும்

ஒருவழித் துணையான தும்பரமர் பரகதிக்
குதவியது மொருபாலனுக்
குச்சியை வளைத்ததுவு முத்தம வசிட்டருக்
கோதியருள் புரியுமுருகா

அரதனக் கடலிலெழு மாயிரங் கதிருடைய
ஆதவர் தமக்கழகதாய்
அலர்தூவி மேன்மே லருக்கிய மளிப்பதென
ஆகாய முகடுமுட்டத்

திரைவிரிந் தெழுபாலி நதிவருங் கரனூர
சிறுதே ருருட்டியருளே
செயசெயென அமரர்தொழ அசுரர்முடி சிதறுமுனி
சிறுதே ருருட்டியருளே. 96

வண்டியிரு சுடராக வையகந் தேராக
மாவாக நாலுமறையும்
வானவர்க ளனைவரும் பரிவார மாகமலர்
வாழ்பவன் பாகனாகக்

கொண்டுமலை சிலையாக அரவுநா ணாகமால்
கோலாக வழலாகவாய்
கோலிறகு காலாக வெந்துமுப் புரமெரிகொ
ளுந்தவெய் தவர்குமரனே

அண்டமள வாகுமணி மேடைதனி லேறிமல
ரளகமுகி லசையவழகாய்

ஆரவட மசையவதி பாரமுலை யசையவிடை
யசையமே கலைகளசையச்
செண்டுவிளை யாடிமட மாதர்பயில் கரனூர
சிறுதே ருருட்டியருளே
செயசெயென அமரர்தொழ அசுரர்முடி
சிதறுமுனி
சிறுதே ருருட்டியருளே. 97

பந்தாடு மடவார்கள் விளையாடு தற்கேறு
பாதசெம் பஞ்சுபதியப்
பரியநித் திலமேடை பவளமா மேடையாய்ப்
பரிதியின் கிரணமெனவே
நந்தா வெறிக்கவது கண்டிதழ்க் கதவுதனை
நளினந் திறக்கவதிலே
நறவொழுகி யோடியிட வயலின் பரப்பெலாம்
நதியின்ப்ர வாகமாக
வந்தார வாரமொடு பாலாறு டன்புகுத
வாழையின் கனிகள்சிதறி
வரமள்ளர் தேனுடன் பால்பழம் புசியுமென
வழிவந்த வர்க்கருளியே
சிந்தா குலம்பொடி படுத்தியருள் கரனூர
சிறுதே ருருட்டியருளே
செயசெயென அமரர்தொழ அசுரர்முடி சிதறுமுனி
சிறுதே ருருட்டியருளே. 98

வேறு

விழிததும் பியபுனலின் முழுகிவந் தனைபுரியு
மடியார்க ளுக்கமுதமே
வினையெனுங் குவடுபொடி படநடம் பயிலுமொரு
மயில்வாக னக்கடவுளே
பழிசுமந் திடுமசுரர் முடியொடுந் தலைசிதற
வடிவேலெ டுத்தஅரசே
பவமெனுங் கடலில்விழு மெனையுமன்
பெனுமினிய
கரையேற விட்டபுணையே



பொழிகரும் புயலனைய இனியஅம் பிகைமுலைகள்
பொழிபால் குடித்தகளிறே
புதியசெங் கமலமலர் சரவணந் தனின்மருவி
விளையாடி யிட்டவரசே
செழியசெந் தமிழ்குலவு திருவிரிஞ் சையின்முருக
சிறுதே ருருட்டியருளே
சிவசிதம் பரநடன மிடுதிகம் பரர்குமர
சிறுதே ருருட்டியருளே. 99

கனககிங் கணிகள்கல கலகலென் றொலிபரவு
மிருதாம ரைச்சரணனே
கடைபடுங் கடலிலெழு மமுதமுண் டவர்பரவு
கருணா கரக்குரிசிலே
மனமுமைம் புலனுமொரு வழிசெலும் படியெனது
மலமா சொழித்தகுகனே
வளர்சிலம் பிடைபொழியு மழையெனும்
படிசொரியு
மதவா ரணற்கிளையனே
தனனதந் தனனவென வளிமுழங் கியகுவளை
மணமாளி கைச்சதுரனே
தபனசெங் கதிருதய முலகறிந் துணரமுரல்
சரணாயு தக்கொடியனே
தினகரன் சசியளவு திருவிரிஞ் சையின்முருக
சிறுதே ருருட்டியருளே
சிவசிதம் பரநடன மிடுதிகம் பரர்குமர
சிறுதே ருருட்டியருளே. 100

முதியவம் புயனையொரு குடிலையின் பொருள்வினவி
முடிமீது குட்டுமுனியே
முழுதுமன் பர்களிதய மலர்குளிர்ந் தலரவரு
முதிராத பொற்பரிதியே
கதிபெறும் படியுலகி லுயிரெனும் பயிர்தழைய
அருள்நீ ரொழுக்கு முகிலே
கயிலையம் பிகைமுழுக வதரமஞ் சனமுதவு
மபிஷேக பொற்கலசமே

புதியசெந் தமிழ்மணமு மறையுடன் கலைமணமு
 மழியாம லர்க்குமுதனே
பொதியவந் தணனுருகி யுருகிவந் தனைபுரியு
 மறுமாமு கக்குழவியே

சிதைவிறண் டலைமருவு திருவிரிஞ் சையின்முருக
 சிறுதே ருருட்டியருளே
சிவசிதம் பரநடன மிடுதிகம் பரர்குமர
 சிறுதே ருருட்டியருளே. 101

உலகமுண் டுலகுதனை யொருபதந் தனிலளவு
 செயுநா ரணற்குமருகா
உதயசெங் கதிரனைய சரணபங் கயமெனது
 முடிமே லழுத்து முதல்வா

சலதிவெந் தலறியிட வரைபிளந் திடியவடி
 யயிலேவி விட்டதலைவா
தவமெனும் பெருமையுள குறியவன் பெறவினிய
 தமிழ்நூ லுரைத்தசதுரா

மலையினும் பெரியதன வினியவஞ் சியர்பயிலு
 மணிமாளி கைச்சிகரமேல்
மரகதஞ் சிறுபகலி லொளிதயங் கிடவதனை
 யிருண்மாலை யுற்றதெனவே

சிலைமதன் சமர்குலவு திருவிரிஞ் சையின்முருக
 சிறுதே ருருட்டியருளே
சிவசிதம் பரநடன மிடுதிகம் பரர்குமர
 சிறுதே ருருட்டியருளே 102

அகநெகிழ்ந் துருகியிரு விழிசலம் பொழியவுன
 திருதாள்து திக்கஅறியேன்
அனுதினங் கலைமறைகள் நெறிநடந் திடல்வழுவி
 அதிபாத கத்தைநினைவேன்

இகபரந் தனையறியு மறிவறிந் திடுமுனிவ
 ரிடநாடி யுற்றுமருவேன்
எனையுமன் பினர்களுட னடிமைகொண் டருளியெழு
 பவவே ரொழிக்குமரசே



மகரகுண் டலமசைய முலைசுமந் திடையசைய
 மலைபோலி ருக்குமுலைமேல்
மணிவடங் களுமசைய களபகுங் குமவிரக
 மடவார் நிருத்தமிடவாழ்

சிகரமண் டபமருவு திருவிரிஞ் சையின்முருக
 சிறுதே ருருட்டியருளே
சிவசிதம் பரநடன மிடுதிகம் பரர்குமர
 சிறுதே ருருட்டியருளே. 103

திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று

உ

# திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ்

## கவிராச பண்டாரத்தையா

### காப்பு

முகில்ஒன்று பாற்கடல் மடுப்பது கடுப்பநெடு
மோட்டுப் பனைக்கை நீட்டி
மூவுலகும் ஈன்றஉமை கும்பப் படாமுலை
முகட்டுப் பகட்டில் முட்டித்

துகில்ஒன்றும் உத்தரியம் நனைவுறப் பெருகுபாற்
றுள் அருவி வெள்ள மாந்தித்
தோய்ந்துநீந் திக்களித் தாடும்ஒரு கன்றானை
துணைஅடிக் கன்புசெய் வாம்

பகல்ஒன்று செஞ்சுடர் புறத்திருள்சு ருட்டும்அப்
பான்மைபோல் இருபொழுதும் என்
பல்வகை அகத்திருள்சு ருட்டும்ஒரு ஞானப்ர
பாகரனை மகளிர் கூந்தல்

அகில்ஒன் றிலஞ்சிகமழ் தென்இலஞ் சிக்குமர
குருபரனை அமரர் வாழ்வை
அள்இலைய வேற்கைப்பி ரானைப் பராவுறும் என்
அதிமதுர கவிதழைகவே.

### 1. காப்புப்பருவம்

### திருமால் துதி

தேமேவு தமிழும் கடம்பும் தடம்புயத்
திரள்மணிக் குவடு பூத்துச்
செக்கர்வான் என்னவரும் ஓர்ஆறு திருமுகத்
திங்கள்அம் சிறுகுழவியைக்



கோமேவு செந்தமிழ் இலஞ்சிவே லவனைத்ரி
கூடா சலத்தெம் பிரான்
கொத்தடியர் குலம்எலாம் தழையவரும் அரசிளங்
குமரனை வியந்து காக்கப்

பூமேவும் உந்தியில் பல்புவன பந்தியைப்
பூத்துமுறை காத்துநின்ற
பொருவரிய நீலப்பொ ருப்பைக் கருப்பைப்
புகாதுபுக் கிந்திரற்குக்

காமேவும் அரசிருப் புதவுசக் ராயுதக்
கடவுளைக் குடவளைக் கைக்
கண்ணனைத் தண்அம் துழாய்மௌலி யானைமங்
கலவாழ்த் திசைத்தும் அன் றே. 1

### சிவபெருமான் துதி

அரவின்முக மண்டலமும் அமுதமயம் ஒன்றநில
வார்சடைக் கொத்தேறு நீள்பிறைக் கீற்றனை
அமுதபலி தந்தபல முனிவரர் மடந்தையரும்
ஆசைமுற் றிச்சோரும் மாதவக் கூத்தனை
அருவிசொரி கங்கைமது ஒழுகிநுரை பொங்குபுனல்
வார்திரைச் சிற்றாறு சூழ்துறைத் தீர்த்தனை
அகிலபகிர் அண்டமும்ஓர் அடியினில் அளந்தமுகில்
காணுதற கெட்டாத சோதியைச் சீர்ப்பொலி

பரவைமனை சென்றுகவி பரவசம் இயம்பிவரு
தூதினைச் சொற்றருளும் நீதனைப் பூத்தொளிர்
பனிவரை மடந்தைபெறு குழல்மொழி மடந்தை ஒரு
பாகனைச் சொற்காதி போகனைப் பாக்கியப்
பலமிகுகு றும்பலவின் நிழல்மிகு விளங்குசிவ
லோகனைக் கர்த்தாவை ஏகனைக் கூர்த்தெழு
பழமறைகி டந்தலற வழிஅடியர் தொண்டன்இடு
பாதனைக் குற்றால நாதனைப் போற்றுதும்;

விரிதிரைமு கந்துநவ மணிவிசிறு செந்திநகர்
மேவுகப் பற்சேரும் ஆழ்கடற் சேர்ப்பனை
மிர்கமதக தம்பதள பரிமள சுகந்தபுய
பாரனைக் கற்பூர பாளிதக் காப்பனை

விகடதட கும்பகட கரடமத குஞ்சர
விநாயகர்க் கற்பமர்வி சாகனைச் சேட்பொலி
வெறிகமழ் குறிஞ்சிமனை வரையுறு மடந்தையால்
விகாரமுற் றுச்சாப வேடரில் தோற்றிய

குரிசிலை மணம்புணர்தல் குறமகள் விரும்பும்அநு
கூலனைக் கட்டாரி வேலனைக் கோற்றொடி
குலவுகர சுந்தரிபொன் மனையில்வளர் குஞ்சரி
மணாளனைச் சப்பாணி கூடுகைக் காப்பொலி
குமுறஒரு புண்டரிகன் மணிமகுட பந்திபுடை
கோபனைக் கற்றோர் குழாம்எழுந் தேற்றிய
கொழிதமிழ் இலஞ்சிநகர் தழையவள ருஞ்சிறு
குமாரனைக் கட்டாண்மை வீரனைக் காக்கவே. 2

## பராசக்தி துதி

வலம்புரிகொள் வீதியினும் வளர்கோ புரத்தினும்
வயங்கும்செறி நீள்அருவி மணிகாலும் வைப்பினும்
வழங்கும்ஒரு மூவரையும் மகவாய் வளர்த்திய
வளந்தரணி பீடநிலை சொலவே தொழப்புகல்

குலம்கெழு சுராதிபர்ம குடகோடி துற்றிய
கொழுங்கதிர் நிலாமணிகள் வெயிலாய் எரிக்கஓர்
குறும்பலவின் நீழல்உறை குழல்வாய் மொழிக்கொரு
குழந்தைஅடி யேமுழுதும் வழிபா டியற்றுவாம்

கலங்குகடல் நீர்சொரிய அயிரா வதத்தெழு
கடுங்குலிச தாரணனு மடவாள் குயத்திடை
கலந்தினிது வாழஒரு மயில்வா கனத்தெழு
கடம்பமலர் சேர்புயபன் னிருபார வெற்பனை

இலஞ்சிநகர் வாழ்பவனை எனைஆளும் அப்பனை
இலங்கிழை நலார்எழுத முடியாத பொற்பனை
இலங்குசுடர் வேலவனை இமையோர்கள் வைப்பைஎன்
இளங்குமர நாயகனை இயல்பாய் வளர்க்கவே. 3

## செண்பக விநாயகர் துதி

ஆனனம் விளங்கிய பனைத்தடக்கைச் சேர்த்தெழு
பாரதப் பெருங்கதை வடித்தெடுத்துக் காட்டிஓர்
ஆயிர நெடுஞ்சிகர புத்தகத்தில் தீட்டி
அராமுடி அகன்புவி புரக்கும்ஒற்றைக் கோட்டனை



வானவர் பெருந்தகையை வச்சிரக்கைப் பார்த்திபன்
மாமுடி புனைந்தசர ணத்தனைப் பற்றார்க்கொரு
வாலுளை மடங்கலென நிற்கும்வெற்றித் தாக்கனை
மாரிசொரி செண்பகவனக்களிற்றைப் போற்றுதும்

பானல்கம முஞ்சரவ ணத்துதித்துக் கார்த்திகை
பால்ஒழுகு கும்பமுலை யைக்குடித் துப்பார்த்தெழு
பார்வையில் இரங்கிஒரு பட்டுடுத் துப்போர்த்த
படாமுலை முகங்களில் எடுத்தணைத் துப்பார்ப்பதி

வானுலவு செங்கண்விடை மத்தர்வைத் துத்தேற்றிடு
வானிகர வந்தசிறு பொற்றளிர்க்கைக் காப்பனை
வாழ்வுறும் இலஞ்சிநகர் வைப்பை எய்ப்பிற்காக்கும்
மனோகர துரந்தர மணிப்பொருப்பைக் காக்கவே. 4

## திருமகள் துதி

வெங்கடாங் கரடக் கடாங்கவிழ்த் தூற்றுமத
வேழங் கடாந் தடக்கை
வெம்பணி பிணித்தசெம் பருதிபொரு வுஞ்செம்பொன்
விம்பகும் பங்க ளாட்டப்

பொங்குபூண் நகுகும்பம் ஏந்துபைங் கூந்தல்அம்
பிடிகள்போற் கவரி காலப்
புடைநின்ற முடிபொறுத் தரிவனப் பூந்தவிசு
போந்தபெண் அரசு காக்க;

கொங்குலாம் செழுமலர் இலஞ்சியிற் சினைவரால்
கொழுமலர் இலஞ்சி யிற்போய்க்
கொண்டல்நுண் துளிகொண் டிரங்குதென் இலஞ்சியிற்
குமரனைச் சமர்க டந்த

சிங்கமா முகனைமுதல் இட்டபகை வேர்அறச்
செவ்வேல் வலந்த ரித்துத்
தேவேந் திரற்கர சளித்ததிறல் ஆளியைத்
தேவர்சே னாபதி யையே. 5

## பிரமதேவன் துதி

திணிகொண்ட மூதண்ட மண்டபம் பணிகொண்டு
சீவகோ டிகள்உ யிர்த்துச்
செந்தா மரைப்பொலந் தவிசில்வெண் தாமரைத்
தேவியுடன் மேவி ஏவற்

பணிகொண்ட மகவாடல் கண்டனைய விளையாடல்
பார்த்தகம் மகிழ்ந்துபூத் துப்
பல்ஊழி வாழும்ஒரு தொல்பெருஞ் செல்வம்
படைத்தவன் காக்கமன் னோ;

மணிகொண்ட கட்செவி நிதம்பக் கதம்பமுலை
வள்ளிபடர் கொழுகொம்ப ராய்
வளர்கின்ற பன்னிரு தடம்புயனை என்இருகண்
மணியைமா ணிக்கமலை யைத்

தணிகொண்ட கொண்டல்நுண் துளியும்வெண் தரளநிரையும்வண்
தாரகையும் நிரைகிடப்பத்
தண்டலை தழைத்தசுப் பிரமணிய புரவசதி
தருகுமர குருபரனை யே. 6

## நாமகள் துதி

முத்தமிழ் ஒருத்தனுக் கருமறைக் கெட்டாத
மூர்த்திகுற் றேவல் கேட்க
முற்றிவிக் குந்திர முடத்தேன் முகந்துமணி
முடிவேந்தர் முன்றில் எதிர்போந்

தித்திறத் தரியா சனந்தர்அயி ராசபதம்
எய்திஇக மும்பர மும்வாய்ந்
தெம்மனோர் செம்மாந் திருக்கப் பெருங்கல்வி
இறைமைதரும் இறைவிதுணை ஆம்;

சித்தசனன் மைத்துனனை அத்திமுக னுக்கிளைய
சிங்கத்தை வென்சூர் அறச்
செஞ்சேவ லங்கொடி உயர்த்தபைங் கரம்ஒன்று
தேவர்கோ மகன் முடிக்கு



வைத்துமுழு தாண்டதென் இலஞ்சிநகர் ஆதிபனை
வரைபக எறிந்தவேற் கை
மறவனைத் தழையுமர கதகலா பமயூர
வாகனனை வாழ்விக்க வே. 7

## சத்தமாதர்கள் துதி

பொன்னில் சிறந்திட்ட புலமையில் தலைமையில்
பொய்யாத மெய்உணர்வி னில்
பொற்புண்ட ரீகபத பூசனையில் வாசனை
பொருந்தப் பயிற்றிமுழு தும்

என்னைப் புரந்துகொண் டன்றே தனக்கடிமை
என்றுவிலை ஓலையிட்ட
எம்பிரான் செந்தமிழ் இலஞ்சிப் பிரான்பொருட்
டெழுவரையும் அஞ்சலிப் பாம்;

அன்னத்தில் வருமயிலும் மயிலில்வரு கிள்ளையும்வெள்
ஆனையில் தோன்றுபிடி யும்
ஆனின்வரு மானும்முது கலையில்வரு மானும்புள்
அரசில்வரு கரியகுயி லும்

முன்னுற்ற சிங்கப் பொருப்பில்வரு கால்மாவும்
முதிர்பரவை காற்றின்அணு கல்
முடுகாமல் மாற்றிநின் றேற்றகுழ விப்பருவம்
முழுதும் புரக்கஎன் றே. 8

## காளி துதி

பாமிழற்றும் பாணர்எனப் பண்மிழற்றும் சுரும்பு
பந்தியிருந் தந்திநறை பருகுதரைப் பாண்டிக்
கோமகற்குச் சென்னிபயந் தளித்தகுல மகள்தன்
குலமகட்கு மகன்எங்கள்குருபரனைக் காக்கத்

தேமலர்ச்செண் பகக்காவும் திரிகூடச் சிலம்புஞ்
சினகரமும் நன்னகரும் தைன்றல்உலாம் திசையும்
மாமணிச்சங் காவணமும் மன்றும்என்றும் காக்கும்
மங்கையைநம் குற்றால நங்கையைவாழ்த் துதுமே. 9

## முப்பத்துமுக்கோடி தேவர்கள் துதி

கொச்சைப் புனத்தில் குறிஞ்சிக் கொடிச்சியர்
குழாத்தூ டொருத்தி வளரக்
கொற்றமகள் அன்றிட்ட வாகையும் தும்பையும்
பின்னிக் கிடந்து குலவக்

கச்சைப் பொருந்தனத் திந்திர குமாரத்தி
காதல்மண மாலைசூட் டுங்
கற்பகப் பந்தரில் காப்பேந்தி நின்றவன்
காக்கமழ் இலஞ்சிகாப் பார்;

பச்சைப் பசும்புரவி மான்தேர் மிசைத்தோன்று
பண்ணவர்கள் பன்னிருவ ரும்
பரிமுகக் கடவுளோர் இருவரும் பொருவரும்
பசுபதிகள் பதினொரு வரும்

இச்சைப் படுந்திறத் தெண்மரும் எனத்தொகுத்
தெண்ணுமுப் பான்மூவ ரும்
இக்கோடி முப்பத்து முக்கோடி என்றதொகை
அமையவரும் இமைய வருமே. 10

## 2. செங்கீரைப் பருவம்

மேனைப் பிராட்டிதரு பெண்அரசி உள்உவகை
வெள்ளத்தில் ஆட்டுவது போல்
வெள்ளிவரை முன்றில்வாய் பொன்நூபு ரந்தள்ளி
மிளிர்கணைக் காற்கிடத் தி

ஏனைப் பசுங்குங் குமந்திமிர்ந் தீர்ம்புனல்
எடுத்தெடுத் தாட்டிவிரல் சேர்த்
தின்னினிய மஞ்சள்நீர் மும்முறை சுழற்றிவார்த்
திருநிலக் காப்ப ணிந்து

சோனைக் குறுந்திவலை பட்டாடை இட்டுத்
துவர்த்திவெண் நீறுசார்த் திச்
சுடர்மா ளிகைப்புகுந் தேந்துமுலை 'அமிர்தம்
சுரந்திருந் தூட்டிமட வார்



சேனைக்குள் வைத்துமுத் தாட்டும் பசுங்கிள்ளை
செங்கீரை ஆடி அருளே
தெரிதமிழ் இலஞ்சிநகர் வருகுமர நாயகன்
செங்கீரை ஆடிஅரு ளே. 11

தார்ஆடு கிண்கிணிச் செந்தாள் துதைந்தாடு
தமனியத் தொட்டில் ஆடத்
தண்பவள மெல்விரல் அதுக்கிச் சுவைத்தன்னை
தாலாட்டும் இன்னிசை மடுத்

தேர்ஆடு மெய்துவண் டிணைவிழி முகிழ்த்தயர்ந்
தன்துயில் வரத்துயின் றாங்கு
இடைவரு பதத்துணை எழுப்பப் புலந்துவயி
றெக்கிக் குழைத்துவிம் மிப்

போர்ஆடு கன்றெனத் துள்ளிஎழு பொருமல்
பொறாதுவந் தேந்திமோந்து
பொற்குழிசி ஊறுபால் வெண்சங்கு வைத்துப்
புகட்டத் தெவுட்டிமெள் ளச்

சீர்ஆடி எதிர்நிலைக் கண்ணாடி நிழலுடன்
செங்கீரை ஆடி அருளே
தெரிதமிழ் இலஞ்சிநகர் வருகுமர நாயகன்
செங்கீரை ஆடிஅரு ளே. 12

பொருமல்அறி விக்குங் கடைக்கண் குறுந்துயில்
பொடிக்குமுன் அடுக்க வருவோம்.
பொன்மேனி பாயலிற் பூந்தாதும் ஏந்தாது
புதுநீர் எடுத்தாட் டுவோம்

பருமுலை அருத்தித் திருத்திவைத் தின்மொழி
பகர்ந்தணைத் துச்சி மோந்து
பசுமஞ்சள் இனியநீர் மும்முறை சுழற்றிஅப்
பால்ஊற்றி வாழி என்போம்

அருமணி நுதற்சுட்டி கட்டிஒரு பொட்டும்இட்
டண்ணல்வெண் நீறும்அணி வோம்
ஆட்டாத சரவணப் பூந்தொட்டி லிற்கிடந்
தாடின படிக்கு வனசத்

திருமுகம் மலர்ந்துகுழை ஆடவிளை ஆடிநீ
செங்கீரை ஆடி அருளே
தெரிதமிழ் இலஞ்சிநகர் வருகுமர நாயகன்
செங்கீரை ஆடிஅரு ளே. 13

பட்டபுனல் நித்திலம் எனத்திகழும் வட்டவரி
பாசிலைய நெட்டை நெடிய
பச்சைப் பசுந்தாட் கழுத்தளவு நீருட்
பயின்றீன்ற மெல்அ ரும்பு

வட்டம்இடு பானலைப் புறநிறுத் திசைமுரலும்
மழலைச் சுரும்பர்வீழ்ந்து
வாய்மடுத் துண்ணக் கபாடம் திறக்கும்ஒரு
வள்ளமாக் கொள்ளை நறவம்

கொட்டுபு செழுங்குங் குமத்தா திறைக்குங்
குறுந்தகட் டல்லி புல்லிக்
கோட்டோ டலர்ந்துகமழ் செக்கச் சிவந்தபொற்
கோகனக மண்ட பத்தில்

சிட்டர்தொழ வாழும்ஒரு செல்விதிரு மருமகன்
செங்கீரை ஆடி அருளே
தெரிதமிழ் இலஞ்சிநகர் வருகுமர நாயகன்
செங்கீரை ஆடிஅரு ளே. 14

கங்கா நதிக்குநிகர் கடவுள்நதி களின்அதிக
கவின்மணல் தங்கு கழியில்
கதிர்மணிக் குன்றுபொதி புன்னையங் காவில்மென்
காவியங் கயல்பொரு தலைக்

குங்கால் இலக்கால் கொழிக்குமடை களில்மடைக்
கோவுகண் ணாற்றுவயலில்
குளிர்வயல் மருங்குவெண் முல்லைமல்
லிகைவைத்த
கொல்லையில் கொல்யானை வாற்

பைங்காற் பசும்பொற் பொகுட்டுத் தகட்டிதழ்ப்
பங்கேரு கப்பொய்கை யில்
பங்கேரு கச்செல்வி விளையாடு பதிகளில்
பதிநிலா நுதலா ருடன்



செங்கால் அனங்கள்பயில் தென்ஆர்ய நன்னாட
செங்கீரை ஆடி அருளே
தெரிதமிழ் இலஞ்சிநகர் வருகுமர நாயகன்
செங்கீரை ஆடிஅரு ளே 15

இந்திரன் அங்கி யமன்கொடி யன்புனல்
ஈசன் நெடுங்கா லோன்
எண்தரு சந்திரன் இந்து வனைந்தவன்
மால்அயன் என்போர் தாம்

தந்தம் இடங்கள் புரந்திட வந்த
தபோதனர் சந்தோடர்
சங்கதி யும்சடை யும்கிர மங்களும்
வேதமும் நின்றோத

மந்தரம் என்ற தனங்கள் சுமந்த
மாதர் வளம்பாட
மங்கல சங்கம் முழங்க வலம்புரி
வால்வளை நின்றூத

அந்தர துந்துபி பொங்க இளங்குகன்
ஆடுக செங்கீரை.
அண்டர் வணங்க இலஞ்சி உகந்தவன்
ஆடுக செங்கீ ரை 16

வாழி மடற்பா ளைக்குழல் சரிதர
வார்கெழு பந்தாடும்
மாதர் இளைப்பா றத்தனி வருசிறு
கால்விசி றுங்காவில்

வீழிஇ தழ்க்கா லித்துணை விழிமணி
வேரல் நெடுஞ்சாரல்
வேடர் குலப்பா வைக்கொரு புதுமண
மாலைபு னைந்தாய்நீ

சூழிமு கத்தா னுக்கிளை யவன்உயர்
தோகையர் மன்றாடு
சூலம்எடுத்தா டிப்பலி கொளுமதி
சூடித ரும்பாலன்

ஆழித ரித்தோ னுக்கொரு மருமகன்
ஆடுக செங்கீரை
ஆறுமு கப்பே ரிக்குரு பரன்இனி
தாடுக செங்கீ ரை. 17

மாதளை ஊடே மாவின் நறுங்கனி
வீழ்தர மந்தாரை
வாடியின் ஊடே வாழை நறுங்கனி
வீழ்குலை சென்றேழு

காதமும் மாறா வாசனை தந்திட
மூசு சுரும்பேறு
காவிக ளோடே கார்வய லின்புடை
ஓடைப ரந்தோடி

மேதகு பாரா வாரம் வளந்தர
வேர்கவி சம்பீர
வேலியின் ஊடே பால்மணி சங்கினம்
வீசவ ளங்கூரும்

ஆதிபி ரான்ஊர் ஆளும் நெடுந்தகை
ஆடுக செங்கீரை
ஆரண நூலோர் தேடும் இலஞ்சிமன்
ஆடுக செங்கீரை 18

உருவப் பிடிநிகர் பருவக் குறமகள்
பந்தா டுங்காவூ
டுருகிக் கனமயல் பெருகிக் கருகி
உழன்றே நின்றாய்வோய்

அருணைக் கிரிபுனை தெரியற் பெரியபி
ரபந்தா லங்காரா
அசலக் குறுமுனி பணியப் பணிவிடை
கொண்டா ளுந்தாளா

இருவர்க் கரியவர் பவளச் சடையினர்
மைந்தா ஐந்தூரா
எளியற் கருள்புரி கருணைக் கடலெனும்
எந்தாய் செந்தூரா



திருவிற் பொலிதரு பழனிக் குருபர
செங்கோ செங்கீரை
திமிரப் பரமத படலத் தினகர
செங்கோ செங்கீரை. 19

கும்பக் குறுமுனி வந்தர்ச் சனைபுரி
குன்றே சென்றே ஓர்
குன்றிற் சிறுகொடி ஒன்றிப் படர்கொழு
கொம்பே எங்கோவே

அம்பொற் றளிர்அடி நம்பித் தொழும்அவர்
அன்பே என்பே றே
அங்கட் புலிமுதல் அண்டத் தளவுள
அஞ்சே செஞ்சே யே

வம்புப் பிறவியி டும்பைக் குதவும்
மருந்தே செந்தே னே
மன்றற் குழல்மொழி முன்றிற் பயில்சிறு
கன்றே வென்றே வேல்

செம்பொற் கையில்அணி செந்திற் கதிபதி
செங்கோ செங்கீ ரை
செஞ்சொற் பழகும்இ லஞ்சிக் குருபர
செங்கோ செங்கீ ரை. 20

## 3. தாலப்பருவம்

கடவுட் புலம்போய்க் கற்பகத்தின்
காவோ டிகலி உயரியபைங்
கமஞ்சூற் கமுகின் மிடறுவிண்ட
கற்றைத் துணர்ப்பூ விரிக்கவரி

துடைவைப் புதுப்பூந் தொடைஅழகார்
சுரமா மகளிர் பணிமாறும்
துணைப்பூங் கவரி உடன்பயின்று
சுடர்வெண் தரளம் இடைகலந்த

முடவுப் பிறைநான் கெனமுளைத்த
முனைவாள் மருப்புப் பொருப்புகைத்து
முற்றும் பவனிக் குலிசபதி
மொய்ம்பிற் சிறுகால் முகந்தெறியும்

அடவிப் பொதும்பர் செறி இலஞ்சிக்
கரசே தாலோ தாலேலோ
ஆறு முகத் தெம் பெருமானே
ஐயா தாலோ தாலேலோ. 21

பொலங்கற் பகத்தின் சினைபூத்த
பொன்னந் துணர்ப்பூந் தாதுபடி
புனிதச் சுரும்பர் முகடுரிஞ்சும்
புயல்காற் றரும்பின் மிசைபூத்த

கலங்கற் பசுந்தேன் உவட்டெறிபூங்
கனியின் சிறப்புக் கடைக்கணித்துக்
கனகா டவிஎன் றுவந் தடுக்கக்
கடுக்கைப் புறவம் தோன்றுதலும்

விலங்கற் கரிதாய்ப் புகுந்தயலே
வேரிப் புதுச்சண் பகச்சோலை
விழையா மருதப் பேட்டளியை
வேட்டங் கணையும் இலஞ்சிவெற்றி

அலங்கற் குடுமி இலங்கிலைவேல்
அரசே தாலோ தாலேலோ
ஆறுமுகத்தெம் பெருமானே
ஐயா தாலோ தாலேலோ. 22

கள்ளத் தடங்கண் கடைசியர்கைக்
கருங்காப் பிடறிக் களைபறித்த
கற்றைக் கழுநீர்ப் பொதிசரித்துக்
கமுகின் பழுக்காய்க் குலைசிதறி

முள்ளுப் பொதிந்த குடக்கனியை
முடத்தேம் பலவ முகந்துடைத்து
மொய்பூந் தேமாங் கனிஉகுத்து
முழுக்காய்க் கதலிக் குலைசாடி

வெள்ளைப் பெடைஓ திமங்கிடந்த
வேலிப்புறத்திற் பழுத்தஎலு
மிச்சங் கனிபந் தடித்துவெடி
வாளைப் பகடு விளையாடும்



அள்ளற் பழனத் தமிழ்இலஞ்சிக்
கரசே தாலோ தாலேலோ
ஆறுமுகத்தெம் பெருமானே
ஐயா தாலோ தாலேலோ. 23

என்பார்ப் பதித்தாய் ஏக்கறநின்
திருக்கார்த் திகைத்தாய் ஒருங்கேவந்
தேந்து முலைப்பால் அமுதூட்டி
இலைப்பாற் கிடத்த மலைப்பின்றி

முன்பா விலையில் ஒருகொழுந்து
முகில்போற் கிடந்து தனிவளர்ந்த
முளரித் தடங்கண் மாதுலன்போல்
முழங்குஞ் செழுநீர்ச் சரவணத்துப்

பொன்போல் துயின்றாய் குயின்றமணிப்
பூந்தொட் டிலில்யான் தாலாட்டிப்
பொன்னங் குறங்கு தடவவும்கண்
பொருந்தாய் போலும் இருந்தாயால்

அன்பாய்த் தென்பார் புகழ்இலஞ்சிக்
கதிபா தாலோ .தாலேலோ
ஆறுமுகத்தெம் பெருமானே
ஐயா தாலோ தாலேலோ. 24

முடக்குங் கருங்கைச் செடித்தாடி
முடைவாய் இடையர் கடைகாலின்
முன்ஊன் றியகோல் மிசைத்துயில
முட்டுஞ் சுவைப்பால் முலைச்சுரபி

மடக்குங் குளகின் நசைக்கயல்போய்
வயற்பூஞ் சாலிக் கதிர்மேய்ந்து
மடற்பூ விரியாப் பசுங்கமுகை
வண்ணக் கரும்பென் றெண்ணிஉண்டு

குடக்கம் பிடறிக் கவைக்குளம்புக்
குறுங்கால் பெயர்த்து நறுங்காஞ்சிக்
குளிர்நீள் ஆற்றின் இளம்புனிற்றுக்
குழக்கன் றூட்டிக் குழல்ஒலிகேட்

டடக்குந் தமரோ டமர்இலஞ்சிக்
கரசே தாலோ தாலேலோ
ஆறு முகத்தெம் பெருமானே
ஐயா தாலோ தாலேலோ. 25

வீடற் கரிய பாயலின்மேல்
வெறுப்பாய் முளைக்கும் விழிக்கணையோ
வேற்பூங் கணையாய்க் கொடிப்புருவ
வில்லே கொல்லுங் கொடுஞ்சிலையா

ஊடற் பெரும்பா சறைப்பூசல்
உடற்றுங் கடல்தெள் அமுதனையார்
உருக்குஞ் சமுக வெளிஅகத்தும்
ஊதுங் கருங்கோ கிலக்காளம்

சூடற் கரிய திறல்விருது
சூட்டுந் தடஞ்சோலையின்புறத்தும்
தொடங்கும் இருள்மா மருள்மாலை
தோன்றா முன்னம் தெருத்தொறும்பந்

தாடற் சிலைவேள் பயில் இலஞ்சிக்
கரசே தாலோ தாலேலோ
ஆறு முகத்தெம் பெருமானே
ஐயா தாலோ தாலேலோ. 26

இருவிக் குடுமித் திரிகூடத்
திணர்ப்பூஞ் சாரற் புறத்தும்தென்
இலஞ்சித் திருக்கோ யிலின் அகத்தும்
இருந்த படியே திருந்தொளியாய்

மருவிப் பிரியா வள்ளியுடன்
வடிவேல் செங்கை வலன்ஏந்தி
மயிலின் புறத்துக் கயிலாய
மலைபோல் உயர்ந்த மலைஅகத்தும்

குருவிற் சிறந்த கும்பமுனி
கும்பிட் டிறைஞ்ச நின்றநிலை
கூட்டிப் பணியுந் தண்பொருநைக்
குமரா பாவ நாசம்என்னும்



அருவிக் குடுமித் தடாகபுலத்
தமர்ந்தாய் தாலோ தாலேலோ
ஆறு முகத்தெம் பெருமானே
ஐயா தாலோ தாலேலோ. 27

இதம்உறும் ஐம்பத் தொருவன் னங்கள்
இலங்கு மணிக்கோவை
எழுதரு முதுமறை நான்கு வடத்தும்
இசைத்த பெரும்பிரணவப்

புதுமாணிக்கத் தொட்டிலின் மானத
பூசைத் தனிஅடியார்
பொய்யா மெய்உணர் வணையா டையின்மிசை
பொன்போல் வளர்கின்றாய்;

மதுமலர் பூத்த பொலங்கொம் பனையார்
வகைவகை தாலாட்டு
மட்டார் மலர்ப்பூந் தொட்டி லினங்கள்
மழைக்கண் நெடுங்காவித்

ததைமலர் அணையினும் ஒருதுயில் புரிவாய்
தாலோ தாலேலோ
சம்பத் துதவும் இலஞ்சிக் குருபர
தாலோ தாலேலோ. 28

சிங்கம் முழங்குந் தடவரை முடியிற்
செழுமணி கெழுமுல்லைச்
செறிதயிர் கடையும் இடைச்சியர் செங்கைச்
செந்தா மரைமலரில்

பொங்க முழங்கு மணித்தேர் வீதி
புனைகொடி மணிமாடப்
பொன்நகர் மருத வரைப்பு நிறைந்த
புறம்பணை யின்பாலில்

வங்கம் முழங்கு கருங்கடல் நெய்தல்
மருங்கின் ஒருங்கேவெண்
மதியமும் அமுதத் திவலையும் மான
மணித்திரள் வீசுவதூர்

சங்கம் முழங்குந் தமிழ்நா டுடையாய்
தாலோ தாலேலோ
சம்பத் துதவும் இலஞ்சிக் குருபர
தாலோ தாலேலோ. 29

வங்கக் கடலும் நடுங்கப் பொருதெழு
மாசூர் மாசூர்மா
மங்கப் பொருதனை பைங்கற் பகநிழல்
வானோர் ஏனோரும்

அங்கட் புவனியும் வெங்கட் கொடியவ
ராலே வாடாமே
அன்றிற் பெயரிய குன்றைப் பொருமதி
வீரா போரூரா

எங்கட் குடையவர் திங்கட் சடையினர்
பாலா நூல்ஆய்வோர்
என்றப் பழமறை அன்றைக் குளதமிழ்
ஏழேழ் பாவாணர்

சங்கப் புலமை தருஞ்சொற் புரவல
தாலோ தாலேலோ
சம்பத் துதவும் இலஞ்சிக் குருபர
தாலோ தாலேலோ. 30

இந்திரன் பாவைபெறும் இளையவள்
பாகா ஏகா ஓகாரா
இங்கிதம் பேசு குறமகள்மண
வாளா வேளூர் வேளாளா

உந்தியங் கோகனக முகில்மரு
கோனே கோனே வேலோனே
ஒன்றிரண் டெனஉரை பகரும்என்
நாவாய் ஓவா மீகாமா

மந்தரம் போல்வளர் பனிருபுய
பாரா மாலா கேயூரா
வண்டுகொண் டாடு சுனைமருவு
பிரானூர் வானோர் போரேறே



சந்தனம் தோயுமுலை உமையவள்
பாலா தாலோ தாலேலோ
தண்டையும் காலும் அழகிய
பெருமாள் தாலோ தாலேலோ. 31

## 4. சப்பாணிப்பருவம்

வல்ஏறு பூண்முலைக் குழல்வாய் மொழிக்கவுரி
மழஏ றெனப்பயந் த
வண்டுபடு கவுள்மதக் கரடக் கடாயானை
வட்டம்இட் டுக்கொட்ட நீ

எல்ஏறு சுடர்மணிக் கடகபன் னிருகரம்
இசைந்துசப் பாணிகொட்டில்
இவ்வாறு கொட்டுதும் எனப்பவள வாய்மலர்ந்
தின்அருள் பழுத்துமது ரச்

சொல்ஏறு கடவுட் பழம்பாடல் முறையிடச்
சுடிகைஅர வரசுநெளியத்
தொந்தம்இடு சூலா யுதக்காளி வெட்குறச்
சுத்ததாண் டவம்நவிற்றிக்

கொல்ஏ றுயர்த்தவன் தமருகம் கொட்டநீ
கொட்டிஅருள் சப்பாணியே
கொழிதமிழ் இலஞ்சிவரு குமரகுரு பரமுருக
கொட்டிஅருள் சப்பாணியே. 32

கடசலதி கொட்டுகைத் தந்தா வளத்துரி
கருங்காள மேகம்ஏய்ப் பக்
காய்சினப் புலியின்அதள் வெண்தார காபடலம்
ஒப்பக் கவின்கொழித் துப்

படநிலவு கொட்டும்வெண் நீற்றொளியும் மெய்யுமதி
பானுமண் டலநிகர்ப்பப்
பவளச் சடைக்காடு செக்கர்வான் இசையமழை
பைந்தேன் கடுக்கைதூற்ற

விடஅளறு கொட்டும்வெங் காகோ தரப்பணிகள்
மின்ஒளி கவற்றிவீ ச
விண்நின்ற விண்ஏறு விண்ணவர் வியந்தேத்த
விண்ஏற்றில் அண்ணல்நந் தி

குடமுழவு கொட்டநடம் இட்டவன் திருமதலை
கொட்டி அருள் சப்பாணி யே
கொழிதமிழ் இலஞ்சிவரு குமரகுரு பரமுருக
கொட்டிஅருள் சப்பாணி யே. 33

தடம்வைத் தடர்ந்தேறு கறைஅடிச் சிறுநடைத்
தந்தா வளப்பிடிக ளும்
தடவுக் குழைச்செவி கழற்கால் முகந்தெறி
தடக்கைக் கடாயானை யும்

சுடர்வைத்த கொன்பிறை நுழைந்தேறு கொண்டலில்
துளைபடா முனைமருப் புத்
துடிஅடிக் கன்று நின் றாடுந் தடாகத்
துறைப்புனல் பரந்து வெள்ளிப்

புடம்வைத்து வார்த்தனைய பொங்குமா கடல்அருவி
பொன்னுமுத் துங்கொழிக் கும்
பூலோக கைலாய கிரியென் றுயர்த்துமைப்
புயல்முக டுரிஞ்சுபொன் அம்

குடும்திரி கூடத் தடஞ்சாரல் வளநாட
கொட்டிஅருள் சப்பாணியே
கொழிதமிழ் இலஞ்சிவரு குமரகுரு பரமுருக
கொட்டிஅருள் சப்பாணியே. 34

மறந்தலை மயங்கர விலங்கிலை வலங்கல்வேல்
வாங்குபு திரித்துமரு வார்
மடியத் துறந்தடியர் பொன்உலகு வாழ்வித்த
வரதாப யங்கள்என்று

சிறந்தமலை யாசலச் செந்தமிழும் அருமறைத்
தெய்வப் பழம்பாடலும்
செந்நா முகந்துபல் நாளும் தவங்கள்புரி
செல்வர்வந் தேத்துவது போல்

நறுந்தளிர்ச் செந்தா மரைக்காடு தைவந்து
நறைவண்டு முரலுவது போல்
நடைபயில் பசும்புரவி புடைபயில் விசும்பிரவி
நான்மூன்று முறையிடுதல் போல்



குறுந்தொடி புலம்புகை சிவந்தொளி ததும்பநீ
கொட்டிஅருள் சப்பாணியே
கொழிதமிழ் இலஞ்சிவரு குமரகுரு பரமுருக
கொட்டியருள் சப்பாணியே. 35

வித்துமுளை வைத்துவெண் பார்கோலி ஒருமித்து
வெள்ளிக் குருத்துவிட்டு
வேர்ஊன்றி விற்கூன் நிமிர்ந்தெளிந் தள்இலை
விரித்துக் கருக்குவைத் துப்

பைந்தரை திரண்டுபொதி யாய்க்கமம் சூல்கொண்டு
பச்சைப் பசும்பாம்பு போல்
பருவக் கருக் கொண்டு பச்சென் றிளங்கதிர்
பயந்துபரி போற்கவிழ்ந்து

முத்துவிளை வித்துருமம் ஒத்துவாய்த் தீர்ங்குலை
முதிர்ந்துபொன்போல்விளைந் து
மொய்வரம் பறியாது தெற்றலா டிக்கழனி
முற்றுமுடி வைத்தழைத் துக்

கொத்துமலி செந்நெல்செறி தென்ஆரி நல்நாட
கொட்டிஅருள் சப்பாணி யே
கொழிதமிழ் இலஞ்சிவரு குமரகுரு பரமுருக
கொட்டிஅருள் சப்பாணி யே. 36

மூப்பாண்ட கூடலின் முதற்பாண்டி யன்புதல்வி
மும்முலைக் கன்னி பொன்னின்
முடிசூடி அடிமரபின் முறைநெறித் திசைவென்றி
முன்னிப் படர்ந்தஞான்று

மாப்பாண்ட வாதியர்தம் மரபாண்ட கொண்டல்முதல்
மற்றுள்ள கடவுளர்எ லாம்
வான்ஓங்கு மீனக் கொடிக்குச் சிரம்சாய்ப்ப
வலன்ஏந்து மாலைசூட் டும்

தேப்பாண் டரங்கற்கு முடிசூட்டி என் அம்மை
திருவயிறு வாய்த்தளித்த
திறல்ஓங்கும் உக்கிரப் பெருவழுதி ஆகிஅத்
திருமரபில் வந்துதித் த

கோப்பாண்டியற்கும்ஒரு குலதெய்வம் ஆனவன்
கொட்டிஅருள் சப்பாணி யே
கொழிதமிழ் இலஞ்சிவரு குமரகுரு பரமுருக
கொட்டிஅருள் சப்பாணி யே. 37

வீண்பொறை கிடந்த என் மனப்பாண் குருக்கத்தை
மெய்ப்பதம் அமைத் தமைபடா
வேதநூற் பகட்டினை உயர்த்தற நுகம்சேர்த்து
வெல்வினைக் கோரைப்போக்கித்

தூண்பொறை கிடந்திட்ட சஞ்சிதக் குத்தியை
துத்திப் பரிந்துழுது நிர்த்
தூளிபட லஞ்செய்யும் அவுத்திரி கன்புரம்
சூழ்ந்துதவ வேலிகோ லிக்

காண்பொறை நெல்வித்திப் பிராரத் துவப்பெருங்
களைபறித் தாகாமியக்
கருநோய் வராதருட் புனல்வார்த்து ஞானக்
கரும்புவிளை வித்துநிமிரா

கோண்பொறை நிமிர்த்தவெண் பிறைமுடிக்
குருமதலை
கொட்டிஅருள் சப்பாணி யே
கொழிதமிழ் இலஞ்சிவரு குமரகுரு பரமுருக
கொட்டிஅருள் சப்பாணி யே. 38

மன்றுதொ றாடல் உவந்தவர் கயிலையும்
மணிமா டக்கந்த
மாதன பூதர மும்பொன் மயில்கள்
மலர்க்கா விற்கார் கள்

துன்றுதொ றாடல் உவந்த பரங்கிரி
மலையும் தொலையா த
சூரலை வாய்விடு சீரலை வாயும்
தொழுதிரு வேரக மும்

நன்றுதொ றாடலும் வந்தருள்செல்வி
நயக்குந் திருஆவி
னன்குடி யும்பழ முதிர்சோ லைப்பழ
நாகமும் ஆகநெ டும்



குன்றுதொ றாடலும் வந்தருள் சேவக
கொட்டுக சப்பாணி
குறுமுனி பரவும் இலஞ்சிக் குருபர
கொட்டுக சப்பா ணி. 39

உரவு கிடந்த நெடும்புனல் ஆடை
உவந்து கிடந்துடை யாள்
உபய பயோதர மீதுகிடந்த பொன்
உத்தரி கம்போ லப்

பரவு கிடந்த தடங்கிரி அருவிப்
பாங்கர் கிடந்ததி னைப்
பரணி நடந்து பரித்த பசுந்தளை
கட்டிய பட்டுடை நெட்

டரவு கிடந்த அகன்பேர் அல்குல்
அணங்கு கனங்குழை போல்
ஆசை கிடந்த கருங்கட் குவளையின்
அருகே முருகவிழ் பூங்

குரவு கிடந்த தடம்புய பூதர
கொட்டுக சப்பாணி
குறுமுனி பரவும் இலஞ்சிக் குருபர
கொட்டுக சப்பாணி. 40

அழகு குறவர்தம் மகளிர் திருநுதல்
அப்பிய கத்தூரி
அணியும் முலைகளில் இழுகு புழுகுடன்
மணந்த திருப்பாணி

ஒழுகு நவமணி ஒளிவிடு கடகமும்
உத்தரி கத்தோள் மேல்
உதய கிரிகளில் உலவிய பரிதிகள்
ஒத்த குழைக்கா தும்

மழலை வரிஅணி முரல முகைஅவிழ்
கடப்ப மலர்த்தா ரும்
மரகத கலவறி ருபகுல துரக
வட்டமும் முட்டா த

குழைவும் அழகிய குழல்மொழி குலமணி
கொட்டுக சப்பாணி
குமர குருபர! சரவணா! பவகுக!
கொட்டுக சப்பாணி. 41

## 5. முத்தப்பருவம்

நெகிழா வரிவண் டினமுரலா
நிரலா இருந்து விருந்தருந்தும்
நெய்தற் கருங்கா னலந்துறைவெண்
நிலவுக் குடவால் வளைமுத்தும்

திகழ்ஆர் கலியின் கொழும்பவளச்
செழுங்கா டடர்ந்து படர்ந்தேறித்
தெற்றும் பணைமா மருதவயற்
செங்கட் கரும்பிற் செறிமுத்தும்

இகழாப் புறவத் திழிகான்யாற்
றிறங்கும் இபக்கோட் டிழிமுத்தும்
இலஞ்சிக் குறிஞ்சிக் கிளைமுத்தும்
ஏந்தேம் நின்பால் இரந்தேமால்

முகிழா மலர்ப்பூங் கடம்பாநீ
முத்தம் தருக முத்தமே
முருகா குமரா முத்தையா
முத்தம் தருக முத்தமே. 42

கடவுட் பொருநைக் கடற்றுறையும்
கன்னித் துறையும் பொன்னிநதிக்
கடலந் துறையும் பொங்குபுனற்
கங்கைத் துறையும் தங்குகழி

தடவுங் குடவால் வளைமுத்தம்
சலாகைப் பருவத் தடைபட்டாம்
சலாபத் திகளாம் சமுதாயத்
தரவாம் போதி தணவாமல்

குடமுட் கனியின் சுளைபிதிர்ந்து
கொழுந்தேன் ஒழுகிச் செழுந்தேமாங்
குலவுக் கனியைச் சுழித்தரம்பைக்
குலத்தைப் பழித்து மணங்கொழிக்கும்



முடவுப்பலவின் முளைத்தவன்சேய்
முத்தம் தருக முத்தமே
முருகா குமரா முத்தையா
முத்தம் தருக முத்தமே. 43

சத்தம் இருந்த முதுமறையோன்
தண்அம் கயிலைத் தடம்சாரல்
தடங்கோட் டிடபம் தனைத்தாழ்ந்து
தனக்கென் றன்னம் இரந்திட்டான்

அத்தம் இருந்த சுடர்ஆழிப்
பெருமான் அன்று மாவலிபால்
ஆழிப்புவனம் இரந்திட்டான்
அருமா தவத்துக் கன்னியர்தம்

சித்தம் இரந்தான் எம்பெருமான்
சிறியேம் இரத்தல் பிழையாமே
தெய்வத் தமிழ்தேர் தென்இலஞ்சிச்
சைவக் கொழுந்தே தீங்கனிவாய்

முத்தம் இரந்தேம் நின்பாலாய்
முத்தம் தருக முத்தமே
முருகா குமரா முத்தையா
முத்தம் தருக முத்தமே. 44

தென்னர் இலஞ்சிப் பெருமான்நின்
திருத்தா மரைக்கைக் கொடைக்குடைந்து
செல்லும் செல்லும் திருத்தாதைத்
திருமா மறுகுக் குடைந்தசங்கு

மன்னர் மறைகள் முறையிடுநின்
மலர்த்தாட் குடைந்த கமலமுநின்
மதுரம் துளிக்கும் சிறுகுதலை
மழலைக் குடைந்த வான்கரும்பும்

மின்னிற் குடைநுண் இடைக்குறப்பெண்
வெருவப் புகுந்துன் வேற்குடைந்த
வேழப் பொருப்பும் தருமுத்தம்
விழைந்தால் கிடைக்கும் வேண்டகிலேம்

முன்னர்க் குருமா முனிபணிசேய்
முத்தம் தருக முத்தமே
முருகா குமரா முத்தையா
முத்தம் தருக முத்தமே. 45

செக்கச் சிவந்த செழுங்கமலச்
சிமிழ்வாய் திறந்த திருமுத்தும்
செந்நெற் படப்பை செறியிலஞ்சிக்
கன்னற்றிரநில் திரள்முத்தும்

எக்கர்படுகர் இழிகான்யாற்
றிறங்கும் இபக்கோட் டிமிழ்முத்தும்
எங்கோன் இருக்கும் திரிகூடத்
தேலாப் புறத்திற் கிளைமுத்தும்

மைக்குள் குளிக்கும் படிகுளிக்கும்
மலைவாணர் சலா பத்துமுத்தும்
வந்தாற் குறப்பெண் நகை உறைக்கு
வைத்து மதுரத் துளிதுளும்ப

முக்கட் கனிக்கும் இனிக்குநின்வாய்
முத்தம் தருக முத்தமே
முருகா குமரா முத்தையா
முத்தம் தருக முத்தமே. 46

கழிபிறப்பும் தொலைய நிற்கும்
கவிஞர்சித்தம் பெருகவே
கயிலைவெற்பும் பொதிகைவெற்பும்
கடவுள்வெற்பும் தகையவே

தழுவு பொற்குங் குமமுலைக்கண்
தனிசுவைக்கும் பவளவாய்
தனைமுகக்கும் செவி லிகைக்கும்
தளிர்அடிக்கும் தகையவே

பொழி மதத்தன் புகர்முகத்தன்
புடையில் நிர்த்தம் புரியவே
புனல்முடிக்குங் கடவுள்அப்பன்
புதுநகைக்கும் குறுகவே



குழல்மொழிப்பெண் கையிலிருக்கும்
குழவிமுத்தம் தருகவே
குறுமுனிக்கன் றருள்சுரக்கும்
குமரன் முத்தம் தருகவே. 47

கழை சுழிக்கும் கயமு கத்தெம்
கடவு ளைக்கண் டடவிசூழ்
கடிபுனத்தன் றொருகு றப்பெண்
கரம்நெரித்தஞ் சினவளாய்த்

தழைஉ டுத்தங் கயல்வ ரச்சந்
தனம ணக்கும் தனகடாம்
தழுவி முத்தம் தருகெனத்தந்
துருகி நிற்கும் தலைவநீ

பொழிம தச்செண் பகவ னத்தெம்
புனிதன் முத்தும் பொழுதெலாம்
புயவ ரைக்கண் பதிய வைக்கும்
புதும லர்ச்செஞ் சரணன்நீ

கொழித மிழ்த்தென் புவிபு ரக்கும்
குரிசில் முத்தம் தருகவே
குறுமு னிக்கன் றருள்சு ரக்குங்
குமரன் முத்தம் தருகவே. 48

கன்னலங் காடுதன் மொய்த்தவெண் முத்தம்
கருப்பாலை புக்கரை படும்
கழனித் தடஞ்சாலி வெண்முத் தெருத்தின்
கவைக்கால் மிதித்துடைபடும்

துன்னலஞ் சுடர்முத் திபக்கோட்டில் உண்டது
துரக்குபு மடங்கல் ஏறு
துத்திக் குருத்தொடு பிடுங்கச் சிதர்படும்
துளைகொள்நாள் முளரி முத்தம்

பன்னலங் காட்டினும் பாய்ந்தளறு படுநெடும்
பரவைக் கழிக்கானல் வாய்ப்
பணிலமுத் தெல்லாம் புலால்படுந் தெய்வ
பதிக்கெலாம் பழையபதி ஆம்

தென்இலஞ் சிப்பதித் தேவசேனாபதி
திருப்பவள முத்தம்அரு ளே
சேணோங்கு மாடத்ரி கூடச் சிலம்பன்
திருப்பவள முத்தம் அருளே. 49

வானோங்கு முப்புடைப் பைங்காய்க் குலைத்தெங்கின்
மடல்வீழ்ந்து நெற்றுவீழ்ந்து
வாள்அர வுடன்திங்கள் முரிபட்டு வீழ்ந்ததென
மருதமுரு டிடறிமது ரக்

கான்ஓங்கு வெள்ளிமுறி கல்என் றொலித்தலும்
கருவிரல்வெள் உதிர்வளைக்காற்
காய்த்திட்ட செம்பிட்ட நெடியவற் கூன்புறக்
களியுடற் குளிகட் குறும்

பேன்ஓங்கு சிறுநரைப் புன்தலைக் கடுவன்
பிணாவீழ்ந்த தென்றுபத றிப்
பேதுற் றிமைத்திமைத் தலமருதல் கண்ணுறீஇப்
பிணாவந் திணங்குபு தழீஇத்

தேன்ஓங்கு மணம்உயர் இலஞ்சிவள நாடன்
திருப்பவள முத்தம்அரு ளே
சேண்ஓங்கு மாடத்ரி கூடச் சிலம்பன்
திருப்பவள முத்தம்அரு ளே. 50

கைப்பவள மாணிக்கக் கடகம் சிலம்பு பொற்
காறைகை வங்கி காப்பு
கனககொந் தளஓலை வெண்முத்து மாலிகை
கலந்தொளி நெருங்கிடமருங்

கெய்ப்பவள ருந்தனக் குன்றும் குழற்காடும்
ஏந்திழை நலார் கிளைஞர்
இனியமடல் எழுதுதென் காசிக்கு முத்தமிழ்
இலஞ்சிப் பதிக்கும்எங் கோன்

வைப்பவள ருஞ்சுப்ர மணிய புரத்திற்கும்
வளர்ஆறு முகநகர்க் கும்
மருதத் தடஞ்சாலி சூழ்பிரான் ஊருக்கு
மன்னுபொன் உலகம் என் று



செம்பவளம் ஓங்குநன் னகர்க்கும்ஒரு வேந்தன்
திருப்பவள முத்தம் அருளே
சேண்ஓங்கு மாடத்ரி கூடச் சிலம்பன்
திருப்பவள முததம்அரு ளே. 51

## 6. வாரானைப்பருவம்

கண்டாய் இல்லைப் போலும்இது
கரத்துக்கிசைந்த குறுந்தொடிநின்
காதுக்கிசைந்த மாணிக்கக்
கதிர்ப்பூங் குழைமற்றிதுகாற்காம்

தண்தா ரகைபோல் மணிகிடந்த
சதங்கை வடமற் றிதுநினக்குத்
தரவேண் டாவோ வந்தால்இத்
தனையும் புனையும் தரம்ஆமே

விண்டாரணங்கள் வழுத்தரிய
விழுத்தாள் இணையும் அருள்பழுத்த
வெண்மூ ரலுமூ விருமுகமும்
விளங்கப் புகுந்தென் மனக்கோயில்

கொண்டாய் வருக தமிழ்இலஞ்சிக்
குமரப் பெருமான் வருகவே
குடுமிச் சுடர்வேற் படைஉடைய
கோமான் வருக வருகவே. 52

ஆர்க்குங் கனகத் தாள்பந்தத்
தழுத்தும் வயிரச் சுட்டிகிடந்
தசைந்தே இசைந்த மலர்க்கடம்பத்
தலங்கற் குடுமி ஒடும்லங்கச்

சேர்க்குங் குரல்வாய்ச் சிறுசதங்கை
சில்என் றலம்பப் பொலஞ் சிலம்பு
சிலம்பச் சிலம்பிற் சிங்கத்தின்
சிறுகன் றென்னச் சிற்றடியார்

பார்க்குந் தவம்போல் நடைபழகிப்
பழகு மடவார் தளிர்க்கைவிரல்
பாய்ந்து பிடித்து நடந்திளைத்துப்
பனிவேர் வரும்பிச் செவிலிமுகம்

கூர்க்குங் குறிப்பும் குறுநகையும்
குழைவும் அறிந்தேம் வருகவே
குடுமிச் சுடர்வேற் படைஉடைய
கோமான் வருக வருகவே. 53

அமளிக் கலவிக் கொடும்போரில்
அவிழ்ந்த குழலும் இடைநெரிந்த
அங்கச் சரியும் செங்குமுத
அதரச் சிவப்பும் கருங்குவளைச்

சமரக் கடைக்கண் சிவப்பும்இடை
சரிந்த உடையும் தளர்நடையும்
தழுவுங் கொழுநர் தடம்புயம்பூ
தரலே பனசந் தனச்சாந்தம்

திமிரத் திமிரத் திமிர்ந்தசெப்பில்
சின்னப் பிறைப்போர் கிடந்தநக
சின்னங் களுமாய்த் துயில்எழுந்தார்
செப்பா மொழியைச் சேடியர்க்குக்

குமரிக் கிளிகள் புகழ்இலஞ்சிக்
குமரப் பெருமான் வருகவே
குடுமிச் சுடர்வேற் படையுடைய
கோமான் வருக வருகவே. 54

அடிமை வழிக்கோர் ஆள்எனக்கொண்
டருட்பால் புகட்டி மருட்பிறவி
அறுக்கும் படிவந் தெழுத்தறிவித்
தஞ்சா றேழெட்டெனும் பருவத்

துடைமைப் படுத்தி அஞ்செழுத்தும்
உபதே சித்தென் உயிர்க்குயிராய்
உணர்வுக் குணர்வாய்ப் பயின்றறியும்
உருவிற் குருவாய் உடன்கலந்து

மடமை தவிர்த்து வழிபாடு
திருத்தி மழலைத் திறம்திருத்தி
மதுரக் கவிநா வரத்திருத்தி
வலியப் பிடிசோ றமுதருத்திக்



குடுமி திருத்தி எனைவளர்த்த
குருவே வருக வருகவே
குடுமிச் சுடர்வேற் படை உடைய
கோமான் வருக வருகவே. 55

புறம்சுற் றியதெண் திரைஆழிப்
புவனப் பரப்பெலாந்தெரிந்து
பொருள்தேர்ந் தருள்தேர்ந் தவர்க்குதவார்
புதையல் இருக்கும் இடம்தேடி

மறம்சுற் றியவேற் குறுநிலமா
மன்னர் புகுந்து துன்னுவபொன்
வாரிப் பெருங்கா வடிசேர்த்து
வழங்கா நெறிபோம் வழக்கேபோல்

அறம்கற் றறியார் குலவேடர்
அருங்கோட் டடுக்கற் புறத்துவைத்த
ஆய்பூஞ் சிறகர் ஈஇஅகற்றி
அளிதேன் கவர்ந்து கொடுபோதும்

குறிஞ்சிக் கிழவா தமிழ்இலஞ்சிக்
குமரா வருக வருகவே
குடுமிச் சுடர்வேற் படைஉடைய
கோமான் வருக வருகவே. 56

அப்பன் வருக எனைஆண்ட
ஐயன் வருக அமர்உலகுக்
கதிபன் வருக கயிலாயத்
தரச குமரன் வருக எங்கள்

வைப்பன் வருக குழல்மொழித்தாய்
மைந்தன் வருக கலவமயில்
மகிழ்வோ டேறித் தேவர்தொழ
வருவான் வருக அறநெறிக்குத்

துப்பன் வருக மெய்ஞ்ஞானத்
துறைவன் வருக புலம்புகுதும்
தொடியன் வருக மணிச்சுடிகைத்
தோளான் வருக துலங்குமனக்

கொப்பன் வருக மாணிக்கக்
குழையன் வருக வருகவே
குடுமிச் சுடர்வேற் படையுடைய
கோமான் வருக வருகவே. 57

தேந்துணர் அலங்கல்முடி இமையவர் குழாம்தொழச்
சிங்கா சனத்திருக்கும்
தேவேந்திரன் வரக் குமாரத்தி கணவனைத்
தேடித் திகைத்திருப் பக்

காந்தள்அம் சாரலில் கடிபுனம் காக்குமான்
கண்ணிக்கோர் கண்ணிவைத் துக்
களிறுதரு புணர்வினால் புணர்தந்து பின்வரும்
களநாடி யுள்மயங் கி

ஏந்திளங் கொங்கைமார் இடைவினவி உடைவினவி
என்போக்கி நின்றுடன் போக்
கிடையீடு கைவந் தரத்தொடு நிறுத்தெயினர்
ஏற்றபடி ஆற்றுவது வைக்

கூந்தல்அம் பிடியுடன் புதுமணக் கோலமும்
கொண்டுவந் தவன்வருக வே
கும்பமுனி தஞ்சம்என நம்புதென் இலஞ்சிவரு
குமரநா யகன்வருக வே. 58

ஒத்தசிவ பத்தர்பரி சுத்தர்இத யத்தினின்
றுதயஞ்செய் பாநுவருக
உத்தேச லட்சண பரிட்சையின் அகப்படா
ஒளியின் ஒளி உருவன் வருக

அத்துவா வைத்துடக் கறநின்று சோதித்
தரந்தைதீர்த் தவன்வருக வந்(து)
அறிவதொரு குறிதன்ன தருளில்அறி வித்தென்னை
ஆட்கொண்ட குரவன் வருக

பத்திவலை யிற்படும் பரமஓதி மம்வருக
பழையவா தனை அகற்றும்
பரமபர மாதீத பரமுத்தி நல்குவர
பாரிசா தம்வருக நின்



கொத்தடியர் கூட்டத்தில் என்னையும் இருத்திக்
குறித்தபெரு மான்வருக வே
கும்பமுனி தஞ்சம்என நம்புதென் இலஞ்சிவரு
குமரநா யகன்வரு கவே. 59

அநிர்வசன மாயப் பெருஞ்சலதி ஆடும்அடி
யேங்கள்உனை அடைய மாட்டேம்
அடிகளும் அனைத்தும்உடை யவனும்உடை
மைப்பொருளும் ஆதலால் அடியரேமும்

தனதுபொரு ளுடைமையில் தீராமை தேறிஒரு
தண்அளி சுரக்க வருக
தற்காக்க வருககை தரவருக வற்றாத
தண்கருணை வெள்ளம் வருக

வனசநிதி வருகவர பாரிசா தம்வருக
வளர்சுரபி வருக சிந்தா
மணிவருக எனதிருகண் மணிவருக என்ஐயன்
வருகஎன் அப்பன் வருக

குனிசிலைப் புருவத் திருந்திழை அருந்தவக்
குழவிஇள மதிவருக வே
கும்பமுனி தஞ்சமென நம்புதென் இலஞ்சிவரு
குமரநா யகன்வருக வே. 60

ஏறாத உச்சியில் இருக்கும் பசுந்தேனை
இருமுடவன் ஒருதனி கிடந்
தேக்கற்றும் அங்காந்தும் நின்நிலையும்
என்நிலையும்
இன்னிலை எனக்கிடந் தேற்

காறாத சிந்தா குலப்புன்மை தனையுமே
ஆற்றிஒரு படிதேற்று வித்
தானாந்த சலதிநீர் ஆட்டிப் பராஅமுதம்
ஊட்டித்தன் அளவைகாட்டி

மாறாத சீவாநு பூதி அருள் சீவாநு
பூதிகமும் ஆக மன்னும்
மன்னுபசு கரணமும் சிவகரண மாக்கி அருள்
மறையின் பெரும்பொரு ளையும்

கூறாது கூறிஎன் மனப்பெருங் கோயிலில்
குடிகாண் டவன்வருக வே
கும்பமுனி தஞ்சமென நம்புதென் இலஞ்சிவரு
குமரநா யகன்வருக வே. 61

செங்கையில் இலங்கிய குறுந்தொடி புலம்பஒளிர்
திகழும்வெயில் இருள் பருகவே
செஞ்சரண பங்கய சிலம்பொலி முகந்தடியர்
செனனசா கரம் ஒழியவே

அங்கரை வடங்களொடு கொம்புமணி யுங்குலவ
அருணமே கலைஇசைய வே
அங்கதபு யங்களில்வி ளங்குபனி ரண்டிரவி
அனையவார் குழையசைய வே

கங்குல்பகல் இன்றிமலர் கண்கள்பனி ரண்டும்எழு
கருணைவா ரிதிசெறிய வே
கங்கைமக ளுஞ்சயில மங்கைஅர சுந்தமது
கயல்கள்போல் விழிகுளிர வே

கொங்குகமழ் தென்கயிலை முன்றினில் நடந்துவரு
குழவிவா ரணம்வருக வே
கும்பமுனி தஞ்சம்என நம்புதென்இ லஞ்சிவரு
குமரநா யகன்வருக வே. 62

## 7 அம்புலிப்பருவம்

எண்இரண் டேந்துகலை வாய்ந்தும்ஒரு கார்த்திகை
இளம்பயோ தரம்உகந்தும்
எம்பிரான் சடிலகோ டீரப் பெருங்கங்கை
ஆற்றிடை வளர்ந்தும்எங் கோன்

திண்நலம் பெருகும்ஒரு கண்ணனைத் தந்தும்இந்
தீவரச் சுனைவியந் தும்
சிகரவரை இடறியும் பூச்சக்கர வாளச்
சிலம்புசுற் றித்திரிந்தும்

விண்நலம் தருமாலை வேலைநின் றோங்கமர்
வேட் கவிகை தந்தும் இவைஓர்
விகடதட மணிமகுட நிரைபழகு சரணார
விந்தனை நிகர்த்தி அந்தோ



அண்ணல்அம் சேவற் பதாகைப் பிரதாபனுடன்
அம்புலீ ஆட வாவே
அந்தண்மரு தஞ்செறி இலஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே. 63

ஓராயி ரங்கோடி தோட்டுநெட் டோடைமட்
டுமிழ்புண்ட ரீகம்என் றோ
உம்பர்கடை யுந்திருப் பாற்கடல் தாழியின்
உருட்டுதெள் அமுதம்என் றோ

கார்ஆழி விடம்உண்ட கண்டன் சடாடவி
கட்டுமலர் இண்டைஎன் றோ
கற்பகா டவிமகளிர் கத்தூரி தீட்டுகைக்
கண்ணாடி என்றெண்ணி யோ

தாரா கணக்கயலின் இரைதேர் தரப்புக்க
சக்ரவா கப்புள்என் றோ
தன்அன்னை தந்தபாற் கிண்ணம்என் றோ
கொண்டு
தம்மின்கள் தம்மின்கள் என்

றாராயும் மறைமுடிவில் ஆடும்இவன் ஆடுமால்
அம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தம்செறிஇ லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே. 64

தேனும் துவர்ந்திடத் தித்திக்கும் மதுரவாய்த்
தெய்வப் பிணாக்கள் கும்பச்
செம்பொற் படாமுலை ததும்பத் ததும்பச்
செழுந்துணர்ப் பாரி சாதக்

கான்உந்து பூந்தொடை கவின்பெறச் சூட்டிக்
கலந்தணைத் தாங்கிருப்பார்
காதற்ப்ர பாகம்வந் தலைமோத வந்தநின்
காட்சிஒரு காட்சிஅன் றோ

மோனம் தரும்பெரிய பரமாநு பூதிஇள
முலைமுகை ததும்ப ஞான
மொய்ம்மணத் தார்சூட்டு முத்திப் பெருந்திரு
மோகம்உறு சரச மான

ஆனந்த வெள்ளம்எனும் ஆறுமுக நாதனுடன்
அம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தஞ்செறிஇ லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே. 65

வீரம் கிடந்தவாட் சூரபன் மன்ஆதி
மேவார் தமக்குமைக்கும்
மிக்கான வேள்விகள் அனைத்தினும் தலைமைபெற்
றான்வித்யா பாண்டித் திய

பாரங் கதப்பட்டம் உள்ளவன் கடவுளர்
பழஞ்சிறை விடுத்திறைவனை
பட்டா ரகப்பெறும் பட்டணம் கைக்கொள்ளப்
பட்டாபி டேகம்வைத் தான்

வாரம் கிடந்தகுற வள்ளிநா யகிஇட்ட
மட்டவிழ் குராந்தொடைக்கு
மாதரசி சேர்த்திய மடற்பாரி சாதமா
லைக்கும் இடையேம தாணி

ஆரம் கிடந்துலவு பன்னிரு புயாசலனோ
டம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தஞ்செறிஇ லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே. 66

நாடகப் புரவிப் பசுந்தேர் உருட்டும்இள
ஞாயிறுத யம்புரிந்து
நாட்கொண்டு படரிய கதிர்க்கெதிர் எறிந்தவயி
ரப்பொடி நகைப் பதேய்ப் பப்

பாடகத் துறைமிடற் றுக்கருவி மாக்கள்இசை
பயில்மகதி யாழ்மொழியுடன்
பதினெண் பெரும்பண்ணும் ஏழிசை வடித்திசைப்
பஃறுளைப் பத்திசான்ற

மாடகம் முறுக்கிமணி வார்த்திவவு தைவந்து
வள்உகிர் வடிம்புவரு டி
மகரயாழ் வாசிக்கும் இன்னிசை உடன்பழகி
மழகதிர் எறிக்குமணி வாய்த்



தாடகக் குழைகிடந் தாடுவடி காதனுடன்
அம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தம்செறிஇ லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே. 67

மேவு துங்க மயூரம் உண்டுநின்
வீர வெம்பகை களைய லாம்
வேரி தங்குதிரி கூடம் உண்டுடு
மீனுடன்தனி தவழ லாம்

பாவி என்றொரு பேரொழிந் துசெய்
பாதகங்களும் ஒழியலாம்
பானலங்கிரி வாவி தங்கிய
பாய்த டம்புனல் படிய லாம்

மூவி ரண்டுச ரோருகங்களின்
மூரல் கண்டுளம் மகிழலாம்
மோனம் ஒன்றுப தேச முன்செயும்
மூலமந்திரம் அறியலாம்

ஆவி னன்குடி மேவு கந்தனோ
டாட அம்புலி வருக வே
ஆழ் இலஞ்சியில்வேளொ டின்றினி
தாட அம்புலி வருகவே. 68

கோடகப் படஎழும் கொய்உளைப் புரவிக்
கொடிஞ்சித் தடந் தேரின் மேல்
குலவிவலம் வரும்ஒருபன் னிருபரிதி மண்டல
கோடிகம் எழுந்ததே போல்

பாடலைக் குங்கதிர்க் கோமே தகத்திரள்
பதித்துவயி ரந்துறுத் திப்
பத்மரா கக்கோடி கோடான கோடிநிரை
படஅழுத் திக்கொழுங் கால்

மாடெழு சுடர்க்கற்றை வயிடூரி யத்தகடு
வாரித் துவன்றிவிர வும்
மரகதம் அமைத்துரக மணிகள்பதி தந்துபுய
வரைமுகம் மொய்ப்பவலம் வந்

தாடகக் குழைகிடந் தாடும்வடி காதனுடன்
அம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தஞ்செறிஇ லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே. 69

குறுமுய லகன்பிடித் தாட்டாது தீர்ப்பன்உன்
கொடியகய நோய்தணிப் பன்
கோள் அராப் பகையுமுன் குரவனிலி டநிதநல்
குரவும்இர வுந்தவிர்ப் பன்

செறிபுனற் கடலில் தடந்தேர் மிசைத்தோன்று
சேட்டிளம் பரிதி போலச்
சித்தம் தழைக்குமற் றுனையும்ஒரு தன்மையில்
தீராது செல்லவைப் பன்

புறவும்இப் படியுள்ள நன்மைகள் எலாம்தரும்
புன்மைகள் எலாம் தவிர்க்கும்
பொன்அடித் தாமரை அளிக்கும்நலம் ஒன்றன்று
போந்தவர்க் கேந்திழைந லார்

அறுவர்முலை உண்டபால் மணம்அறா வாயனுடன்
அம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தஞ்செறியி லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே. 70

செம்புவழி இட்டனைய தீழுடைக் காழ்மந்தி
சென்றொருக் காலும்அறி யாச்
சேண்கிளர் மரம்பயில் அருங்கோட்டின்
இடைவைத்த
செந்தேன் இறால்கிழித் து

வம்புவழி சாரலில் இதைப்புனம் காக்குமட
மகள்இருந் தமுதம்உண் ண
வண்ணப் பசுந்தினையின் நன்னிலாக் கொழுங்கதிர்
வானதி கொழித்துமருள் மாக்

கொம்புவழி குத்திப் பதந்தந் திடித்துக்
கொழுந்தேக் கிலைப்படுத்திக்
குழையளவும் வாங்கிக் குழைக்குந் தடச்சிலைக்
குன்றவர் திருத்திவிடு நெட்



டம்புவழி தேன்அருவி பாயுமலை நாடனுடன்
அம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தஞ்செறிஇ லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே. 71

பருவரைப் படர்சினைப் பாரிசா தப்பொதும்
பரின்நின் றுலாவுகட வுள்
பாகசா தனன்விழி குறுந்துளி உரைத்துழி
பார்த்துநின் றிருவர்அறி யா

ஒருவரைப் பங்கில்உடை யவள்பால் சுரந்தமுலை
உண்டசெங் கனிவாய் மலர்ந்
தோடவிடு தூதுவர் உரைக்குந் திருக்குறிப்
புணராத சூரபட லம்

கருவரை அறுத்துத் திரும்பினோன் எங்கோன்
கடைக்கணிக் குங்குறிப்புக்
கண்டுபணி கேளாத வர்க்கேது தஞ்சம்எதிர்
காணூக் கடைக்கண் சிவந்

தருவரை துளங்கநின் றயில்வேல் எறிந்தவனோ
டம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தஞ்செறிஇ லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே. 72

## 8. சிற்றிற்பருவம்

மருக்காற் புன்னைப் புதுநிழல்வெண்
மணற்கால் மருங்கு நிலவெறிப்ப
மாடம் சமைத்துக் குடிபுகுந்து
மணிக்கால் இப்பி அடுப்பேற்றிக்

குருக்கால் செம்பொற் சிறுசுளகால்
கொழிக்குந் தளந்தேன் உலைப்பெய்து
குடவால் வளைவெண் குழிசிபொங்கக்
குழற்கால் ஆம்பல் நெருப்பமைத்து

முருக்கால் வெல்ல முடியாவாய்
முகிழ்த்துக் கவிழ்த்துக் கிடந்தூதி
முகம்வேர்த் தனம்நீ குறும்பிழைத்தால்
முற்றும் தரமோ முக்காலும்

திருக்கால் பிடித்துக் கும்பிட்டேம்
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே. 73

அம்பொற் சிறுவீட் டணிகாண
அன்னை வருவாள் பின்னையும்என்
ஆவி அனைய தோழியருண்
டவரும் வருவார் அன்னையரைக்

கும்பிட் டிறைஞ்சித் தோழியரைக்
கூடித் தழுவிக் கொண்டன்னை
கொணர்ந்த வரிசை அத்தனையும்
கைக்கொண் டெமது குலமனையின்

சம்பத் தவர்க்குக் காட்டிஉள்ளம்
தழைக்கும் படிக்கு விருந்தளித்துத்
தமியேங் களுமுண் டிளைப்பாறும்
தனையும் சதியேல் சதியேல்உன்

செம்பொன் றிருத்தாள் சென்னிவைத்தேம்
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே. 74

கங்கைத் திருத்தாய் திருத்தனமும்
கவுரி குழல்வாய் மொழித்தாய்தன்
கதிர்ப்பூண் முலையும் கார்த்திகைத்தாய்
கனகா சலப்ப யோதரமும்

தங்கக குடம்போல் மணிக்குடம்போல்
தரளக் குடம்போல் குடியாப்பால்
ததும்பத் ததும்பப் பிதிரோடத்
தாரோ டசையுந் திருஅரைஞாண்

பொங்கச் செறித்த மணிநெகிழ்ந்து
புலம்பப் புலம்பிற் சிறுபண்டி
புலரப் புலர விளையாடல்
புகுந்தாய் பயந்தார் பொறுப்பாரோ



திங்கட் சடையான் கண்மணியே
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே. 75

முந்திப் பிறந்த இளங்களிற்று
முகத்தெம் பெருமான் கணத்தினுக்கு
முன்னே சிறுதே ருடன்போந்து
முதிரா முகிழ்மென் முலைஎம்பால்

புந்திக் களிப்பால் விளையாடப்
புகுந்து புழுதி யாட்டயராப்
பொன்அம் சிலம்பர் அடிமுடியில்
புனைந்தே மழலைக் கிரங்கிவரம்

தந்திப் பொழுதெம் மறுகடைந்தான்
தளங்கொண் டிளங்கோ மகன்ஈயும்
தண்டைத் திருத்தாள் வணங்கும்எம்பால்
தயவு புரியுந் தன்மைத்தால்

சிந்தித் திடில்அன் றொன்றறியேம்
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே. 76

நச்சு மரம்தான் ஆனாலும்
நட்ட மரம்காண் தொன்றுதொட்டு
நாங்கள் அடிமை நீங்கள்எம்மை
நடத்தும் தலைமைப் பெருமான்காண்

வைசசு மரம்தண் ணீர்வார்த்து
வளர்ப்போர் குறைக்க நினைப்பாரோ
மற்றோர் குறைவந் துற்றாலும்
மாற்றிப் புரக்க வழக்கன்றோ

கச்சை முனிந்து முகம்கறுத்துக்
கனத்துச் சினத்துக் கடக்களிற்றின்
கதிர்வாள் மருப்பை முனைமடக்கிக்
கதிர்க்குங் கதிர்ப்பூண் முலைக்குறத்தி

செச்சை செறிக்குந் திருமார்பா
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே. 77

வேறு

அறல்பாய்ந் திட்ட மணல்ஊடே
அடியேம் கட்டு சிறுவீடே
குறைதீர்ந் திட்ட பணியோடே
குடிபூந் திட்ட குறைபாடோ

இறைவாங் கச்சம் மதியாய்நீ
இடைபோந் தெற்றி விடலாமோ
திறலோன் சித்ர சபைவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே

செறிதேன் செச்சை மலர்மார்பா
சிறியேம் சிற்றில் சிதையேலே. 78

வரப்பட் டவர்எண் மரில்நால்வர்
மாற்றம் குறியாக் கொத்தடியார்
மற்றோர் நால்வர் யாங்கள்புது
மழலைத் திறத்தெம் வழிஅடியார்

தரப்பட் டவரா தலினொருத்தர்
தகையார் என்னும் வகைதேறித்
தடந்தேர் மறுகில் விளையாடல்
சமைந்தேம் சமைத்த சிறுவீடு

பொரப்பட் டெழுந்து போர்அவுணர்
புழைமா ளிகையும் சூரபன்மா
பொன் மாளிகையும் கொடிமதிபூம்
பொலந்தேர் மறுகும் வீரமயேந்

திரப்பட்டணமும் அன்றுகண்டாய்
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே. 79



எந்தை இடப்பால் இருந்துலகுக்
கெம்பி ராட்டி அறம்புரக்கும்
இலங்கு கயிலா யப்பொருப்பும்
இளங்கோ மகன்நீ இனிதிருக்கும்

கந்த மாமா தனப்பொருப்பும்
காண்கிற் புரமன் றதனால் நீ
காலால் அமைத்த பணிஎல்லாம்
கையாற் செய்யக் கடவோம்யாம்

முந்தி இமவான் திருப்புதல்வி
முதல்வி வருஞான் றிருபுடையும
மொய்பூங் கவரி காளாஞ்சி
முதலாய் ஏந்திப் புகுந்தவழி

சிந்தித் திரங்க வேண்டாவோ
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 80

வார்க்குன் றிரண்டு சுமந்தொசியு
மருங்குற் கருங்கோ வலர்மகளிர்
மணிநீர் ஆடுஞ் சுனைக்கயல் போய்
மாமன் குறும்பு விளைத்தான்முன்

கூர்க்கும் பலிக்கன் றுழன்றுசென்று
குலமா தவத்துக் கன்னியர்பால்
குறும்பு புரிந்தான் திருத்தாதை
குனிக்குங் கருப்புச் சிலையுடன்சென்

றார்க்குந் திருமைத் துனன்ஒருவன்
ஆசைக் கொழுநர் தமைப் பிரிந்த
அணங்க னார்பாற் குறும்பிழைப்பான்
அல்லும் பகலும் அடிகள்யாம்

சேர்க்கும் சிறுவண்டலிற் குறும்போ
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 81

பைஏந் தியபன் மணிஅல்குல்
பட்டத் தரசி மாருடன்நீ
பரிக்கும் தவிசின் பக்கம்நின்று
பணிசெய் கிற்பேம் பூங்கவரி

கைஏந் திநிற்பேம் காளாஞ்சிக்
கழற்கால் திருப்பா துகைஎடுப்பேம்
காலம் கருதித் திருஅந்திக்
காப்பும் எடுப்பேம் கருத்தாலும்

பொய்யேம் பிறிதோர் கடவுளரைப்
பொருள்என் றுணரேம் அருள்பழுத்த
பொன்னங் கிரியே உன்இரண்டு
பொற்றாட் பணிக்குங் குற்றேவல்

செய்யேங் கள்ளனக் குறியேல்நீ
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே. 82

அலம்போந்து பல்பிறவி ஆழியில்தாழ்ந் துள்ளக்
கலம்பாழ் படாதுகரை காட்டுமீ காமா
இலம்பாடு தீர்ந்தொழிய எம்மனோர் ஏத்தும்
சிலம்பார் அடிபுனைந்தேம் சிற்றில் சிதையேலே. 83

## 9. சிறுபறைப்பருவம்

நங்கள்கொண் மூவிரு முகங்களி னாலும்வித்
தேந்திநத் தேந்து வேலை
நளினக் குடங்கையில் அடக்கும்உர வோன்சந்த
னாசல வரைப்பின் வித்தி

எங்கள்பன் னிருகுரவ ருந்தனி வளர்ந்திட
எழுத்துமுதல் ஐந்தி யற்பேர்
இயல்முதல் முக்கொடி படர்ந்துதொண் ணூற்றாறு
இசைப்பனுவல் பூத்துவறிஞர்

தங்களுக்குதவாத பதகர்பாற் காய்தந்து
சாரம் குறித்து நல்கும்
தலைவர்அவர் பாற்கனிந் துணர்ந்தவர்க் கருமருந்
தாகிநாற் பொருள்பயக்கும்



செங்கழக முத்தமிழ் முழங்கும்வள நாடனே
சிறுபறை முழக்கிஅருளே
தென்னிலஞ் சிப்பதிப் பன்னிருகை மேகமே
சிறுபறை முழக்கிஅருளே. 84

குலைக்காந்தள் அங்கைக் குறுந்தொடி புறங்கொளக்
கொவ்வைமணி வாய்துடிப்பக்
கூர்வேற் கருங்கண் பொருந்திமை சிவப்புறக்
கொடிநெடும் புருவம்ஏ றத்

தலைக்காதல் வந்தநாள் எத்தனை விருப்பம்அத்
தனைவெறுப் புந்துலங் கித்
தண்நிலா அமுதொழுகு சந்த்ரமண் டலமுகம்
தபனமண் டலம்நிகர்ப்ப

முலைக்காம்பில் முத்தம் கொடுத்தெரியும் மடநலார்
முதியபுல விப்புலவி யால்
மொய்பா சறைக்களத் தாடவர் அகப்பட்ட
எத்திசை முகத்தும்அமை யச்

சிலைக்கா மரங்கள் முழக்குவய லூரனே
சிறுபறை முழக்கிஅரு ளே
தென்இலஞ் சிப்பதிப் பன்னிருகை மேகமே
சிறுபறை முழக்கிஅரு ளே. 85

கந்தர முழக்கமும் கந்தரத் திடைபுக்க
கண்டீர்வப் பெருமுழக் கும்
கதிர்இளம் திங்கள்அம் கண்ணியனை முன்னிக்
கடிந்தோர் இயற்றுவேள் வி

மந்தர முழக்கமும் சுனைஆடு கன்னியர்
வளம்கெழு முழக்கங்களும்
மடப்பிடி நடைச்சிறு கொடிச்சியர் குழாம்கூடி
மன்றல்அங் குன்றம்எதிர் கூம்

சுந்தர முழக்கமும் வெறியாட்டு முருகியம்
துவைப்படு முழக்கங்களும்
தும்பிக்கை நீர்தூம் துருத்தியென் றருவித்
தடாகம் துதைந்த குளிரும்

சிந்துர முழக்கமும் தீராத தமிழ்வெற்ப
சிறுபறை முழக்கிஅரு ளே
தென்இலஞ் சிப்பதிப் பன்னிருகை மேகமே
சிறுபறை முழக்கிஅரு ளே. 86

சாவதும் திரியப் பிறப்பதும் தொடராது
தண்அளி சுரந்தபெரு மான்
சயிலத் தடஞ்சாரல் புக்குநின்றேக்கறும்
சமயத்தில் வந்துதோன் றி

ஏவதும் கொண்டுட்பு லம்புவதும் நனிதீர்மின்
என்னும் குறிப்புமொழி தந்
தேந்தும் குறுந்தொடி அரற்றவெற் றிப்பறை
எறிதனின் இச்சூர னைக்

காவதம் பலகோடி ஓடினும் ஒறுப்பன்
கருங்கழற கச்சுவீக்கிக்
கைவேலும் ஏந்தினன் காண்மின்கள் என்றுபல
கடவுளர்பொன் மலர்மழையொ டும்

தேவதுந் துபிஒரு புறத்தினின் முழக்கநீ
சிறுபறை முழக்கிஅரு ளே
தென்இலஞ் சிப்பதிப் பன்னிருகை மேகமே
சிறுபறை முழக்கிஅரு ளே. 87

வெண்கண் சிவந்துடல் குறுக்கிவயி றெக்கிநெடு
வெடிவால் முறுக்கி நோக்கி
விண்ணாடு நமனாள் வெரூஉக்கொள
வெகுண்டண்ட
கோளமும் வெடிப்ப உதறிப்

பங்கம் படுக்குமதக் களிறலறி வீழ்ந்துழப்
பப்பாய்ந் தடித்து டைத்துப்
பருமத் தகம்பிளந் தீர்ங்கோட்டு வெண்தரள
பந்திசிந் தித்தெ றிப்பப்

பொங்குங் கடற்குருதி புழைபடுங் கைமடைப்
புகர்முகர் துறைமடுத் தோர்
பொற்றையிற் சுற்றும் குலிங்கம்குறிக்கொளப்
போந்துகடை வாய்தடவி வெண்



சிங்கம் தியங்கும்வரை செல்வமுத லாளியே
சிறுபறை முழக்கி அருளே
தென்இலஞ் சிப்பதிப் பன்னிருகை மேகமே
சிறுபறை முழக்கி அருளே. 88

முறுகிக் கதிர்க்கும் செருத்தற் பகட்டெருமை
மோட்டுவெங் கோட்டுநுதி யால்
முள்வேலி கோலிக் குறுங்கால் நறுங்குவளை
முருகுசித றப்பெ யர்த்துக்

குறுகிக் கருப்பங் குருத்தைக் கறித்துக்
குதட்டிக் குதட்டி மேய்ந்து
கொழுமலர்த் தேன்ஊற விரவிவரு புனலுண்டு
குறுநடை பயின்று மறுகி

மறுகிற் புகுந்துபணை மருதநிழ லில்தூங்கி
மாங்கனி படைப்ப வாங்கி
வாங்கிச் சுழிப்புறத் துண்என் றெழுந்துதன்
மழக்கன்றி னுக்கி ரங்கிச்

சிறுகக் கனைத்துவரு தென்ஆரி நன்னாட
சிறுபறை முழக்கி அருளே
தென்இலஞ் சிப்பதிப் பன்னிருகை மேகமே
சிறுபறை முழக்கி அருளே. 89

கைத்தலை வைத்த விருப்புடன் அற்பர்
கடைத்தலை தொறும் உழல்வோர்
கற்றச ரக்கை விலைச்செயும் அற்ப
கவித்துவம் இழிவெனவே

யிற்றலை பத்ம பதத்தை வழுத்தும்
எனக்கருள் புரிகுவைநீ
எய்த்தவ ருக்கும் இளைத்தவ ருக்கும்
இரக்கம துடையவன்நீ

நத்தலை சித்ரந தித்தலை நிற்கும்
நடைப்பிடி தருமகன்நீ
நச்சர வத்தில் நடித்தருள் பச்சைமு
கிற்கொரு மருமகன்நீ

முத்தலை யத்ரன் அளித்தருள் புத்திரன்
முழக்குக சிறுபறையே
முக்குடு மிக்கிரி யிற்கும ரப்பன்
முழக்குக சிறுபறையே. 90

அகத்தினில் நினைப்பவர் பிறப்பையும் இறப்பையும்
அகற்றிடும் அருள் மலையே
அகத்தியன் வழுத்திட இலக்கண இலக்கியம்
அமைத்தருள் குருபரனே

பகைத்திறம் ஒடுக்கிஎன் மனத்திடை அருட்கதிர்
பரப்பிய பட்ர்ஒளியே
படைப்பவன் முடித்தலை புடைத்துல கினைத்தனி
படைத்திடும் இறையவனே

நிகழ்த்திய படிக்கித சுகத்தினில் எனத்தொழில்
நிரப்பிய நிருமலனே
நினைப்பொடு மறப்புவி கற்பவி கற்பமும்
நிறுத்திடு நியதிஉளாய்

முகிழ்த்தபு னகைச்சிறு குறத்தியொ டிருப்பவன்
முழக்குக சிறுபறையே
முதற்பிறை நுதற்குழல் மொழிக்கொரு மழக்குக
முழக்குக சிறுபறையே. 91

இதயமணி முத்தம்நிறை சததள மலர்த்தவிசின்
இடைஒரு கிழத்திபயில் வாள்
எறிகடல் முகட்டில்எழு தினகர ரவிப்பிரபை
யிற்காட்சி நற்ப்ரபையும் ஆய்

உதயகிரி அத்தமன கிரிகள்என மிக்குயரும்
உபயபுய வெற்பின்மிசை போய்
ஒளிர்பணில சக்ரநில வொருபுடை எறிப்பவெயில்
ஒருபுடை எறிப்பமலர் மேல்

மதலைஎழும் அச்சுழியில் எழுபுவி படைப்பவரும்
மரகத மணிக்குவடு போல்
வரிஅர வணைக்குள்விழி வளரும் ஒரு
பச்சைமுகில்
மருமகன் ஒருத்திகுற மான்



திதலைமுலை யிற்களப மெழுகிடு திருக்கைகொடு
சிறுபறை முழக்கி. அருளே
திரிகுடுமி வெற்புடைய குழல்மொழி திருக்குமர
சிறுபறை முழக்கி அருளே. 92

இடைச்சியர் புனைதுகில் எடுத்தொரு தருவினில்
இருப்பவன் மருமகனே
இருட்டறை உழும்இள முளைக்கும ரியும் என
இலக்கினில் வருபவனே

படைப்பவர் தொகுதிகள் படைப்பவன் எனும்இறை
பழிச்சிய பழையவனே
பகுத்திடு பல்கலை தொகுத்திடு நிலைபெறு
பரப்ரம ஒளிஉருவே

உடைத்தெழு மதசலம் உவட்டெழு கயமுக
ஒருத்தர்பின் வருபவனே
உருத்திர பசுபதி எனத்தொழு மறையவர்
உளத்திலும் உறைபவனே

முடித்தலை இமையவர் கெடித்தலம் உரியவ
முழக்குக சிறுபறையே
முடப்பல வடியினில் முளைத்தவன் மழவிடை
முழக்குக சிறுபறையே. 93

## 10. சிறுதேர்ப்பருவம்

வெண்தேர் உருட்டிவரும் வேதாளம் இட்டஅடி
பாதாளம் முட்டவிரவும்
வீரசக் ராயுதப் பகழியும் புட்டிலும்
வெரிந்கொண் டெருத்தலைப்ப

மொண்டேர் உருட்டிவைத் தால்அனைய நவரத்ந
முடிமுக டளாவி நிற்கும்
மூதண்ட வேதண்ட கோதண்ட கணபணா
முடிஅராச் சிறுநாண்எறிந்

தொண்தேர் உருட்டிவரு சேட்டிளம் பரிதிமதி
உபயசக் கரங்களாக
உபநிடப் பரிபூட்டி முப்புரம் கனலிகூட்
டுண்ணவான் தரணிவட்டத்

திண்தேர் உருட்டும்ஒரு சேவகன் திருமதலை
சிறுதேர் உருட்டிஅருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந்தசுவாமி
சிறுதேர் உருட்டிஅருளே. 94

மன்றற் கருங்குழற் செய்யவாய் வெண்ணகை
வளர்க்குங் கலாபமயில் போல்
மடப்பிடி நடைச்சியர் கொடிப்படை எடுப்பநெடு
வான்மதிக் குடைகவிப்ப

அன்றிற் கருங்கா ளங்கறங் காநிற்ப
அதிர்கடல்மும் முரசம்ஆர்ப்ப
அலைப்பல கையும்துயில் கொளுங்கங்குற்
கடாயானை
அழிமதக் கலுழிகொட்பக்

குன்றிற் பணைத்தகுவ வுத்தடந் தோள்மதன்
கோலம் சமைந்துகன்னல்
கோதண்டம் ஏந்திக் குறும்பெறி சனற்கிளிக்
கொய்உளைப் புரவிபூட்டும்

தென்றற் றடந்தேர் உருட்டும் பரங்கிரிய
சிறுதேர் உருட்டிஅருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டி அருளே. 95

தூங்குங் கமஞ்சூற் கருங்கொண்டல் மஞ்சுகண்
துஞ்சும் தடஞ்சாரலில்
சுழல்கின்ற பைங்கண் கருமபொரைச் செக்கர்வாய்ச்
சூர்உகிர்ப் போர்வேங்கையும்

தாங்குஞ் சிவப்புண்ணி வெள்ளிக் குழற்படி
சாரங்க பந்தாள மும்
தங்களில் பகைமைதீர்ந் தொருதுறைப் புனலுண்டு
சஞ்சரிக் குந்த்ரிகூடப்

பூங்குங் கும்மக்குவட் டடவிக் கொடிச்சியர்
புனத்திதழ் அமைத்ததுருமப்
புதுவெள்ளம் எறியச் செறித்தபால் முத்தனார்
புலவியிற் கொழுநர்பதிபோல்



தேங்குதோ றும்பரவு சித்ரா நதிக்கிறைவ
சிறுதேர் உருட்டிஅருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅருளே. 96

இருவிரலின் நீளத்தில் ஒருவிரலின் ஆழத்தில்
இட்டஒரு களம்நிரைத்த
ஈர்ம்பள்ளை யாட்டின் மயிர்த்தொகை பல்லம்என்
றெண்ணுங் கணக்கின்வுகை போல்

ஒருபெருங் களிறும்ஓர் பெருந்தேரும் வெம்படை
உழவர்ஐ வரும்கவின்மா
ஒருநான்கும் ஆகிய பதாதிமுதல் மும்மடித்
தோங்குசே னாமுகமும்மேல்

மருவிடும் கும்பியும் கண்டமும் வாகினியும்
மன்உயிர் தனையும் அப்பால்
வாய்த்தசமு கமுமனிக முங்கடந் தக்ரோணி
மாசேனை நெளியவிசையன்

செருவலித் திண்தேர் உருட்டும் பிரான்மருக
சிறுதேர் உருட்டிஅருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅருளே. 97

எண்ணெய்க் குடங்கள்என் றிறுமாந்து நீலவடம்
ஏந்திள முலைக்கடைசி மார்
எடுத்துக் குடத்தொடும் அடுத்தநற வங்குரவை
இடுசெருக் கிற்கவிழ்த்த

பண்ணைச் செதும்பில்விளை யாடுங் கருஞ்சிறார்
பற்றும்வாற் செங்கன்று போய்ப்
பாய்ந்திட முட்பல வடிக்குடக் கனிசிதறு
படுபழச் சேதகத்தின்

மொண்ணைக் கரும்பக டுரிஞ்சுகுலை வாழையின்
முப்பழச் சேறிழிந்து
மொய்என்று படுசேற்றில் வாய்த்தசெஞ்
சாலிசொரி
முத்தைவா ரிக்குவித்த

திண்ணைக்கு வெண்ணில வெறிக்கும் பிரானூர
சிறுதேர் உருட்டிஅரு ளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅரு ளே. 98

இரைக்கும் சுரும்பறாக் குங்குமக் கோடிடறி
இபநெடுங் கோடு சாடி
இல்லக் கொடிச்சியரின் இதயப் புனத்திதண்
ஏற்றி பளிக்கறையில்இட்

டரைக்கும் செழுஞ்சாந்தொ டகில்முரு டுருட்டிநெட்
டரவுமிழும் மணிவரன்றி
அண்டர்அண் டங்களும் அளக்கும்நெடு
மூங்கில்முத்
தரியிட் டரித்துவிரவிக்

கரைமிருக மதகலவை துன்றுசிவ மதுகங்கை
செண்பகக் காடுபொங்கு
கடல்கடந் தருவித் தடாகம் கடந்திரு
கரைக்குறும் பெறிய மோதித்

திரைக்கும் திரைப்புனற் சித்ரா நதிக்கிறைவ
சிறுதேர் உருட்டிஅருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅருளே. 99

கம்பவள வாரணக் கடல்வந் திரங்கக்
கறங்குந் திரைக்கானல் வாய்க்
கரியசிறு முட்கவிழ் மடக்கிலை முடக்கேத
கைக்காவின் விழுதுபற்றி

வம்பவிழும் வெண்மடல் தலைமிசை படர்ந்தோடி
மணற்குன்று தன்னைமூடி
மதுமலர்ப் புன்னைக் கருகோ டுலாயதன்
மருங்கோ டொருங்கோடியே

கும்பவள மென்முலைக் கடைசியர் குழாம்பயில்
கொழும்பணைக் கதலிநுதலிக்
கொல்லைக் குருந்தேறி முல்லையொடு பின்னிக்
குறிஞ்சிக் கவட்டினும் போய்ச்



செம்பவள வல்லிபடர் தென்குமரி வளநாட
சிறுதேர் உருட்டி அருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டி அருளே. 100

மகவான் மனைக்கிறைவி மகராசி பெற்றமகள்
மயில்போல் இருக்கஅயல் போய்
மகடூஉ ஒருத்திமிகு முகடூ டளக்குமலை
விளைகாவ லுக்குவரு வாள்

முகலா ளிதத்தரள முகிழ்மூர லுக்குருகி
முனைவேல் எடுத்துவரு வாய்
முருகா மருத்துழவன் மருகா திருத்தணியில்
முதல்வா ஒருத்திபுதல்வா

உகளா முயற்பிறையை முடிவேல் முடிக்கும்எமை
உடையான் வலச்செவியிலே
உறைவான் உரைப்பரிய ஒருதா ரகப்பிரம
உபதேசம் வைத்தகுருவே

சிகரா சலத்தில்உயர் திரிகூட வெற்பன்ஒரு
சிறுதேர் உருட்டிஅருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅரு ளே. 101

பணிகொண்ட தாரைகன் மணித்தேரும் அர்ச்சுனன்
பாழித் தடந்தேரு மே
பருவமும் செல்வதிலை ஒருபெருஞ் சேடனே
பரூஉச்சுடிகை நெற்றிமுற்றத்

தணிகொண்ட கல்லோல வரதமனோ கர்மேக
லாபார மணிநெடுந் தேர்
அன்றே நடக்குநில நின்றாதை நகைசெய்வ
தாழியொன்றாதவன் றேர்

கணிகொண்ட வையமும் காண்பதிற் கங்குலில்
காமன் கறங்குபொற் றேர்
காற்றேர்அ லாதில்லை மேல்தேர் உரைப்பதென்
கவனவாம் புரவியின் மேல்

திணிகொண்ட செல்வஉன் தேர்அலா தில்லையால்
சிறுதேர் உருட்டி அருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅரு ளே.

மருள்வந்த பிறவிக் கடற்படிந் துள்ஆசை
மகரம் புடைத்த டிப்ப
மாள்கின்ற சிற்றுயிர்க் குற்றிடத் துதவிசெய்
வருமரக் கலமேமுகந்

தருள்வந்த மெய்அன்பர் ஆர்வம் தழைக்கின்ற
அகநெக்கு நெக்குருகி னே
னாலுமுகன் நனவினுக் கெதிரிட் டுவட்டெறியும்
ஆனந்த மாப்பெருக் கே

பொருள்வந்த கடவுட் பழம்பாடல் ஏந்தும்ஒரு
பொன்மாளி கைக்குள்வைத்த
புன்னமணி விளக்கமே அநுபூதி தந்துபர
போகம்விளை கின்றவிளைவே

தெருள்வந்த மணிமன்றம் உடையவன் செல்வமே
சிறுதேர் உருட்டிஅருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅரு ளே.

திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று



உ

# பழனிப் பிள்ளைத்தமிழ்

## சின்னப்ப நாயக்கர்

### சிவனடியார் வணக்கம்

போற்றவருந் தென்பழனிப் புண்ணியவே
லாயுதன்மேற்
சாற்றரிய பிள்ளைத் தமிழ்கூற-நாற்றிசையும்
கண்டு வணங்குங் கணபதியின் றாதைதிருத்
தொண்டர்கண்மெய்ப் பாதந் துணை. 1

### நூல்

### 1. காப்புப் பருவம்

பூமேவு நூற்றிதழ்த் தாமரைத் தவிசில்வளர்
பூமங்கை புவிமங்கையும்
பூசித்த திருவாவி னன்குடித் தலைவனைப்
புகழ்பெற்ற கருணையானைத்

தேமேவு வெட்சியந் தாமனைக் குழகனைச்
சேயினைச் சிவன்மதலையைச்
செவ்வேளை வளர்பழனி நகரில்வரு சிவகிரித்
தேசிகனை யினிதுகாக்க

காமேவு முரசகே தனனுள மகிழ்ந்திடக்
காந்தாரி யீன்றெடுத்த
கவுரவர் பிரானிடந் தூதுபோய் மீண்டுவரு
கால்சிவந் திடமுன்னமோர்

பாமேவு கவிஞனுக் கருள்சுரந் தன்பினொடு
பாய்சுமந் தெய்த்துவந்து
பாலாழி மீதிலே யறிதுயி லமர்ந்தருள்
பசுந்துழாய்க் கரியமுகிலே. 2

வித்தக மிகுந்ததிறல் வேற்படை விசாகனை
விளங்குமோ காரவாசி
மேல்வந்த ராவுத்த னைச்சரவ ணத்தில்வரு
மெய்யான தனிநாதனை

உத்தமனை வெற்றியஞ் சேவலங் கொடிவிரு
துயர்த்தவனை யாறுமுகனை
உயர்பழனி நகரில்வரு சிவகிரியின் முருகனை
யுவந்தினிது மேற்புரக்க

மத்தளி வயிற்றிப முகத்தெம் பிரான்கதிர்கள்
மாறாத சுடர்களிருவர்
மலர்மங்கை மாரிருவர் சத்தமா தாக்களிம
வான்றரு மடந்தைமற்றைச்

சித்தர்வித் யாதர ரியக்கர்கின் னரர்முனிவர்
திசைமுகப் பிரமதேவர்
தேவர்கோன் முதலாய முப்பத்து முக்கோடி
தேவர்க்கு முதலாளியே. 3

வேறு

அயனரு மறைமுனி வரரம ரர்கடொழ
அருடரு மானிட மருவிசைப் பாட்டினள்
அமுதினு மினிதெனு நிலைதரு மொழிபெறும்
அழகுயர் வடிவின ளிளமுலைக் கோட்டினள்
அடியரை யனுதின மனதினி லினிதுற
அருள்பெற வளவிய விருவிழிச் சூட்டினள்
அறுசம யமுமொரு வழிபட நிலமிசை
அவரவர் பரவந லருடனைக் காட்டினள்

இயலிசை யுடனொரு சதுமறை சுதிதர
இதுநல மெனநட மிடுமுறைக் கூத்தினள்
இடியென வலறிய மயிடனை யுடல்பொடி
யெனவிடு படையின ளுலகினைக் காப்பவள்
இகபர மெனுமிரு தொழிலுடை யவளென
எவர்களு மறிதரு கருணையைப் பூட்டினள்
இடமுயர் வடகிரி யலமர வெதிர்வரும்
இமகிரி தருமொரு கவுரியைப் போற்றுதும்



கயமுக னுடனரி முகநிரு தனையொரு
கணமதில் விழவெகு சமரமிட் டார்த்திடு
களமிசை யலகைகள் கழுகுண நிணமருள்
கதிரொழு கியவயின் முருகனைக் கார்த்திகை
கனதன மொழுகிய பயநுகர் துகிர்நிற
அதரனை விதரண முடையனைச் சீர்ப்பிடி
கணவனை வனமகள் முலைமுக டுழுதருள்
புயமலை நிருபனை யறுமுகச் சேப்பனை

மயன்மகள் கலவியை மதுவினி லளியென
மனமுறு மிருபது புயனையட் டார்ப்புறு
மனுகுல முறையர சுரிமைகள் செயவரு
மணிநிற வரிமகிழ் மருகனைக் கோட்டிள
மதிதட வியநெடு மதின்முக டளவிய
வரிசையி னடமிடு பரதமெய்க் கூத்தின
மயிலின முலவிய பழனியில் வளர்சிவ
கிரிதனின் மருவிய குமரனைக் காக்கவே. 4

## 2. செங்கீரைப் பருவம்

வண்டாட நறவூறி மணமீறு மணிநீப
மாலையா டக்குழைகண்சேர்
மகரகுண் டலமாட வச்ரகே யூரமுடன்
மார்பிற்ப தக்கமாடக்

கொண்டாடு நெற்றியிற் சுட்டியா டக்கரிய
கொந்தளக் குஞ்சி யாடக்
கோலநெடு வான்முகடு தொடுகடற்
றிவலைபோற்
குறுவெயர் முகத்திலாடக்

கண்டாடு மதரங் குவிந்தாட மாற்றேறு
கனகத்தி ழைத்தவரைஞாண்
கதிர்விரித் தாடநவ மணியினாற் செய்தவிரு
காலிற்ச ங்கையாடத்

திண்டாடு மசுரரைக் கொல்லவரு தீரனே
செங்கீரை யாடியருளே
திருமருவு பழனிவளர் சிவகிரியின் முருகனே
செங்கீரை யாடியருளே. 5

பொற்றக டுரிஞ்சிய மணிக்கலச நீர்கொண்டு
புனலாட்டி யுச்சிமோந்து
புல்லிவா யதரமு முந்திசெவி நாசியிற்
புனலேறி டாமலூதிப்

பற்றிய நிலப்பொட்டு நெற்றிமிசை யிட்டழகு
பாரித்த பட்டாடையாற்
பண்புறைய வீரம் புலர்த்திநவ மணியிட்ட
பருமணிச் சுட்டிகட்டி

நற்றமிழின் முனிபரவு குருவென்று தாலாட்டி
நறுவசம் பூறலூட்டி
நற்றாயி னிளமுலைப் பாலமுத மூட்டியிள
நலநிலவு போல்விளங்கச்

சிற்றிடைச் செவிலிய ரழைத்துவகை கூரவே
செங்கீரை யாடியருளே
திருமருவு பழனிவளர் சிவகிரியின் முருகனே
செங்கீரை யாடியருளே. 6

புன்னையந் தாதுறு மலர்க்காவி லஞ்சிறைய
பொறிவண்டு மகரந்தமார்
பூமணந் தன்னையுண் டின்னிசை முழக்கவம்
போருகத் தடைகிடக்கும்

மின்னிறப் பேட்டனந் தனதுசினை யென்றுபோய்
வெள்வளையின் முத்தெடுத்து
மெல்லணை கிடத்தியே சிறகிட்ட ணைத்திடவும்
மேதியின் கன்றுதுள்ளிக்

கன்னலைச் சாடிவிளை யாடவுந் தோகைகார்
கண்டுநட னம்புரியவும்
கண்டுபழ னத்துழல் பானண்டு நன்றெனுங்
கயறாவி யெதிரேறிடும்

செந்நெல்சூ ழாறுமுக நதியுடைய வள்ளலே
செங்கீரை யாடியருளே
திருமருவு பழனிவளர் சிவகிரியின் முருகனே
செங்கீரை யாடியருளே. 7



## 3. தாலப் பருவம்

கங்கைக் கொருமா மகனே குகனே
கனியே கண்மணியே
கருணா லயமே மறையோர் தவமே
கருதும் பெருவாழ்வே
திங்கட் சடிலன் மகிழுங் குருவே
தேவர்கள் பணிகோவே
தெய்வச் சுருதிப் பொருளே பொருளின்
றெளிவே களிகூரும்

துங்கப் புயனேர் திருமான் மருகா
சோதிச் சுடரொளியே
தோகைக் குடையாய் நீபத் தொடையாய்
சொல்லுக் கினியானே
சங்கத் தொருவா பழனித் தலைவா
தாலோ தாலேலோ
தமிழா லுயருஞ் சிவமா மலையாய்
தாலோ தாலேலோ. 8

வேறு

குவளைக் கருங்கட் கடைசியர்கள்
குடித்துக் களித்துக் கள்விலைக்குக்
குவையல் குவைய லாக்குவித்துக்
கூட்டி மணிநித் திலமளந்த

பவள வள்ளந் தனையிடுக்கிப்
பரிவி னுடனே குரவைபல
பாடு மிசையான் மள்ளர்குழாம்
பகட்டுக் கழுத்திற் பரம்பிணக்கித்

துவள வுழுத கருஞ்சேற்றிற்
றுலங்க விளைந்த செஞ்சாலித்
தொகையுங் கரும்பு முத்தீனச்
சோதிப் பிறைபோற் பணைகடொறுந்

தவளங் கொழிக்குந் திருப்பழனித்
தலைவா தாலோ தாலேலோ
சைவந் தழைக்கப் பிறந்தருளுஞ்
சதுரா தாலோ தாலேலோ. 9

### வேறு

தகரிற் பரியினின் மயின்மிசை பவனிகள்
வருவாய் தாலேலோ
சதுரிற் றுறைபல நிறுவிய மறைதொழு
சரணா தாலேலோ

புகரைக் குருவெனு நிருதரை விறல்கொளு
நிபுணா தாலேலோ
புதனைப் பெறுமதி நிலவிய சடையினன்
மதலாய் தாலேலோ

குகனைத் துணையெனு மரிமன மகிழ்தரு
மருகா தாலேலோ
குலவிப் பலபல திசையினு மிசைபெறு
குமரா தாலேலோ

பகரற் கரியன பொருடமிழ் முனிபெற
வருள்வாய் தாலேலோ
பழனிப் பதிவளர் சிவகிரி மருவிய
முருகா தாலேலோ. 10

## 4. சப்பாணிப் பருவம்

அரியமறை முடியிலுறை யுபநிடத நிலைதெரியும்
அந்தணர்க ளாசிகொட்ட
ஆவலங் கொட்டநின் றயிராணி கேள்வன்முத
லமரருள முவகைகொட்டப்

பெரியநா யகியெனு முமைத்தாய் மகிழ்ச்சியொடு
பேரின்ப முறுவல்கொட்டப்
பேறான கலைமங்கை மகதியா ழிசையொடும்
பேர்பெற்ற மொழிகள் கொட்ட

உரியமதி வெண்குடைச் சிலைவேள் பணிந்துநின்
றோங்கியே துதிகள்கொட்ட
உன்மத்த ரானகயி லாசபதி முத்தமிட்
டுன்னைவாழ்த் தொலிகள்கொட்டத்

தரியலர்க ளெனுமவுணர் நெஞ்சுபறை கொட்டவே
சப்பாணி கொட்டியருளே
சதுமறைகள் பரவவரு பழனிமலை முருகனே
சப்பாணி கொட்டியருளே. 11



நெடுவரைகள் புடைபரவு வடகிரியு மிமமலையும்
நெறுநெறென வயிரமிட்ட
நிகளத்தை மெட்டி மெட்டிப்பொடி
படுத்தியொரு
நினைவுகொண் டார்த்தெழுந்து
நிலைபெற்ற கந்ததனை வேரொடு மிடந்துமத
நீர்வழிந் தொழுகவெற்றி
நீள்புழைக் கையதனில் வச்சிரத் தாற்செய்த
நெடியசங் கிலியையேந்திப்

படவரவி னெடுமுதுகி னிடைபரவு புடவிகிழி
படவுமிரு கோட்டிலெற்றிப்
பாய்ந்துதன் னிழலைச் சுளித்துமேற்
கொண்டுவரு
பாகனைச் சீறியுதறிப்
பரிதியைக் கனியென்று மேக்குயரு மதிதனைப
பாற்கவள மென்றுதாவிப்
பகிரண்ட கூடத்தை யெட்டிமைக் காரினைப்
பற்றிப் பிடித்துவாரிக்

குடகுடென வேநீரை மொண்டுண்டு கடலிற்
குளித்தழன் றுன்னைமுதுகிற்
கும்பத் தலத்திலிட் டெண்டிசைக ளெங்குங்
குலாவியசு ரப்படையெலாம்
கொன்றுழக் கிச்சென்று திருநீறி டாச்சமணர்
குடர்தனைச் சிதறியமரர்
கூட்டமிடு மினியகற் பகநிழலி லேநின்று
கோபந் தணிந்தறிவுசேர்

தடவிகட நால்வாய் மருப்புப் பருப்பதத்
தந்தியயி ராவதமுதற்
றந்தியெட் டுந்தாங்கு முலகைவல மாகவே
தான்வந்து சிவன்மார்பினிற்
சாய்ந்துகைக் கனியினைத் தாவென்று கேட்டிடத்
தந்தோ மெனக்கொடுப்பத்
தயவினுட னேகொள்ளு மீராறு கையினாற்
சப்பாணி கொட்டியருளே
சதுமறைகள் பரவவரு பழனிமலை முருகனே
சப்பாணி கொட்டியருளே. 12

### வேறு

நறைகம ழிதணிற் கவணெறி பவள்பா
 னட்பு மிகுத்தோனே
 நலமலி கருணைச் சிவனுமை புதல்வா
 நற்றவர் மெய்ப்பேறே

பிறைமிலை சடிலற் குரையருள் துரையே
 பெற்றி படைத்தோனே
 பெருமலை யெனவுற் றருண்மயி லுடையாய்
 பெட்புயர் வித்தாரா

விறன்மிகு மசுரர்க் குறுபகை யுடையாய்
 வெற்றி நிறைத்தோனே
 விகசித கமலத் திருமகள் மருகா
 வெட்சி மலர்த்தாமா

குறுமுனி பரவத் தமிழுரை பகர்வோய்
 கொட்டுக சப்பாணி
 குலவிய பழனிச் சிவகிரி முருகா
 கொட்டுக சப்பாணி. 13

## 5. முத்தப் பருவம்

மாலிடந் தனின்மேவு முத்துமுயர் வாரண
 மருப்பிற் பிறந்தமுத்தும்
 மங்கையர் கழுத்துமுத் துஞ்சாலி தன்னிடம்
 வகைபெற விளைந்தமுத்தும்

கோலமிகு கன்னற் கணுக்கடொறு மேவெண்மை
 குன்றாது தோன்றுமுத்தும்
 கோகனக முத்துமிப் பியின்முத்து மேலான
 குருநிறச் சங்குமுத்தும்

சாலவே வரையினுங் கடலினுஞ் சேற்றினுந்
 தரையினும் வானிடத்தும்
 தானுலைந் துடைபட்டு விலைபடுவ
 வாகையாற்
 சரியென்ப தில்லையதனாற்



பால்மணங் கமழ்தரத் தேன்வழிந் தொழுகுநின்
 பவளவாய் முத்தமருளே
 பழனிவளர் சிவகிரியில் மருவுகுரு தேசிகன்
 பவளவாய் முத்தமருளே. 14

தந்தா வளக்கும்ப மதயானை யெட்டுமே
 தாங்கிய நெடும்புவனமேற்
 சக்ரவா ளத்தையொன் றாய்ச்சுற்றி வெள்ளிமலை
 தன்னைவல மாகவந்து

பிந்தாம லண்டச் சுவர்க்கோடு மட்டினும்
 பெரிதுசென் றிரவிமதியைப்
 பின்னிடப் பாய்கின்ற கோளரவின் வாயைப்
 பிளந்தும்ப ரூரைநாடி

மந்தார வனமீ துளைந்துதூன் முதிர்கொண்டல்
 மந்தார நிலைகண்டுதன்
 வன்சிறை விரித்தாடி யல்லோல கல்லோல
 மகரநீ ரேழுழக்கும்

பைந்தோகை யம்பரியி லேறிவரு சேவகன்
 பவளவாய் முத்தமருளே
 பழனிவளர் சிவகிரியின் மருவுகுரு தேசிகன்
 பவளவாய் முத்தமருளே. 15

### வேறு

கன்னங் கறுத்த குழல்செருகிக்
 கடைசி மடவார் கழனிதொறும்
 கதித்து விளைந்த செஞ்சாலிக்
 கதிரை யரிவாள் கொடுகொய்து

சின்னஞ் சிறிய விடைதுவளச்
 சென்று வரம்பின் கரையருகிற்
 செல்லு மளவிற் பசுஞ்சோலைத்
 தேமாங் கனியை யுதிர்த்தெழுந்து

பொன்னி னிறத்த கதலிநறும்
 பூவைக் கனியைச் சிதறிமுனம்
 பொருந்தி வரும்வா னரங்களிவர்
 பொருமு முலையை யிளநீரென்

றுன்னித் தாவிப் பிடித்திடுநா
றாரா முத்தந் தருகவே
உயரும் பழனிச் சிவகிரிவா
யுறைவாய் முத்தந் தருகவே. 16

## 6. வருகைப் பருவம்

கந்தா வருக கயவனிதை
கணவா வருக வனமடந்தை
காந்தா வருக விரைகொழிக்குங்
கடம்பா வருக கடவுளர்கள்

சிந்தா குலங்க டவிர்க்கவந்த
சேயே வருக மறைதுதிக்கும்
தேவே வருக பெரியவுமை
செல்வா வருக செகத்திலின்பம்

தந்தாய் வருக தவம்புரிவோர்
தவமே வருக வைகாவூர்த்
தலைவா வருக வோராறு
சமயா வருக சரவணத்தில்

வந்தாய் வருக சிவனருள்கண்
மணியே வருக வருகவே
வளஞ்சேர் பழனிச் சிவகிரிவாழ்
வடிவேன் முருகா வருகவே. 17

சீரார் நலஞ்சேர் பூவுலகிற்
றேவா சுரரின் மற்றையரிற்
றினமு முனது கொலுக்காணச்
செல்லா தாரார் திறைவளங்கள்

தாரா தாரா ருனதுபதந்
தனையே வணங்கித் தொழவ்வண்டித்
தழுவா தாரா ரெவ்வேளை
சமயங் கிடைக்கு மெனநினைந்து

வாரா தாரா ருனதருளை
வாழ்த்திப் புகழ்ந்து துதிக்கமனம்



வசியா தாரார் பணிவிடைகள்
வரிசைப் படியே நடத்தாதார்

ஆரா ரெனத்தா லாட்டுகின்ற
வரசே வருக வருகவே
அருள்சேர் பழனிச் சிவகிரிவா
ழையா வருக வருகவே. 18

பொன்னே வருக பொன்னரைஞாண்
பூட்ட வருக சிறுசதங்கை
புனைய வருக மணிப்பதக்கம்
பூண வருக தவழ்ந்தோடி

முன்னே வருக செவிலியர்கண்
முகத்தோ டணைத்துச் சீராட்டி
முத்த மிடற்கு வருகவெதிர்
மொழிகண் மழலை சொலவருக

தன்னே ரில்லா நுதற்றிலதந்
தரிக்க வருக விழியினின்மை
சாத்த வருக மேலாகத்
தானே வருக தேவர்தொழு

மன்னே வருக மாமாலின்
மருகா வருக வருகவே
வளஞ்சேர் பழனிச் சிவகிரிவாழ்
வடிவேன் முருகா வருகவே. 19

## 7. அம்புலிப் பருவம்

மாகமுயர் சந்த்ரனீ தெய்வவா ரணவனிதை
மகிழுஞ்சு சந்த்ர னிவனாம்
மதிசேர் மதிப்பிள்ளை நீயிவன் சிவன்மனது
மகிழ்சம் மதிப்பிள்ளைநீ

தேகவொளி மீறியகு பேரனிவன் மலைவந்து
தெண்டனிட விலகுபேரன்
திருமருவு மிருகோட் டிளம்பிறை நீயெழில்
சேர்ந்தருள் கடம்பிறையிவன்

பாகமுயர் கின்றவெண் சசியுநீ பொன்னாடர்
பரவுசசி மருகனிவனாம்
பார்மீது புகழ்பெற்ற சோதிநீ யிவனும்
பரஞ்சோதி வடிவனாகும்

ஆகையா லிவனுநீ யுஞ்சரிச மானமே
யம்புலீ யாடவாவே
அருள்பரவு பழனிவளர் சிவகிரியின் முருகனுட
னம்புலீ யாடவாவே. 20

ஓதரிய கலைகள்பதி னாறுமாத் திரமுனக்
குண்டுகலை யறுபத்துநான்
குடையனிவ னோரூர னீயிவனு நூறூரன்
உன்றிகிரி யிரவுசெல்லும்

சேதிபெற வேயிவன் றிகிரியெப் போதுமே
செல்லுமிது வல்லாமலே
தேய்வதுஞ் சிறிதுநாள் வளர்வது முனக்குண்டு
சிந்தையி லிவன்பதத்தைப்

போதுகொ டருச்சித்த பேர்களுந் தேய்வுறார்
பொல்லாத மறுவுடையனீ
பூமிவா னகமுள்ள கடவுளரின் மறுவிலாப்
புனிதனிவ னாகுமென்பார்

ஆதலா லிவனுனக் கதிகனா மென்றிவனொ
டம்புலீ யாடவாவே
அருள்பரவு பழனிவளர் சிவகிரியின் முருகனுட
னம்புலீ யாடவாவே. 21

வானிடை வழிக்கொண்டு நீசெல்லு மளவைதனின்
மாசுணப் பகைதொடருமம்
மாசுணப் பகையைத் துரத்தவிவ னேறிவரு
மயிலின் சகாயமுண்டு

கூனினைத் தீர்த்தினிய கூடலார் கோமான்
குளிர்ந்திடச் செய்தவிவனின்
கூனைத் தவிர்ப்பனீ வரவேணு மிவனிடங்
குறுகினாற் பலனுமுண்டாம்



நானினஞ் சொல்வதேன் வாராத போதிலுனை
நாடிப் பிடித்துலர்த்தி
நனிவீர பத்திரன் றேய்த்ததென வேவூன
நல்காத வண்ண மேசென்

றானிடையின் மருவுவா னுபதேச குருவினுட
னம்புலீ யாடவாவே
அருள்பரவு பழனிவளர் சிவகிரியின் முருகனுட
னம்புலீ யாடவாவே. 22

## 8. சிறுபறைப் பருவம்

ஐவகை யிலக்கணமு மைங்காவி யத்துறையு
மாராய்ந்து பாகமுறையால்
ஆசுமது ரஞ்சித்ர வித்தார முஞ்சொலு
மருங்கவிஞர் துதிமுழக்க

மெய்வருந் தவமுனிவர் முள்ளரைய நெடுநாள
வெண்ணளின வாதனத்தின்
மேவுநா மகள்கொழுந னுடன்வந்து தானின்று
வேதவொலி யேமுழக்கக்

கைவரும் வழியிலே மனதுவர மனதின்வழி
கண்வரத் தந்திமீட்டும்
கந்தருவர் வீணையிசை யாழிசை முழக்கவான்
கடவுளர்கண் மலர்கள்பெய்து

தெய்வதுந் துமியொடு வலம்புரி முழக்கநீ
சிறுபறை முழக்கியருளே
திருவாவி னன்குடிப் பழனிமலை முருகனே
சிறுபறை முழக்கியருளே. 23

கார்கொண்ட தண்டலை நெருக்கத்தி லிளமஞ்ஞை
கவினுலவு தோகையுதறிக்
கண்ணுறச் சிறைவிரித் தாடவிள மாந்தளிர்
கறித்துமென் குயில்கள்பாடத்

தார்கொண்ட வஞ்சிறைப் பாட்டளிக ளொருகோடி
தாதுண்டு பண்ணிசைகொளத்
தாழுங் குடக்கனி யுதிர்க்கின்ற சூன்மந்தி
தண்கமுகின் மீதிலேறும்

ஏர்கொண்ட பழனத்தி லாலைவாய்ப் பாலடு
மிளங்கோல மள்ளர்மடவார்
இசையினாற் குரவைகண் முழக்கவே மருதநில
மெங்குமுயர் வளமைவீறும்

சீர்கொண்ட தருமவை காபுரிக் கிறைவனே
சிறுபறை முழக்கியருளே
திருவாவி னன்குடிப் பழனிமலை முருகனே
சிறுபறை முழக்கியருளே. 24

வேறு

குசைகொடு மறையோர்தொழவருள் புரிவோய்
குணதர வித்தகனே
குலவிய புகழ்சேர் பெரியவள் புதல்வா
குடவயி றற்கிளையாய்

புசபல முடனே வருமசு ரரையே
பொருத திறற்படையாய்
புதமிகு பொதியா சலமுனி பணிவோய்
புதுமை மிகுத்தவனே

இசைபெறு மதுரா புரிவரு புலவோ
னிசையை வளர்ப்பவனே
இமையவர் பதிமான் மகளிரை மகிழ்வோய்
எழில்பெறு கட்டழகா

திசைமுகன் முதலோர் பரவிய குழகா
சிறுபறை கொட்டுகவே
சிவகிரி முருகா குருபர குமரா
சிறுபறை கொட்டுகவே. 25

## 9. சிற்றிற் பருவம்

பருமுத் தரிசி தனையாய்ந்து
பசுந்தே னதனை வடித்தெடுத்துப்
பவழக் குடத்தி லுலையேற்றிப்
பரிவு தரும்பாற் சோறாக்கி



ஒருமைப் படியே பூந்தளிரை
ஒன்றாய்ப் பறித்துக் கறிசமைத்தே
உண்ணும் படிக்கிங் குபசரிக்கும்
உரிமைப் பருவத் திளங்கோதைப்

பெருமை மடவார் நாங்களின்று
பிரியத் துடனே வெண்பளிங்காற்
பிரிய வகைக்குக் கட்டுவித்த
பெரிய மனையெம் மனையுன்றன்

அருமைச் சிறுகிண் கிணிக்காலால்
ஐயா சிற்றி லழியேலே
அமலா பழனிச் சிவகிரிவாழ்
அரசே சிற்றி லழியேலே. 26

களப முலைகள் புடைத்தெழுந்த
காலப் பருவத் துனைநினைப்போம்
கட்டி யணைத்துச் சிவனருளும்
கனியே யென்று வாழ்த்தல்செய்வோம்

பிளவு மிலையும் பகிர்ந்துனது
பேரைப் பாடித் துதிசெய்வோம்
பிரியத் துடனே யருகிருத்திப்
பிரசத் துடனே யமுதளிப்போம்

பழகி யிருந்து மெங்கண்முகம்
பாரா திருக்க வழக்குண்டோ
பாத மலர்கள் சிறுமணலின்
பரல்பட் டழுந்திச் சிவந்திடுமே

அழகு துரையே வைகாவூர்க்
கதிபா சிற்றி லழியேலே
அமலா பழனிச் சிவகிரிவாழ்
அரசே சிற்றி லழியேலே. 27

உம்பர்க் கிடர்செய் துலகனைத்தும்
ஒன்றாய்த் தனது வசப்படுத்தி
ஒருமை தவறிக் கடுங்கொடுங்கோல்
ஓச்சி நிருதர் புடைசூழ

வம்பத் தனமே மேற்கொண்ட
வலிசேர் சூரன் மனையிதன்று
மதுரைப் பதியி லரசுபுரி
மாற னறியக் கழுவேறும்

தம்பச் சமணர் மனையன்று
தமியேம் யாங்கண் மெய்வருந்தித்
தங்கத் தகட்டாற் செய்தமனை
தானே யறிந்து மறியார்போல்

அம்பொற் றிருந்தா மரைப்பதத்தால்
ஐயா சிற்றில் சிதையேலே
அமலா பழனிச் சிவகிரிவாழ்
அரசே சிற்றி லழியேலே. 28

## 10. சிறுதேர்ப் பருவம்

இந்திரன் குடைபிடித் திடவழற் கடவுள்வந்
தெதிர்நின்று விசிறிவீச
இயமனுட னிருதிவெண் சாமரைகண் முறைமுறை
யிரட்டவரு ணன்வாயுவும்

சந்திரனு முடைவாளை யேந்திநின் றிருபுறந்
தாநிற்ப வளகைவேந்தன்
தயவினொடு காளாஞ்சி யேந்தவீ சானனிது
சரியென்று முறுவல்கூர

மந்திரப் புனல்கொண்டருச்சித்து வேதன்முதல்
மறைமுனிவர் துதிகள்செய்ய
வானகத் தமரர்நறு மலர்பெய்ய மழகதிர்
மறைத்தகார் மழைகள் பெய்யச்

சிந்தனை மகிழ்ந்துநவ மணியினா லொளிர்கின்ற
சிறுதே ருருட்டியருளே
தென்பழனி நகரிவரு சிவகிரியின் முத்தையன்
சிறுதே ருருட்டியருளே. 9

பன்றிமலை பூம்புரை யிடும்பன்மலை யீராறு
பள்ளியா றாறுவேதம்



பரவுமங் கலமெட்டு நூறாரு மேயிசை
படைத்தவை காபுரியினும்

குன்றிடத் தும்பரங் கிரிசெந்தி லாவினன்
குடியே ரகத்தைமுதலாய்க்
குளிர்வளஞ் சேர்சோலை மலையிடத் தும்பரவு
கொள்கையா லுஞ்சுடர்விடும்

வென்றிவேல் கையிற் றரித்தலா லுஞ்சேவல்
விருதுதுச மேவலாலும்
மேலான தெய்வநீ யாமென்று போற்றியுனை
வேண்டிநின் றமரர்வாழ்த்தத்

தென்றல்வரை முனிபரவு மெய்ஞ்ஞான தேசிகன்
சிறுதே ருருட்டியருளே
தென்பழனி நகரிவரு சிவகிரியின் முத்தையன்
சிறுதே ருருட்டியருளே. 30

சொல்லரிய பொன்னுருளை சேர்த்துவயி ரத்தினாற்
சோதிபெறு மச்சிணக்கித்
துய்யகோ மேதகப் பலகையிடை சேர்த்தியே
துலங்குபோ திகைதிருத்தி

நல்லபுது வைடூரி யத்தினால் வேய்ந்தொளிரு
நவமணி குயிற்றியருண
நல்குபவ ழக்கால்க ணாட்டிநீ லச்சட்ட
நாற்பாங்கு மேநிறைத்து

மல்லுலவு தலையலங் காரமுஞ் செய்துநிறை
வரிசையி லலங்கரித்து
மாமேரு கிரிபோல் விளங்கமே லானநின்
மாமனா ரான கருணைச்

செல்வரா மெழில்விசய கோபாலர் வரவிட்ட
சிறுதே ருருட்டியருளே
தென்பழனி நகரிவரு சிவகிரியின் முத்தையன்
சிறுதே ருருட்டியருளே. 31

பழனிப் பிள்ளைத்தமிழ் முற்றிற்று